காலை வேளையில்

# நாள் முழுவதும்



விளையாடிய பின்

# புத்துணர்ச்சி



இரவில்

# அளிக்க...





குளுமையான, நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு தேர்ந்தெடுத்த வாசனைப் பௌடர்கள்



ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ண நிலைகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.

HBP. 7-X30 TM [illegible] இந்தியாவில் தயாரித்தவை

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 இதழ் 6 | 1953 செப்டம்பர் 6 | விஜய ஆவணி 21உ

| | | |
|---|---|---|
| ஆந்திர மாகாணத்துக்கு ஆசி | ... | 3 |
| யார் சிருஷ்டித்த பஞ்சம்? | ... | 4 |
| முதல் வரவேற்பு | (கார்ட்டூன்) | 4 |
| ஜெயப்பிரகாஷ் விஜயம் | ... | 5 |
| புது டில்லியில் தமிழ்த் திருவிழா | நமது விசேஷ நிருபர் | 6 |
| பொன்னியின் செல்வன் | கல்கி | 9 |
| சுதந்திர இந்தியாவில் என் அனுபவங்கள் | கே. நடராஜன் | 18 |
| கசப்பும் இனிப்பும் | கிரி | 21 |
| இளவரசி பிரபா (பாப்பா மலர்) | சீதா | 26 |
| கதவு திறந்தது! | துரோணன் | 28 |
| அவன் நண்பன் | பூவை | 33 |
| மைதிலியின் கல்யாணம் | சௌம்ய நாராயணன் | 37 |
| மனோரமா | ரமண்லால் வஸந்தலால் தேசாய் - ரா.வீ. | 43 |
| சிலையும் சேலையும் | சுபஸ்ரீ | 51 |
| சுதந்திரமற்ற குடியரசு | ஜெயமணி | 57 |
| வாழ்க்கையே தியாகம் | நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர் | 61 |
| யோகாசன சிகிச்சை | வி. என். குமாரசுவாமி | 67 |
| வெய்யிலும் நிழலும் | ஆர். எஸ். ஞானம்பாள் | 69 |

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

தி பாவுஸேரி பெனிபிட் சிட் பண்டு லிட்.
(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 · மதராஸ்-5
தந்தி: 'EVERMENS' .... போன்: 85834



| | ஒரு மாதச் சந்தா | சீட்டின் மதிப்பு |
|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1250/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- |
| E | ரூ. 20/- | ரூ. 500/- |
| F | ரூ. 15/- | ரூ. 375/- |
| G | ரூ. 10/- | ரூ. 250/- |

25 மாதங்கள் — 25 மெம்பர்கள்

வாழ்க்கையில் வதைக்கும் முட்களைக் களைந்தெறிய நம் முன்னோர்கள் நமக்குக் காட்டிச் சென்ற வழி — சீட்டு முறையே.

இருண்ட எதிர்கால சூழ்நிலை எதிர்த்து நிற்கையில் எண்ணிறந்த மக்களுக்கு உவகையூட்டி இன்பம் தந்து வரும்

எங்கள் மாதாந்திர சீட்டு வகைகள்

அகில இந்திய புகழ் செப்டம்பர் மாத சீட்டு வரிசை

| சேரக் கடைசி தேதி | 2-வது வெள்ளி | முதல் ஏலத் தேதி |
|---|---|---|
| 10—9—53 | ஏலங்கள் | 11—9—53 |

ரூ. 25க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்குகளின் செக் பெற்றுக்கொள்ளப்படும். அதற்குக் குறைந்த தொகைகளை மணியார்டர் அல்லது இந்தியன் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பலாம். வேண்டுவோருக்கு இலவசமாக நிபந்தனைகளும் விண்ணப்ப பாரங்களும் அனுப்பப்படும். ஏஜண்டுகள் சேர்ப்பதற்கு உங்களுக்குப் பயிற்சி அளிக்கிறோம்.

ஆபீஸ் நேரம்: காலை: 9-1 மணி. மாலை: 2-6 மணி.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

நூற்றுக்கு நூறு
இனிய தமிழ் கேட்க வேண்டுமானல்
நூற்றுக்கு நூறு
இனிய தமிழிசை கேட்க வேண்டுமானல்
ஜெமினி ஔவையாரை 'த்தான்
சொல்ல வேண்டும்.

—ரா. பி. சேதுப் பிள்ளை
தமிழ்ப் பேராசிரியர்
சென்னை பல்கலைக் கழகம்



# ஜெமினியின்
# ஔவையார்

இப்பொழுது ௫௦ தியேட்டர்களில்







# ஆந்திர மாகாணத்துக்கு ஆசி

**பு**திய ஆந்திர மாகாணம் ஏற்படுவதற்கு முழுசாக இன்னும் மூன்றே வாரங்கள்தான் இருக்கின்றன.

வரப்போகும் அக்டோபர் மாதம் முதல் தேதி வியாழக்கிழமை ஆந்திர மாகாணம் சிருஷ்டிக்கப்பட்டு விடும்.

இனி அது சிருஷ்டியாவதைத் தடுக்கும்!சக்தி ஆந்திர கேசரிகளுக்குக்கூட இல்லை!

பல மாதங்களுக்கு முன்பே ஆந்திர மாகாணம் உருவாகி இருக்கக் ·கூடும். ஆனால், பிரபல ஆந்திரத் தலைவர்கள் "ஆந்திர மாகாணம் உடனே நிறுவப்பட வேண்டும்" என்று கூறிக்கொண்டே, மேற்படி மாகாணம் ஏற்படுவதற்கு முட்டுக் கட்டையாக இருந்து வந்தார்கள்.

அதெல்லாம் இப்போது பழம் கதையாகி விட்டது.

அக்டோபர் மாதம் முதல் தேதி ஆந்திர மாகாணம் ஏற்படுவதற்கு இந்தியா பார்லிமெண்டும் ததாஸ்து கூறிவிட்டது.

புதிதாக அமையப் போகும் மாகாணத்துக்குப் பார்லிமெண்டு அங்கத்தினர்கள் ஆசி கூறினார்கள். இனிமேல் பழைய வாக்கு வாதங்களையும் மனக் கசப்பையும் அறவே மறந்துவிட வேண்டும் என்றார்கள்; சௌஜன்யத்துடன், ஒற்றுமையுடன், ஒத்துழைப்பு மனப்பான்மையுடன் புதிய மாகாண நிர்வாகத்தைத் தொடங்க வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார்கள்.

ஆந்திரப் பிரமுகர்களின் காரசாரமான பேச்சுகள் இப்போது மிகவும் குறைந்து விட்டன. எனவே, பார்லிமெண்டு அங்கத்தினர்களின் கோரிக்கையும், முக்கியமாக, இந்தியா உள்நாட்டு மந்திரி டாக்டர் கே. என். கட்ஜுவின் நல் வார்த்தைகளும் ஆந்திர சகோதரர்களின் செவிகளில் ஏறும்படியான சூழ்நிலை உண்டாகி யிருக்கிறது என்றே எண்ணுகிறோம்.

புதிய மாகாண நிர்வாகத்தை ஏற்று நடத்தப் போகும் ஆந்திர மக்களுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

* * * *

**பா**ர்லிமெண்டிலே புதிய ஆந்திர மாகாண மசோதாவைப் பற்றிய விவாதத்தின் முடிவில் டாக்டர் கட்ஜு ஒரு முக்கிய விஷயத்தை அறிவித்தார்.

சீக்கிரத்தில் அகில இந்தியா எல்லைக் கமிஷன் நியமிக்கப்படும்; இந்தியா முழுவதும் பாஷாவாரி மாகாணப் பிரச்னையை அது பரிசீலனை செய்யும் என்று ஸ்ரீ கட்ஜு உறுதி கூறினார். அவர் அளித்த வாக்குறுதியின் பலனாக, மற்ற இடங்களில் எழுந்துள்ள பாஷாவாரி மாகாணக் கூக்குரல்கள் தற்காலிகமாக ஓயும் என நம்பலாம்.

பார்லிமெண்டில் சென்றவாரம் பேசிய இரண்டொரு பிரமுகர்கள், பாஷாவாரி மாகாணப் பிரிவினை சம்பந்தமாகப் பல ஆண்டுகளுக்கு முன் காங்கிரஸ் அளித்த வாக்குறுதியைச் சுட்டிக் காட்டினார்கள்.

பாஷாவாரி மாகாணப் பிரிவினை அவசியமா? அவசியம் இல்லையா?—இந்தக் கேள்வி இப்போது முக்கியமானது அல்ல. பாஷாவாரி மாகாணப் பிரிவினை அவசரமா என்பது பற்றித்தான் யோசிக்க வேண்டும்.

சுதந்திர இந்தியா உடனடியாகச் சமாளிக்க வேண்டிய எத்தனையோ அவசரமான பிரச்னைகள் இருக்கின்றன.

இரண்டாயிரம் கோடி ரூபாய் செலவினங்கள் அடங்கி யிருக்கும் ஐந்து வருஷ ஆக்கத் திட்டங்கள் நிறைவேற வேண்டும். சுதந்திர இந்தியாவின் இன்னல்கள் தீர்ந்து சுபிட்ச வாழ்வு ஏற்படுவது, அத்திட்டங்கள் யாதொரு இடையூறுமின்றித் துரிதமாக நிறைவேறுவதையே பொறுத்திருக்கிறது.

இந்த நிலைமையில், புதிய செலவுக்கும் புதிய பிரச்னைகளுக்கும் மூல காரணமாக இருக்கும் பாஷாவாரி மாகாணப் பிரிவினை அவசரமானதா என்பதை யாவரும் உன்னிப் பார்க்க வேண்டும்.

# யார் சிருஷ்டித்த பஞ்சம்?

இரண்டாவது உலக மகாயுத்தம் ஆரம்பமானபோது பலர் பலவிதமான நெருக்கடிகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. இந்தியாவில் உள்ள காப்பித் தோட்ட முதலாளிகளும் அவர்களுடைய வியாபாரத்தைப் பாதித்த நெருக்கடியைத் தீர்த்துக் கொள்ளும்படி நேரிட்டது.

அப்போது இந்தியாவில் உற்பத்தியான காப்பிக் கொட்டையில் ஐம்பது சத விகிதம்தான் இந்தியாவுக்குத் தேவையாக இருந்தது. மீதியை உற்பத்தியாளர்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்ததன் மூலம் லாபம் பெற்று வந்தார்கள். யுத்தம் மூண்டதால் ஏற்றுமதி தடைப்பட்டு, காப்பிக் கொட்டை இந்நாட்டில் அபரிமிதமாகத் தேங்கி விட்டது. அப்போது காப்பித் தோட்ட முதலாளிகளிடையே எழுந்த கூக்குரல் காரணமாகச் சர்க்கார், காப்பி போர்டு ஒன்றை நியமித்தார்கள்.

காப்பிக் கொட்டையின் விலையை நியாயமான முறையில் நிர்ணயித்தல், ஜனங்களின் தேவைக்குச் செலவானது போக உபரியாக இருக்கும் காப்பிக் கொட்டையைச் சேகரித்து உள்நாட்டில் தேக்கம் ஏற்படாமல் தடுத்தல், — இவைதான் காப்பி போர்டின் முக்கிய கடமையாகும்.

காப்பித் தோட்ட முதலாளிகளின் நலன்களைப் பாதுகாக்கும் விஷயத்தில் காப்பி போர்டார் தங்கள் கடமையை நிறைவேற்றி வந்திருக்கிறார்கள். ஆனால் பொது ஜனங்களின் சக்தியை அனுசரித்து நியாயமான விலையை நிர்ணயிக்கும் விஷயத்தில் அவர்கள் தங்கள் கடமையை நிறைவேற்றத் தவறி விட்டார்கள். இல்லாவிடில் காப்பிக் கொட்டை விலை பத்து வருஷங்களுக்கு முன் இருந்ததைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாகி, காப்பிக் கொட்டைப் பஞ்சம் ஏற்பட்டிருக்குமா!

அப்போது இருந்ததைக் காட்டிலும் இப்போது காப்பிக்கொட்டை உற்பத்தி அதிகமாகியிருக்கிறது. உற்பத்தியில் பாதிக்கு மேல் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் நிலைமையில் உள்ள ஒரு சரக்கின் விலை இவ்விதம் ஏறுவானேன்? அவ்விதம் ஏறுவதைத் தடுக்கும் சக்தி போர்டுக்கு இல்லையெனில், அதைத் தடுக்க வேண்டிய பொறுப்பு சர்க்காரைச் சேர்ந்தது அல்லவா!

பல வருஷங்கள் அவகாசம் அளித்தும் கூடத் தோட்ட முதலாளிகளோ, காப்பி போர்டோ விலைகளை நியாயமான அளவுக்குக் கொண்டு வரவில்லை. எனவே சர்க்கார் காப்பிக்கொட்டை ஏற்றுமதியைத் தடுக்கும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது. ஏற்கனவே காப்பிக் கொட்டை ஏற்றுமதி செய்வதற்குச் சர்க்கார் கொடுத்த அனுமதியை முதலாளிகள் துஷ்பிரயோகம் செய்ததாலேயே, இப்போது சர்க்கார் தங்கள் கொள்கையை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று.

எனவே, இவ்விஷயத்தில் சர்க்கார் கொள்கையைக் கண்டித்து, தென்னிந்திய தோட்ட முதலாளிகள் சங்கம் சென்ற வாரம் நிறைவேற்றிய தீர்மானத்தை மக்கள் ஆதரிக்க மாட்டார்கள்.

காப்பிக் கொட்டையின் விலையை மேலும் கணிசமாகக் குறைப்பதற்குச் சர்க்கார் மேலும் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றே கோருவார்கள்.

இந்திய சர்க்காரின் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் காப்பிக்கொட்டை விலையைக் குறைப்பதற்கு எடுத்து வரும் முயற்சியைப் பெரிதும் பாராட்டுகிறோம். அவர் மேலும் உறுதியுடனிருந்து எடுத்த காரியத்தில் பூரண வெற்றி பெறவேண்டும் என்று விரும்புகிறோம்.

---

## முதல் வரவேற்பு



ஆந்திர ராஜ்யத்தின் தலைநகரான கர்நூலில் ஹோட்டல்கள் நடத்த முன் வருபவர்களுக்குச் சகல வசதிகளும் செய்து கொடுப்பதாக விசேஷ கலெக்டர் ஸ்ரீ நரசிம்மம் அறிவித்திருக்கிறார்.

# ஜெயப்பிரகாஷ் விஜயம்

தமிழ் நாட்டில் பூதான இயக்கத்துக்குப் பலந் திரட்டுவதற்காக ஸ்ரீ ஜெயப் பிரகாஷ் நாராயண் சென்ற மாதத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தார். அவருடன் ஸ்ரீ காமராஜரும் பல இடங்களுக்குச் சென்று ஒத்துழைத்தார். இவர்களுடைய சுற்றுப் பிரயாணத்தின் பயனாக மொத்தம் 5,218 ஏக்கரா பூமியும், ரூ 26,318 ரொக்கமும் 32 பம்பு செட்டுகளும், 343 கலப்பைகளும் 24 காளைகளும் பூதான இயக்கத்துக்குக் கிடைத்தன.

அச்சில் படிக்கும்போது 5,218 ஏக்கரா குறைவாகத் தோன்றலாம். இந்த 5,218 ஏக்கரா நிலத்தின் குறைந்த பட்சமான பெறுமானம் பத்து லட்சம் ரூபாய் இருக்கும் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். பத்து நாள் சுற்றுப் பிரயாணத்தில் பத்து லட்சம் ரூபாய் நன்கொடை வசூலிப்பது எளிய காரியமா! பணமாக வசூலிக்கப் பட்டிருந்தால் இதை மிகப் பெரிய சாதனை என்று எல்லாரும் உடனே ஒப்புக் கொள்வார்கள்.

இந்த 5,218 ஏக்கரா நிலத்தில் ஆயிரத்துஐம்பது விவசாயி உழைப்பாளிக் குடும்பங்களைக் குடியேற்றலாம். ஒவ்வொரு ஐந்து ஏக்கரா நிலத்துக்கும் ஒரு கிணறும், ஒரு ஜோடி மாடும், விவசாயக் கருவிகளும் இருந்து, உழைப்புத் திறனும் உள்ளத்தில் ஊக்கமும் இருந்தால் சில வருஷங்களில் நவீன விவசாய முறைகளைக் கையாண்டு பொன் விளையும் பூமியாகச் செய்யலாம். இவ்வாறு ஆயிரம் இடங்களில் செய்து காட்டினால், அவை நாட்டுக்கெல்லாம் ஊக்கமாகிய அமுதத்தைச் சுரந்து அளிக்கும் ஜீவ பூமிகளாக விளங்கும்.

பூதான இயக்கத்தின் பலன்களைக் கிடைத்த நிலத்தின் அளவைக் கொண்டு மட்டும் நிர்ணயிக்கக்கூடாது. காந்தி மகாத்மா முப்பது ஆண்டு காலம் சுதந்திர இயக்கம் நடத்தியபோது, கதர் இயக்கத்தை இடைவிடாமல் வற்புறுத்திவந்தார். ஆயினும் மக்களில் நூற்றுக்கு ஒருவர் வீதந்தான் கதர் உடுத்தினார்கள். இதனால் கதர் இயக்கம் பலனற்றது என்று ஆகிவிடுமா! ஒரு நாளும் இல்லை. கதர் இயக்கத்தின் அடிப்படைத் தத்துவம் வாழ்க்கையின் சகல துறைகளிலும் வியாபித்துப் பலவித நல்ல சக்திகளை வளர்த்து வந்தது. அதனாலேயே முடிவில் அடிமைப் பட்டிருந்த நம் பாரத தேசம் சுதந்திரம் அடைந்தது.

அதுபோலவே பூதான இயக்கத்தின் மூலமாகக் கிடைக்கும் நிலத்தினால் தேசம் நேரடியாகப் பெறும் நலன்களைத் தவிர, மக்களின் மனப்பான்மையில் அதன்மூலம் உண்டாகும் மாறுதல்கள் விசேஷ பலன்களை அளிக்கும் என்பதில் ஐயமில்லை.

ஒரு பக்கத்தில் அதிக செல்வம் குவிந்திருப்பதும் இன்னொரு பக்கத்தில் கொடிய வறுமை தாண்டவமாடுவதுமான நிலைமையை மாற்றியே தீர வேண்டும். இந்த நோக்கத்தைப் பலாத்காரக் கொடுமை இன்றிச் சாத்வீகமான முறைகளிலேயே நிறைவேற்றுவதற்குரிய சூழ்நிலையைப் பூமிதான இயக்கம் உண்டாக்கி வருகிறது.

ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நாராயண் தமது சுற்றுப் பிரயாண அநுபவங்களைப் பற்றிக் கூறுகையில், எந்தெந்த இடங்களில் பூமிதானத் தொண்டர்கள் ஊக்கமாக வேலை செய்திருக்கிறார்களோ அங்கெல்லாம் நல்ல பலன் கிடைத்தது என்று தெரிவித்திருக்கிறார். தமிழ் நாட்டில் மேலும் இந்த இயக்கம் பலம் பெற்று வளரும் என்றும், அப்படி வளருவது தொண்டர்கள் முன்வந்து உழைப்பதைப் பொறுத்தது என்றும் அறிவித்திருக்கிறார். அவ்விதம் ஊக்கத்துடன் உழைக்கக்கூடிய தொண்டர்கள் நூற்றுக் கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் தமிழ் நாட்டில் முன் வருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

* * *

சுதந்திரப் போரில் அரும் பெரும் தீரச் செயல்கள் புரிந்த ஒப்பற்ற வீரர் திலகம் ஸ்ரீ ஜயப் பிரகாஷ் நாராயண். தேசத்துக்கும் தேச மக்களுக்கும் உழைப்பதைத் தவிர வேறு எதையும் கனவிலும் கருதாத தியாகி. இம்முறை தமிழ் நாட்டில் பூதான இயக்கம் சம்பந்தமாகச் சுற்றுப் பிரயாணம் செய்வதற்காகவே அவர் விஜயம் செய்தார். இதன் காரணமாக, அவர் பேசிய பொதுக் கூட்டங்களில் பூதான இயக்கத்தைத் தவிர வேறு எதையும் பற்றிப் பேசவில்லை. சோஷலிஸ்ட் கட்சியைப் பற்றிய பிரஸ்தாபத்தையே எடுக்கவில்லை. இது அவருடைய ஒப்பற்ற நேர்மைக் குணத்துக்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

மறு முறை கூடிய சீக்கிரத்தில் சோஷலிஸ்ட் கட்சிக்குத் தமிழ் நாட்டில் புத்துயிர் தந்து பலப்படுத்துவதற்காக ஸ்ரீ ஜயப்பிரகாஷ் சுற்றுப் பிரயாணம் செய்வார் என்று எதிர்பார்க்கிறோம்.

# விரைந்து உதவுங்கள்!

“நாம் எப்பேர்ப்பட்ட சகோதரர்களிடமிருந்து பிரிந்து விட்டோம்! என்று ஆந்திரர்கள் ஆதங்கப் படும்படியாகக் கோதாவரி வெள்ளத்தினால் கஷ்டமடைந்தவர்களுக்குத் தமிழர்கள் விரைந்து உதவ வேண்டும்” என்று ராஜாஜி கேட்டுக் கொண்டிருக்கிறார். இத்தகைய உணர்ச்சி ஆந்திர சகோதரர்களுக்கு ஏற்படும் முறையில் சென்னை ராஜ்ய சர்க்கார் கஷ்ட நிவாரண வேலைகளை அதி துரிதமாகச் செய்து வருகிறார்கள். எதற்கெடுத்தாலும் தமிழர்களையும் ராஜாஜியையும் குறைகூறும் வழக்கம் உடைய ஆந்திரத் தலைவர்கள் கூட இந்த முறை குறை சொல்லாமல் ராஜாஜி சர்க்காரின் துரித நடவடிக்கைகளை மனம் விட்டுப் பாராட்டுகிறார்கள்.

தமிழ்ப் பொது மக்களும் ராஜாஜியின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு விரைந்து முன் வர வேண்டும். பண உதவி செய்ய விருப்பமுள்ளவர்கள் “ஆந்திரப் பிரபா” வசூலித்து வரும் வெள்ளக் கஷ்ட நிவாரண நிதியில் சேர்க்கும்படி “தினமணி” காரியாலயத்துக்கு அனுப்பி வைக்கலாம். (திருநகரிலிருந்து ‘ஆந்திரரைச் சகோதரராகப் பாவிக்கும் தமிழர்’ நமக்கு அனுப்பி வைத்த ரூபாய் 26-யும் “ஆந்திரப் பிரபா” வசூலித்து வரும் வெள்ளக் கஷ்ட நிவாரண நிதியில் சேர்த்து விட்டோம்.)

பண உதவியைப் போலவே துணிமணிகள் அளித்து உதவி செய்வதும் வெள்ளத்தினால் கஷ்டமடைந்தவர்களுக்குக் காலத்தினால் செய்த பேருதவியாக இருக்கும். முக்கியமாக, சென்னை நகரிலுள்ள தேசிய இளைஞர் முன்னணியினர் துணிமணிகள் வசூலித்து அனுப்பும் தொண்டில் ஈடுபடுவார்கள் என்று நம்புகிறோம்.

# புது டில்லியில் தமிழ்த் திருவிழா

[நமது விசேஷ நிருபர்]



டில்லி பார்லிமெண்டில் சூடான விவாதங்களோடு சில சமயம் நகைச்சுவை மிகுந்த கேள்வி—பதில்களும் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. சமீபத்தில் சபையில் ஒரு ஆந்திர அங்கத்தினர் 'சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்த'போது தமிழ் அங்கத்தினர் ஒருவர் "சபையில் பேசலாம்; பாடவும் செய்யலாமா!" என்று கேட்டு வைத்தாராம்! ஆந்திரர் விட்டுக் கொடுக்காமல் "நான் பாடினேன்; நீர் ஆடுமேன்!" என்று ஒரு போடு போட்டாராம்!

ஆனால் நல்ல வேளையாக தேமதுரத் தமிழோசையைப் பரப்புவதற்காக எந்தப் பிரதிநிதியும் இந்த முறையைக் கையாளவில்லை. தலைநகரில் வட இந்திய 'எம். பி.'க்களை இழுத்துப் போட்டு, 'தமிழ் வகுப்பு' நடத்துகிறார்கள். இந்தப் பிரசாரம் போதாது என்று வற்புறுத்தியாக தமிழ்ச் செல்வத்தை உணர்ந்த நிதி மந்திரி ஸ்ரீமான் தேஷ்முக் எங்கு பேசினாலும் ஒரு 'திருக்குறளை'வது மேற்கோளாக எடுத்துக் கூறாமல் பிரசங்கத்தையோ பதிலையோ முடிப்பதில்லையாம்!

ஆனால் டில்லித் தமிழ்ச் சங்கத்தார் இதனால் எல்லாம் திருப்தி அடைந்து விடவில்லை. மறைவாக நமக்குள் தமிழின் பெருமையைச் சொல்லிக் கொள்வதில் பயனில்லை என்று முடிவு செய்து, திறமான தமிழின் பெருமையை இதர இந்தியர்களும் உணரும் பொருட்டுத் தலைநகரிலே தமிழ் மணம் கமழத் 'தமிழ் விழா'வை நடத்தத் திட்டமிட்டு விட்டார்கள்.

*　　　*　　　*

நடந்த ஒரு வார காலமாகப் புது டில்லி ஸ்டேஷனின் வாயிலில் நின்று கொண்டிருந்த டிக்கட் கலெக்டர் ஒரே வியப்பில் மூழ்கிக் கிடந்தார். நாலு திசைகளிலிருந்தும் வரும் ரயில் வண்டிகளிலிருந்து தட்டுச் சுற்று வேஷ்டியுடன் கூட்டம் கூட்டமாகத் தென்னிந்தியர்கள் இறங்குவதும், பிளாட்பாரத்தில் தயாராக நிற்கும் குழுவினர் அவர்களுக்கு மாலையிட்டு டாக்ஸியில் ஏற்றி மாயமாய் மறைந்து விடுவதையும் கண்டு இந்தத் தமிழர் படையெடுப்பின் காரணம் புரியாது நின்ற திகைப்பில் டிக்கட்டுகளைச் சேகரிக்கக் கூட மறந்து விட்டார். "பார்லிமெண்டில் ஆந்திரப் பிரிவினை விவாதிக்கப்படும் வேளையில் அரசியல் அணிவகுப்புக்காகத்தான் இவ்வளவு தென்னிந்தியர்கள் படையெடுத்து வருகின்றனரோ!" என்ற டிக்கட் கலெக்டரின் பயம் நிறைந்த கேள்விக்குச் செவி சாய்த்த 'மதராஸி' ஒருவர் கடகடவென்று சிரித்துக் கொண்டே "இவர்கள் சொற்போருக்கு வரவில்லை; சொல்மாரிக்குத்தான் வந்துள்ளார்கள்" என்று சொல்லிக் கொண்டே குடையை விரித்தார். (சொல் மழைக்காக அல்ல; உண்மையிலேயே டில்லியில் இப்போது அபூர்வ மழை!)

"தமிழர் படையெடுப்பு இல்லை, ஐயா! இந்த ஆகஸ்ட் 29,30,31 தேதிகளில் 'தமிழர் விழா' நடைபெறப் போகிறது. அதில் கலந்து கொள்ளப் போகும் தமிழ் பிரசங்கிகள் இவர்கள்!"

மேற்படி விளக்கத்தைக் கேட்ட பிறகுதான் வெள்ளை உடையில் இருந்த ரயில்வே அதிகாரியின் ஐயம் நீங்கிற்று. அவரது கைகள் வழக்கம் போல யந்திரக் கருவியில் டிக்கட்டின் ஓரங்களை வெட்டும் முயற்சியில் இறங்கின.

*　　　*　　　*

முன்னைப் பழங்காலம் தொட்டே தமிழ் நாட்டுக்கும் வட நாட்டுக்கும் இருந்த தொடர்புக்குச் சரித்திரம் சான்று. 'குமரியொடு வட இமயத்து ஒரு மொழி வைத்து உலகு ஆண்ட' என்ற சிலப்பதிகாரப் பாடல் தமிழர் ஆட்சி வட நாட்டிலும் பரவி இருந்ததைத் தெளிவு படுத்துகிறது. காசி மடத்தை ஸ்தாபித்த குமரகுருபர சுவாமிகள் 'சகல கலாவல்லி' அருள் பெற்று டில்லி பாதுஷாவுடன் சம்பாஷித்த வரலாறும் உண்டு. இதையெல்லாவற்றையும் நம்பத் தயாராக இல்லாதவர்கள் கூட இம்மாதம் 'தமிழ் விழா'வின் ஆரம்ப நிகழ்ச்சியாக டில்லி தார்வீதிகளில் தமிழ் இலக்கிய அன்னை பவனி வந்த காட்சியைக் கண்டவர்கள் தமிழின் ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டிருப்பார்கள்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் 'ஆறாம் தமிழ் விழா' தலைநகரில் ஆகஸ்ட் மாதம் 29ம் தேதி காலை 7–30 மணிக்கு ஊர்வலமாக ஆரம்பமாயிற்று. இசைக் கருவிகளும், ஏடுகளும், பூர்ண கும்பங்களும் அலங்கரிக்கப் பெற்ற பல்லக்கைத் தொடர்ந்து நிறையத் தமிழர் கூட்டம்.

"ஊர்வலத்தை முன்னின்று நடத்த இருந்த ஆனைக்கு அடி சறுக்கி விட்டதால் கடைசி நிமிஷம் ரத்து ஆகிவிட்டது" என்று சிவாஜி ஒருவர் ஹாஸ்யத்துடன் அங்கலாய்த்துக் கொண்டார்!

மங்கலப் பொருள்கள் ஏந்திய மாணவிகள்; தமிழ்க் கலாசாரத்தை வெளிப்படுத்தும் நோக்கத்துடன் காஞ்சீபுரம் பட்டுப் புடவை அணிந்த மாதர்கள்; டில்லி பௌதிக ஆராய்ச்சிக் கூட நிர்வாகஸ்தர் டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன்; சென்னை கணித நிபுணர் பேராசிரியர் டி. விஜயராகவன்; ரயில்வே உதவி மந்திரி ஸ்ரீ ஓ. வி. அளகேசன்; தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர் ஸ்ரீ டி. எஸ். அவினாசிலிங்கம்; ஸ்ரீமான்கள் ஆர். சக்கரவர்த்தி, கே. ராமமூர்த்தி, டி. ராமய்யா, மற்றும் டில்லி தமிழ்ப் பிரமுகர்கள்; தமிழ்ப் பிரதிநிதிகள்; எல்லாவற்றிற்கும் மேலாக தமிழ் நாட்டின் இசையான நாதஸ்வரத்தின் இனிய ஒலியும், வேத கோஷமும் காற்றினிலே கலந்து வந்தன.

ஆங்காங்கு குழுமி நின்ற வட இந்தியர் இந்தக் கோலாகலக் காட்சியைக் கண்டு 'எழுது சித்திரமென இமைப்பிலாது' நின்றனர். முன்னிரவெல்லாம் பெய்த வருணபகவான் கூடத் தன்னை மறந்து விட்டார்; ரீடிங்ரோடின் இரு ஓரங்களிலும் நின்ற பசுமையான தருக்கள் இந்தத் தெய்வீகக் காட்சியை, தமிழ்த் தாய் 'மணி நகை புரிந்து திகழத் திருக்கோலம் கண்டு' மெய் சிலிர்த்தபோது அவற்றின் இலைகள் உதிர்த்த நீர்த் துளிகள் வீதியை நனைத்தன. தெரு வெல்லாம் தமிழ் முழக்கம் செய்து கொண்டு ஊர்வலம் ரீகல் தியேட்டரை அடைந்தது.

ஜனாதிபதி பாபு ராஜேந்திரப் பிரஸாத் சரியாக எட்டரை மணிக்கு வந்து சேர்ந்தபோது பூரண கும்பத்துடனும், தமிழ்ப் பண்பாட்டுடனும் வரவேற்கப்பட்டுத் தியேட்டரின் உள்ளே அழைத்துச் செல்லப்பட்டார்.

தியேட்டர் முழுவதும் நிரம்பி வழிந்த டில்லித் தமிழர்களின் பாஷாபிமானம் பாராட்டத்தக்கது. கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரி, ஸ்ரீ ஜகஜீவன் ராம், ஸ்ரீ ப்ரம் பிரசாத், ஸ்ரீ அனந்தசயனம் ஐயங்கார் முதலியவர்கள் சபையின் முன் வரிசையில் அமர்ந்திருந்தனர். மேடையின் நீலத் திரைக்கு முன்பாக ராஷ்டிரபதி, உப ராஷ்டிரபதி ஸ்ரீ ராதாகிருஷ்ணன், வரவேற்புத் தலைவர் ஸ்ரீ கே. எஸ். கிருஷ்ணன், இந்த மூன்று 'டாக்டர்'களுடன் இலங்கை இந்திய ஹை கமிஷனர் மேன்மை தங்கிய ஸ்ரீ வி. குமாரஸ்வாமியையும் பார்த்தபோது மந்திரம் போன்ற இந்தியும், சுந்தரத் தெலுங்கும், தெள்ளு தமிழும், சங்கை மிக்க சிங்களமும் கொலு வீற்றிருந்ததாகத் தோன்றியது.

ஸ்ரீ கே. எஸ். கிருஷ்ணனின் பௌதிக ஆராய்ச்சியுடன், தமிழ்ப் பற்றும் சேர்ந்து கொண்டபோது ஏற்பட்ட ரஸாயன விந்தைதான் இந்த டில்லி விழா. அவரது உற்சாகத்தின் விளைவாகவே 'தமிழ் வளர்ச்சிக் கழகத்'தின் 'ஆறாம் தமிழ் விழா' டில்லிமா நகரில் கூட்டப்பட்டது என்பதைக் கேள்விப்படும்போது அவரையும், அவரோடு உழைத்த டில்லித் தமிழ்ச் சங்க நிர்வாகிகளையும் ஒருங்கே போற்றத் தோன்றுகிறது. அவரது சுருக்கமான வரவேற்பு உரைக்குப் பின்னர் ஸ்ரீ அவினாசிலிங்கம் செட்டியார் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் நற்பணிகளையும், கலைக் களஞ்சியப் பதிப்பைப் பற்றியும் சாங்கோபாங்கமாகச் சுவைக்க எடுத்துரைத்தார்.

கனம் ஓ. வி. அழகேசன் சூட்டிய மாலையை ஏற்றுக் கொண்டு பாபு ராஜேந்திரப் பிரசாத் "எனக்குத் தமிழ் தெரியாத குறைக்குப் பெரிதும் வருந்துகிறேன்" என்று தொடங்கி, "பல தென்னிந்தியர்கள் அழகாக ஹிந்தி பேசுகிறார்கள். ஆனால் வட இந்தியர்களிடையே தென்னிந்திய பாஷையைக் கற்றுக் கொள்ளும் ஆர்வம் இல்லாதது வருந்தத் தக்கதே! இதனால் ஏற்படும் நஷ்டம் வட இந்தியர்களுக்குத் தான்" என்றார்.

"சிலர் பிரசாரம் செய்வதுபோல் ஹிந்தியைத் தென்னிந்தியர்கள் படிக்க வேண்டுமென வற்புறுத்த யாரும் விரும்பவில்லை. ஹிந்தியின் மூலம் எந்த பாஷையின் வளர்ச்சிக்கும் முட்டுக்கட்டை போடுவதாக எண்ண வேண்டாம். வருங்காலத்திய ஹிந்தி பல இந்திய மொழிகளின் தொடர்பால் வளமையான தேசிய பாஷையாக மாறிவிடும் என்பதில் சந்தேகமில்லை. தொன்மை மிகுந்த தமிழும் ஹிந்தியின் சிறப்புக்கு உதவி புரிய வேண்டும் என்பதே எனது வேண்டுகோள்" என்று ராஷ்டிரபதி கூறிய போது சபையோர்களின் சந்தோஷம் கரகோஷமாகப் பரிமளித்தது.

விழாவுக்குத் தலைமை வகித்த டாக்டர் ராதாகிருஷ்ணன் தனது ஸ்பஷ்டமான பேச்சிடையே இந்திய சரித்திரத்தைப் புரட்டி காட்டின் கலாசாரத்தை மேம்படுத்திய ஜைன-பத்ரபாகு, நாலந்தா-தம்மபாலா, ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ சங்கராச்சாரியார், நாயன்மார்கள், ஆழ்வார்கள் முதலியவர்கள் தென்னிந்தியர்கள் தாம் என்று கூறியபோது கூடியிருந்த தமிழர்களின் தோள்கள் நிமிர்ந்தன. "ஆனால் பழைமையின் உயர்வில் மறந்து விடாமல் இன்றைக்கும் இந்திய அரசியல், விஞ்ஞானம், சட்டம் முதலியவற்றின் வளர்ச்சியில் ஈடுபடும் தென்னிந்தியர்கள் நிறைய உள்ளார்கள். அவர்களது வரலாற்றை வெளியிடும் பொறுப்பை இத் தமிழ் வளர்ச்சிக் கழகம் மேற்கொள்ளக் கேட்டுக் கொள்கிறேன்" என்றார்.

விழாவில் கலந்து கொண்ட இலங்கை ஹை கமிஷனர் ஸ்ரீ வி. குமாரஸ்வாமி தான் தமிழர் தான் என்பதைப் பெருமிதத்தோடு கூறிக் கொண்டு தமிழ் நாட்டுக்கும், ஈழத்திற்கும் உள்ள நெடுங்காலத் தொடர்பை விவரித்தார். இன்றைய அரசியல் வானில் சூழ்ந்துள்ள இடர் மேகங்கள் நீங்கி விரைவிலேயே சுமுகமான உறவு ஏற்படும் என்று இலங்கைப் பிரதிநிதியான அவர் கூறியதை அவரது சர்க்காரின் வாக்காகவே நம்பி மகிழ்ச்சியுறுவோமாக.

இறுதியாக நன்றி கூறிய டில்லி சர்வகலாசாலையைச் சார்ந்த டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன் ஆண்களை விடப் பெண்கள் தாம் தமிழ்க் கலாசாரத்தை நிலைநிறுத்தி வருகிறார்கள் என்று சொன்னபோது தமிழ் ஸ்திரீகள் தங்கள் பட்டுப் புடவையையும் நகைகளையும் தொட்டுப் பார்த்துக் கொண்டனர். குமாரிகள் சகுந்தலா, சுகந்தா ராமன் 'வாழிய செந்தமி'ழை அதிகப்படியான சங்கீத அம்சத்துடனேயே பாடி முடிக்கக் கூட்டம் இடைவேளைக்குக் கலைந்தது.

## சோஷலிஸக் கட்டுரைப் போட்டி முடிவு

○★○

"சோஷலிஸம் ஏன் வேண்டும்?" என்ற கட்டுரைப் போட்டியில் ரூ. 100 பரிசு பெற்றவர்: ஸ்ரீ எம். சுப்பு 127, மொகல் வீதி, இரங்கூன்.

இந்தப் போட்டிக்கு வந்த கட்டுரைகளில் கீழே குறிப்பிட்டுள்ள மூன்று அன்பர்களின் கட்டுரைகள் பிரசுரத்துக்கென்று தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன.

1. ஸ்ரீ வி. எஸ். சேதுராம் எம். ஏ., பொருளாதார ஆசிரியர், பி. டி. கல்லூரி, மதனபள்ளி. 2. ஸ்ரீ எஸ். ராமசுப்பிரமணியம் பி. காம்., 103, புதுத் தெரு, மதுரை. 3. ஸ்ரீ எம். கே. ராஜகோபாலன், 6. பேயாழ்வார் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை.

இந்த சோஷலிஸக் கட்டுரைப் போட்டியில் மொத்தம் முந்நூற்று ஐந்து பேர்கள் கலந்து கொண்டார்கள். அவர்கள் அனைவருக்கும் நமது மனமார்ந்த நன்றி.

உங்கள் வாழ்நாட்களில் மறக்க முடியாத உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் சித்திரம்!

# விரைவில் வெளிவருகிறது

விநோதாவின்....

# தேவதாஸ்

டைரக்ஷன் வேதாந்தம் ராகவய்யா...



விநியோகஸ்தர்கள்:
வட ஆற்காடு, தென்னாற்காடு, செங்கல்பட்டு, பாண்டிச்சேரி முதலிய இடங்களுக்கு: ஆனந்தா பிக்சர்ஸ், வேலூர்
மலபார்: பேர்ல் பிக்சர்ஸ் லிமிடெட், எர்ணாகுளம். சிலோன்: சிலோன் எண்டர்டெய்ன்மெண்ட்ஸ் லிமிடெட், கொழும்பு
எப்.எம்.எஸ்.: ஷா பிரதர்ஸ் லிட்., சிங்கப்பூர். சென்னை நகரம் மற்றும் தமிழ்நாடு முழுதும்: ருட்வின் பிக்சர்ஸ், சென்னை-2
தமிழ்ப்பட விநியோக உரிமை பெற்றவர்கள்: மெஸர்ஸ். நல்லம் பிக்சர்ஸ் சர்க்யூட், பெங்களூர்-2 & சென்னை-4

# பொன்னியின் செல்வன்

## கல்கி

### அத்தியாயம் 39

## காரிருள் சூழ்ந்தது!

ஆதித்த கரிகாலனுடைய பயங்கரமான வெறிகொண்ட சிரிப்பு, யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்திருந்த வந்தியத்தேவனுடைய காதில் விழுந்து அவனுக்கு ரோமாஞ்சனத்தை உண்டாக்கியது. விரைவில் ஏதோ விபரீதம் நிகழப்போகிறது என்று அவனுடைய உள்ளுணர்ச்சி கூறியது. நிழல் வடிவங்கொண்ட யம தர்மராஜன் கையில் பாசக் கயிறுடன் அந்த அறையில் பிரசன்னமாகியிருந்தான். பாசக் கயிற்றை வீசுவதற்குச் சமயம் நோக்கிக் கொண்டிருந்தான். ஆனால் யார்மீது எறியப் போகிறான்? யாருடைய உயிரைக் கொண்டு போகப்போகிறான்? கரிகாலன் உயிரையா? அல்லது நந்தினி தேவியின் உயிரையா? ஒருவேளை அவர்கள் இருவரையுமே மரணம் நெருங்கிக்கொண்டிருக்கிறதா? சகோதரன் சகோதரியைக் கொல்லப் போகிறானா? சகோதரி சகோதரனைக் கொல்லப்போகிறாளா? அல்லது இருவரும் ஒருவரையொருவர் கொன்று கொண்டு சாகப் போகிறார்களா?—இம்மாதிரி ஏதும் நடவாதபடி தடுப்பதற்குத்தான் இளைய பிராட்டி தன்னை விரைந்து போகும்படி அனுப்பி வைத்தாள். தன்னால் இயன்றதைச் செய்தாகி விட்டது. இருவரிடமும் அவர்களுக்குள்ள உறவைப் பற்றிச் சொல்லியாகி விட்டது. இருவருடைய உள்ளமும் இளகும்படியும் செய்தாகி விட்டது. ஆனாலும், பலன் ஏற்படுமா? வெறி கொண்ட கரிகாலரையோ, பிரமை பிடித்த நந்தினியையோ, கொடூரச் செயல் எதுவும் செய்யாமல் தடுக்க முடியுமா? இந்தச் சமயத்தில் தான் நடுவில் குறுக்கிடுவதால் ஏதேனும் நன்மை விளையுமா? ஒரு வேளை இருவருக்கும் மத்தியில் தன்னுடைய உயிரைப் பலி கொடுப்பதினால், அவர்களுடைய குரோதம் தணியுமா? — இவ்வாறெல்லாம் எண்ணி வந்தியத்தேவனுடைய உள்ளக் கடல் கொந்தளித்துக் கொண்டிருந்தது. இன்னும் சிறிது பொறுத்துப் பார்க்கலாம்,— தான் அவசரப் பட்டுக் குறுக்கிடுவதினால் காரியம் கெட்டுப் போக வேண்டாம் என்று பல்லைக் கடித்துக் கொண்டு நின்றான்.

* * *

கரிகாலருடைய வெறி கொண்ட சிரிப்பு அடங்கிய பிறகு, அவர்களுடைய சம்பாஷணை மேலும் தொடர்ந்தது.

"ஐயா! என் வாழ்நாளில் தங்களுக்கு மகிழ்ச்சி தரும்படியான காரியம் எதுவும் நான் செய்ததில்லை. சாகும் சமயத்திலாவது தாங்கள் சிரித்து மகிழுவதற்குக் காரணமானது பற்றிச் சந்தோஷம்' என்றாள் நந்தினி.

"ஆம், நந்தினி! இன்றைக்கு எனக்கு மிகச் சந்தோஷமான தினந்தான். இத்தனை வருஷமாக நீ என்னைப் படுத்தி வைத்த பாட்டுக் கெல்லாம் இன்றைக்கு முடிவு ஏற்படப் போகிறது. இந்தத் தடவை நான் காஞ்சியிலிருந்து புறப்பட்டபோது ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு தான் வந்தேன். உன்னை நேரில் பார்த்த பிறகு ஒருவேளை என் மனம் சலித்து விடுமோ என்று பயந்து கொண்டிருந்தேன். அதற்கிடமில்லாமல், நீயே வாளை என் கையில் கொடுத்து விட்டாய்!" என்று கூறிக் கரிகாலன் மீண்டும் சிரித்தான்.

"கோமகனே! எனக்கும் இன்று சுதினந்தான். தங்கள் கையினால் வெட்டுண்டு இறப்பதைப் போன்ற இனிமை

யான மரணம் எனக்குக் கிட்டப்போவதில்லை. ஒரு காலத்தில் தாங்கள் என் கழுத்தில் பூமாலை சூட்டப் போகிறீர்கள் என்று ஆசைக் கனவு கண்டு கொண்டிருந்தேன். அது நிறைவேற முடியாமற் போயிற்று. தங்கள் கையிலுள்ள வாளை என் கழுத்தில் சூட்டிக் கொள்ளும் பேறுவது எனக்குக் கிடைக்கட்டும். ஐயா! நேரம் ஆகிறது. ஏன் தாமதிக்கிறீர்கள்?'' என்றாள் நந்தினி.

''பல வருஷம் தாமதித்தாகி விட்டது. இன்னும் சில நிமிஷம் தாமதிப்பதினால் நஷ்டம் ஒன்றுமில்லை. நந்தினி! சற்று என்னைப் பார்! கடைசி முறையாக என்னைப் பார்த்து என் கேள்விக்கு மறுமொழி சொல்! பூமாலை சூட்ட வேண்டிய கையினால் நான் ஏன் உனக்கு வாள் மாலை சூட்ட வேண்டும்? நீ ஒரு காலத்தில் ஆசைக் கனவு கண்டது உண்மையாக இருந்தால், இப்போது ஏன் அதை நிறைவேற்றிக் கொள்ளக் கூடாது? அதற்குத் தடையாக நிற்பவர்கள் யார் என்று சொல்லு! உன்னைக் கொல்லுவதற்குப் பதிலாக அவர்களைக் கொன்று விட்டு மறு காரியம் பார்க்கிறேன்!'' என்றான் கரிகாலன்.

''வேண்டாம், ஐயா! வேண்டாம்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. என் காரணமாக, இனி வேறு யாரும் சாக வேண்டாம்! யாரும் தடையாக நிற்கவும் இல்லை. என்னுடைய தலைவிதிதான் தடையாக இருக்கிறது!''

''அந்தத் தடையை ஒரு கொடியில் நான் தவிடுபொடி செய்து விடுகிறேன். தலைவிதியின் பேரில் பாரத்தைப் போடாதே! பிரம்மா எழுதிய எழுத்தை நான் மாற்றி எழுதுகிறேன், பார்!......''

நந்தினி குறுக்கிட்டு, ''பிரம்மா எழுதிய எழுத்தை மாற்றி எழுதலாம். ஆனால் ஒருவருடைய பிறப்பை மாற்றி அமைக்க முடியுமா?'' என்று கேட்டாள்.

''எதைப்பற்றிக் கேட்கிறாய், நந்தினி! நமது சிறு பிராயத்தில் உன்னைப் பட்டர் குலத்துப் பெண் என்றும், அதனால் உன்னுடன் சிநேகம் செய்யக்கூடாதென்றும் என் குடும்பத்தினர் சொன்னார்களே, அதைப் பற்றியா? இல்லை! நீ பட்டர் குலத்தில் வளர்ந்தவளே யன்றி அந்தக் குலத்தில் பிறந்தவள் அல்ல என்பதை நீயும் நானும் முன்பே அறிந்திருந்தோம்.''

''அதைப்பற்றி இப்போது சொல்லவில்லை, ஐயா! தங்கள் அருமை நண்பர், வாணர் குலத்து வீரர் — கொண்டு வந்த செய்தியைப் பற்றியே சொல்லுகிறேன். பழையாறை இளைய பிராட்டி அவசரமாகச் சொல்லி யனுப்பிய செய்தியைப் பற்றியே கூறுகிறேன். நான் தங்கள் சகோதரி என்பதை இதற்குள்ளாகவே மறந்து விட்டீர்களா?''

''நந்தினி! அன்றைக்கு நான் உன்னிடம் அதைப்பற்றிச் சொன்னபோது, நீ அதை நம்பவில்லை. உன்னையும் என்னையும் பிரித்து வைப்பதற்குச் செய்யும் இன்னொரு சூழ்ச்சி என்றாய். பிறகு நானும் யோசித்து அதே முடிவுக்கு வந்தேன். அதை நிச்சயம் செய்து கொள்ள வேண்டுமானால்,......''

''வேண்டாம்! வேண்டாம்! எனக்கு அதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. கோமகனே! தங்களுக்கும் எனக்கும் இரத்த சம்பந்தம் ஏதுமில்லை......''

''பின், என்ன தடை, நந்தினி?''

''நான் தங்களுக்குப் பாட்டனார் முறையிலுள்ள பழுவேட்டரையரை மணந்தவள். தங்களுக்குப் பாட்டி முறையில் உள்ளவள். இது போதாதா?''

''நந்தினி! அந்தக் கதையைச் சொல்லி என்னை மறுபடியும் ஏமாற்றப் பார்க்க வேண்டாம். உலகத்தின் முன்னிலையில் நீ பழுவேட்டரையரின் இளைய ராணியாக இருக்கலாம். ஆனால் உண்மையில் நீ அவரை மணந்துகொள்ளவில்லை. ஏதோ காரணார்த்தமாகவே அவருடைய அரண்மனையில் வந்திருக்கிறாய். முன்னொரு தடவை, தஞ்சையில் நான் கேட்டபோது, இவ்வாறுதான் கூறினாய். அப்போது நான் நமது ஆசைக் கனவை உனக்கு நினைவூட்டினேன். அதை நிறைவேற்றுவதற்கு நீ பயங்கரமான நிபந்தனைகளை விதித்தாய்! பழுவேட்டரையரைக் கொன்று, என் தந்தையையும், சகோதரியையும் சிறையிலடைத்து விட்டு, உன்னைச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்க வேண்டும் என்றாய். வெறி கொண்ட ராட்சஸி நீ என்று தீர்மானித்துக்கொண்டு நான் காஞ்சிக்குப் போனேன். அப்புறம் நீ என்னை விட்டு விட்டாயா? இல்லை! ஓயாமல் ஒழியாமல் கனவிலும் நினைவிலும் வந்து என்னை வதைத்துக் கொண்டிருந்தாய். சில சமயம் அழுது புலம்பி என்னைத் துன்புறுத்தினாய்; சில சமயம் மோகனப் புன்சிரிப்புச் சிரித்து என் உயிரை வதைத்தாய்; சில சமயம் பிச்சியைப் போல் சிரித்து என்னையும் பித்தனாக்கினாய்!...''

''கோமகனே! தங்களுடைய மனப் பிரமைக்கு என் பேரில் ஏன் குற்றம்

சுமத்துகிறீர்கள்? தாங்கள் எனக்குச் செய்த அநீதிக்கும் கொடுமைக்கும் பலனை அநுபவித்தீர்கள். அதற்கு நான் என்ன செய்வேன்? நான் மட்டும் கஷ்டப்பட வில்லை யென்று எண்ணுகிறீர்களா? பழுவேட்டரையரின் மாளிகையின் சுக போகங்களில் ஆழ்ந்து குதூகலமாயிருந்தேன் என்று நம்புகிறீர்களா?'' என நந்தினி கேட்ட குரலில் மீண்டும் பழையபடி ஆத்திரமும் கொடூரமும் பொங்கித் ததும்பின.

இதைக் கேட்டு வந்தியத்தேவன் பீதி கொண்டான். அவனுடைய உடம்பு படபடத்தது.

ஆதித்த கரிகாலரின் ஸ்வரமும் ஏறத் தொடங்கியது.

''நீயும் கஷ்டப்பட்டதாகவா சொல்கிறாய்? அப்படியானால், இப்போது ஏன் நாம் ஏதேதோ பேசிக் கொண்டு வீண் பொழுது போக்கவேண்டும்? என்னுடன் புறப்பட்டு வருவதற்கு உன்னுடைய சம்மதத்தைத் தெரியப்படுத்து. உடனே புறப்பட்டுச் செல்வோம். உனக்காக நான் இந்தப் பெரிய சோழ இராஜ்யத்தைத் தியாகம் செய்து விட்டு வரச் சித்தமாயிருக்கிறேன். பிறந்த நாட்டையும் தாய் தந்தையரையும் உற்றார் உறவினரையும் துறந்து விட்டு வருகிறேன். கப்பல் ஏறிக் கடல் கடந்து செல்வோம். கடல்களுக்கு அப்பால் எத்தனை எத்தனையோ அற்புதமான தீவ தீவாந்தரங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றை அடைவோம். உன்னைக் காட்டிலும் இந்த இராஜ்யம் எனக்குப் பெரியதன்று.''

''கோமகனே! தாங்கள் இராஜ்யத்தைத் துறந்தாலும் துறப்பீர்கள்! ஆனால் இந்தக் கீழ்க்குல மகள் புராதனமான சோழ சிங்காதனத்தில் ஏறுவதற்குச் சம்மதிக்க மாட்டீர்கள். இல்லையா?'' என்று கூறி விட்டு நந்தினி நகைத்த நகைப்பில் தீப்பொறி பறந்தது.

''பெண்ணே! இதை வேறு விதமாகப் பார்! உனக்கு என்னைக் காட்டிலும் சோழ சிங்காதனம் உயர்வானதா? என்னிடம் நீ அந்த நாளிலிருந்து காட்டிய பிரியம் எல்லாம் சிங்காதனம் ஏறி மணி மகுடம் சூடும் ஆசையினால் நடித்த நடிப்புத்தானா?'' என்றான் கரிகாலன்.

''ஆகா! அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். எனக்கு அரண்மனை வாழ்வும் அரசபோகமும் அரியாசனமும் தான் வேண்டும். இவற்றுக்காகவே, பழுவேட்டரையரை நான் மணந்தேன். இவற்றுக்காகவே வீர பாண்டியரைக் காப்பாற்றுவதற்கு முயன்றேன்......''

''அடி பாதகி! அவன் பெயரை எதற்காக இப்போது சொல்லுகிறாய்?'' என்று கர்ஜனை செய்தான் கரிகாலன். நந்தினி மறுமொழி கூறுவதற்கு முன்னால் அவன் தொடர்ந்து மேலும் கூறினான்:—

''ஆகா! எனக்குத் தெரிகிறது. உன்னுடைய சூழ்ச்சியெல்லாம் எனக்கு இப்போது நன்றாய்த் தெரிகிறது. வீர பாண்டியனுடைய பெயரைச் சொன்னால் எனக்கு ஆத்திரம் வரும். நான் உன்னை உண்மையாகவே கொல்ல வருவேன். உடனே இங்கு நீ காலால் இட்டதைத் தலையால் செய்யக் காத்திருக்கும் வாலிப சிங்கங்களில் ஒருவன் வந்து என்னைக் கொன்று விடுவான் என்பது உன் அந்தரங்க நோக்கம். அடி சண்டாளி! அந்த வந்தியத்தேவன் எங்கே இருக்கிறான்? எங்கே அவனை மறைத்து வைத்திருக்கிறாய், சொல்! இங்கேதான் அவன் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும். நீ என்னோடு வர மறுப்பதற்குக் காரணமும் இப்போது நன்றாய்த் தெரிகிறது. ஆமாம்; அவன்தான் காரணம்! அவனோடு நீ ஓடிப்போக எண்ணியிருப்பது தான் காரணம். பழுவேட்டரையரை நீ இவ்விடம் விட்டு அனுப்பியதற்கும் அவன்தான் காரணம். நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து பேசிக் கொண்டுதான் இப்படியெல்லாம் சூழ்ச்சி செய்திருக்கிறீர்கள்...ஆகா! எப்படி நான் ஏமாந்து போனேன்? எங்கே அந்தப் பாதகன் வந்தியத் தேவன்? எங்கே உன்னுடைய புதிய காதலன்......?''

இவ்வாறு ஆதித்த கரிகாலர் வெறிக் கூச்சல் போட்டுக் கொண்டே கத்தியைச் சுழற்றிக் கொண்டு அங்குமிங்கும் அந்த அறையில் ஓடத் தொடங்கினார். ஒரு சமயம் யாழ்க் களஞ்சியத்தை நெருங்கி வந்தார். அப்போது நந்தினி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று அவர் காலடியில் விழுந்து ''கோமகனே! இதைக் கேளுங்கள்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. நான் சொல்வதைக் கேட்டுவிட்டுப் பிறகு எது வேணுமானாலும் செய்யுங்கள். வாணர் குல வீரரைப் பற்றித் தாங்கள் கூறுவது அபாண்டம். பூமாதேவி பொறுக்க மாட்டாள். அவருக்கு ஏதேனும் தாங்கள் தீங்கு செய்தால், என் அருமைத் தோழி மணிமேகலை உயிரையே விட்டுவிடுவாள்!

தங்களுக்கு மகத்தான பாவம் சம்பவிக்கும். வேண்டாம்! இதோ என் நெஞ்சைப் பிளந்து பாருங்கள். வீரபாண்டியருடைய வாளினாலேயே என் நெஞ்சைக் கிறிப் பாருங்கள். அதற்குள்ளே தங்களுடைய திருவுருவத்தைத் தவிர வேறு எதுவும் இராது. இது சத்தியம்! சத்தியம்! சத்தியம்!'' என்று கூறிவிட்டு நந்தினி விம்மினாள்.

ஆதித்த கரிகாலனின் வெறி மீண்டும் சிறிது தணிந்ததுபோல் காணப்பட்டது.

"அப்படியானால், என்னுடன் வருவதற்கு நீ ஏன் மறுக்கிறாய்? அதையாவது சொல்லி விடு! ஏன் என் கையினால் உன்னை வெட்டிக் கொல்லும்படி தூண்டுகிறாய்? உண்மையைச் சொல்லி விடு!'' என்று அலறினான் கரிகாலன்.

"ஆகட்டும்; இதோ சொல்லுகிறேன். என்னுடைய நெஞ்சில் தங்களைத் தவிர வேறு யாருக்கும் இடம் கிடையாது. இது சத்தியமான போதிலும், நான் தங்களுடன் வர முடியாது. தங்களை மணந்து கொள்ளவும் இயலாது. அதற்குத் தடையாயுள்ள ஒரு பெரிய காரணம் இருக்கிறது. அதைச் சொல்லுவதற்கே எனக்குப் பயமாயிருக்கிறது. ஆம், கோமகனே! உண்மையில் அதைச் சொல்லுவதற்காகவே நான் இங்கே வந்தேன்; தங்களையும் வரச் செய்தேன். அதைச் சொல்லி விட்டு என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்வதற்காக வந்தேன். இந்தத் துர்ப்பாக்கியசாலியை மறந்து விட்டுத் தங்கள் குலத்துக்கும் பதவிக்கும் உகந்த பெண்ணை மணந்து வாழும்படி கெஞ்சிக் கேட்டுக் கொள்வதற்காக வந்தேன். ஆனாலும் அதைச் சொல்லத் தயங்கினேன். அதைச் சொல்லலாம் என்று நினைக்கும் போதே பயமாயிருக்கிறது. தங்களுடைய கோபத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்வோமோ, அதனால் இன்னும் என்ன தீங்கு நேரிடுமோ என்று அச்சமாயிருக்கிறது. தாங்கள் அமைதியுடனிருப்பதாக வாக்குக் கொடுத்தால்,......''



"சொல், நந்தினி, சொல்! எவ்வளவு கசப்பான விஷயமாயிருந்தாலும் கேட்டுப் பொறுத்துக் கொள்வேன். சற்று முன், உன்னை மறந்து விட்டு வேறு பெண்ணை மணந்து சந்தோஷமாயிருக்கும்படி புத்திமதி கூறினாய்! அதற்கே நான் கோபித்துக் கொள்ளவில்லையே? வேறு என்ன கூறினால்தான் கோபித்துக் கொள்ளப் போகிறேன்? ஆனால் மறுபடியும் ஏதாவது கற்பனை செய்யாதே!..."

"கோமகனே! என் வாழ்க்கையே ஒரு கற்பனை. என் பிறப்பே ஒரு புனை கதை. என் வாழ்க்கையைச் சிறிது காலம் நீடிப்பதற்காகவும், நான் கொண்ட கருமத்தை முடிப்பதற்காகவும் நான் பல முறை கற்பனைக் கதை புனைய வேண்டியதாயிருந்தது. இனி அதற்கு அவசியம் ஒன்றும் இல்லை. இன்றுடன் என் பொய் வாழ்க்கையை முடித்துக் கொள்ளப் போகிறேன். தங்களுடைய மனத் துன்பத்தை அதிகமாக்கக் கூடாது என்பதற்காகவே சில உண்மைகளை நான் அறிந்த பிறகும் தங்களுக்குச் சொல்லவில்லை. தாங்கள் என்னை வெறுத்துவிட வேண்டும் என்பதற்காகவே பல கற்பனைகளைப் புனைந்தேன். பல பயங்கரமான காரியங்களைச் செய்யும்படி கூறினேன். என் உள்ளத்தில் ஓயாத போராட்டம் நடந்து கொண்டிருந்தது. என் கடமையும், நான் எடுத்துக் கொண்ட சபதமும், தங்கள் பேரில் கொண்ட காதலும் ஓயாமல் போராடிக் கொண்டிருந்தன. இவற்றினால் நான் அடைந்த துயரத்தைச் சொல்லி முடியாது. கடைசியாக, இன்று அந்தப் போராட்டமெல்லாம் முடியும் தருணம் நெருங்கியிருக்கிறது. என்னைப் பற்றிய உண்மையைச் சொல்லி விடுகிறேன். அதைக் கேட்ட பிறகு என்னைத் தங்கள் கையினாலேயே கொன்று விடுங்கள்! ஆனால் வேறு யாருக்கும் தாங்கள் தீங்கு செய்ய வேண்டாம்! வீண் பாவத்துக்கும் பழிக்கும் ஆளாக வேண்டாம்!......"

"பாவம்! பழி! இனிப் புதிதாக நான் அடையக்கூடிய பாவம் — பழி என்ன இருக்கிறது? ஆயினும், சொல், நந்தினி! என்னுடன் நீ வருவதற்கு, — நம் இளம் பிராயத்து ஆசைக் கனவு நிறைவேறுவதற்கு, — தடையாயிருக்கும் உண்மையான காரணம் என்னவென்று சொல்! அது எவ்வளவு பயங்கரமான உண்மையாக இருந்தாலும் சொல்! அதோ அந்தத் திரைச்சீலைக்குப் பின்னால் யாரோ ஒளிந்திருக்கிறார்கள் என்று நான் எண்ணிக் கொண்டிருந்த வரையில், ஒளிந்திருப்பது யார் என்று தெரியாதிருந்த வரையில், என் மனம் அமைதி இழந்திருந்தது. உன்னுடன் பேசிக்கொண்டிருந்தபோது, என் உள்ளம் அதைப் பற்றியே எண்ணமிட்டுக் கொண்டிருந்தது. ஒளிந்திருந்தவன் மணிமேகலை என்று தெரிந்த பிறகு என் மனக் குழப்பமும் நீங்கியது. உண்மை தெரியாதிருக்கும் வரையிலேதான் பயம், கோபம், குழப்பம் எல்லாம்! எவ்வளவு கசப்பாயிருந்தாலும் உண்மை தெரிந்து போய்விட்டால் மனம் அமைதி அடைந்து விடும் அல்லவா?"

"கோமகனே! நான் சொல்லப் போகும் செய்தியினால் தங்கள் மனம் உண்மையிலேயே அமைதி அடையட்டும். அதுதான் என் பிரார்த்தனை. ஆனால் அந்தச் செய்தி நான் தங்களுடன் வருவதோ, தங்களை மணப்பதோ முடியாத காரியம் என்பதையும் நிரூபிக்கும். என் வாழ்க்கையின் முடிவு, என் துன்பங்களுக்கு விமோசனம்,—மரணம் ஒன்றுதான் என்பதையும் தெரியப்படுத்தும். வாணர் குலத்து வீரர் என்னுடைய அன்னையைப் பற்றிய செய்தி கொண்டு வந்தார். அது உண்மை என்று நான் அறிவேன். ஈழ நாட்டில் வெறி கொண்டு அலைந்து திரிந்துகொண்டிருந்த மாதரசியைப்பற்றி நான் அறிவேன். அவள் என் அன்னை என்று அறிவேன். இது மற்றும் பலருக்கும் தெரிந்திருந்தது. ஏனெனில் அந்தப் பெண்ணரசிக்கும் எனக்கும் உருவத் தோற்றத்தில் அமைந்திருந்த ஒற்றுமையைப் பலரும் காணக்கூடியதாயிருந்தது. என்னை என் தாயார் என்று சிலர் சந்தேகிக்கும்படியிருந்தது. ஆனால் என் அன்னையை அத்தகைய வெறியளாக்கிய காரணம் இன்னதென்பதையும் சில காலத்துக்கு முன்பு நான் அறிந்து கொண்டேன். அது என்னைத் தவிர வேறு யாருக்காவது தெரியுமா என்பதை நான் அறியேன். யாரிடமும் இதுவரையில் நான் சொன்னதில்லை. இப்போதுதான் தங்களிடம் முதன்முதலாகச் சொல்லப் போகிறேன். ஐயா! என் தந்தை யார் என்பதைத் தங்களுக்குச் சொல்லப் போகிறேன். கருணை கூர்ந்து எனக்குச் சற்று முன் கொடுத்த வாக்குறுதியை நினைவுப்படுத்திக் கொள்ளுங்கள். ஆத்திரத்துக்கும் குரோதத்துக்கும் இடங் கொடாதீர்கள்......"

இவ்விதம் பலமான பூர்வ பீடிகை போட்டுக் கொண்டு நந்தினி ஆதித்த கரிகாலரை மிக நெருங்கி அவர்

காதண்டை மிக மெல்லிய நடுங்கிய குரலில் "என்னைப் பெற்ற தந்தை...... தான்!" என்று கூறினாள். கூறிவிட்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

ஆதித்த கரிகாலன் ஆயிரம் தேள் கொட்டியவனைப் போல் ஒரு கணம் துடிதுடித்துத் துள்ளினான்.

"இல்லை, இல்லை, இல்லை! ஒரு நாளும் இல்லை! நீ சொல்லுவது பொய், பொய், பெரும் பொய்!" என்று உரக்கக் கத்தினான்.

மறுகணமே அவனுடைய ஆவேசம் அடங்கியது. வேதனை மிகுந்த குரலில், "ஆம் நந்தினி, ஆம், நீ கூறியது உண்மையாகவே இருக்க வேண்டும். இப்போது எல்லாம் எனக்குத் தெரிகிறது. உன் மனத்திலே நிகழ்ந்திருக்கக் கூடிய போராட்டத்தைப் பற்றிய உண்மையும் தெரிகிறது. நீ எவ்வளவு துன்பப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. உன் குழப்பத்துக்கும் தயக்கத்துக்கும் உன் பயங்கரமான வேண்டுகோளுக்கும் காரணம் தெரிகிறது. அன்றைக்கு நீ என்னுடைய காலில் விழுந்து மன்றாடிய போது நான் உன் வேண்டுகோளை மறுத்தது எவ்வளவு பெரிய கொடுமை என்று தெரிகிறது! நந்தினி! உலகில் வேறு எத்தனையோ தீங்குகளுக்குப் பிராயச் சித்தம் உண்டு. ஆனால் நான் செய்ததற்குப் பிராயச்சித்தம் கிடையாது. நம் இருவருக்கும் நடுவில் உள்ள தடை நீங்க வழியே கிடையாது! ஐயோ! இந்தப் பெரும் பாரத்தை இத்தனை நாள் எப்படி உன் மனத்தில் வைத்துத் தாங்கிக் கொண்டிருந்தாய்? எப்படி இந்தப் பாதகன் இப் பூமியில் உயிர் வாழ்வதைச் சகித்துக் கொண்டிருந்தாய்? நல்லது; நம் இருவருடைய வாழ்க்கைக்கும் பரிகாரம் ஒன்றுதான்; விமோசனம் ஒன்றுதான். இதோ, நந்தினி! என் பிராயச்சித்தம்!..."

• • •

**யா**ழ்க் களஞ்சியத்திலேயிருந்து வந்தியத்தேவன் மேற்கூறிய சம்பாஷணைகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான். இடையிடையே கரிகாலரின் வெறி மூர்த்தண்யமாகிக் கொண்டிருந்த போது அவன் அவர்களுக்கிடையே போக எண்ணினான். பிறகு அதனால் என்ன விபரீதம் நேரிடுமோ என்று தயங்கினான். அவர்களுடைய உணர்ச்சி மயமான பேச்சு அவனை ஒருபுறத்தில் செயலற்றவனாகச் செய்து கொண்டிருந்தது. நந்தினி தன்னுடைய தந்தை இன்னார் என்று கூறியது மட்டும் அவன் காதில் நன்றாக விழவில்லை. ஆனால் அவள் என்ன சொல்லியிருக்கக்கூடும் என்று அவன் மனதில் ஓர் ஊகம் உண்டாயிற்று. அது அவனைத் 'திடுக்கிடச் செய்தது' என்றாலும், வேறு எந்தவிதமாகக் கூறினாலும், அது வெறும் சம்பிரதாயமாகவே இருக்கும். அம்மாதிரி ஒரு பெரும் அதிர்ச்சியை அவனுடைய அதிர்ச்சிகள் நிறைந்த வாழ்க்கையில் அவன் அநுபவித்ததே யில்லை.

கடைசியாக, ஆதித்த கரிகாலர் அடங்கிய மெல்லிய தழதழத்த குரலில், நந்தினி கூறியதை ஒப்புக் கொள்ளும் முறையில் வார்த்தை சொல்லிக் கொண்டிருந்த போது, அவனுடைய ஆர்வமும் கட்டுக் காவலைக் கடந்தது. அவர் உரத்துச் சத்தமிட்டுக் கொண்டிருந்த வரையில் அவன் அவ்வளவாகப் பயப்படவில்லை; இப்போதுதான் அதிகமாக அஞ்சினான். என்ன செய்யப் போகிறாரோ என்ற பெருங் கவலையினால், யாழ்க் களஞ்சியத்திலிருந்து சிறிது தலையை நீட்டிப் பார்த்தான். பார்வைக்கு இலக்கான இடத்தில் நந்தினியும் கரிகாலரும் இல்லை. ஆனால் வேறொரு காட்சியைக் கண்டான். சுவரில் பதித்திருந்த நிலைக் கண்ணாடியில் அந்தக் காட்சி தெரிந்தது. வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவு துவாரத்தின் வழியாக ஒரு கோரமான முகம் தெரிந்தது. அது மந்திரவாதி ரவிதாஸனுடைய முகந்தான்! அடுத்த கணத்தில் வேட்டை மண்டபத்தின் இரகசியக்கதவு மெதுவாகத் திறப்பதை வந்தியத் தேவன் கண்டான். திறந்த கதவின் வழியாக முதலில் ஒரு புலியின் தலையும் பிறகு அதன் உடலும் வெளிவருவதையும் பார்த்தான். உடனே, அவனுக்கு உடம்பில் உயிர் வந்தது; உள்ளத்தில் ஊக்கம் பிறந்தது; கால் கைகள் செயல் திறன் பெற்றன. யாழ்க் களஞ்சியத்தின் மறைவிலிருந்து தாவி வெளியில் பாய்ந்து செல்ல முயன்றான்.

அச்சமயம் பின்னாலிருந்து அவனுடைய கழுத்தில் வஜ்ராயுதத்தையொத்த ஒரு கை சுற்றி வளைத்துக் கொண்டது. அண்ணாந்து நோக்கினான். காளாமுகக் கோலங் கொண்ட ஓர் ஆஜானுபாகுவான உருவம் கண் முன்னே தெரிந்தது. ஆகா! இவன் யார்? இங்கு எப்படி வந்தான்! இது என்ன இரும்புப் பிடி? கழுத்து நெரிகிறதே! மூச்சுத் திணறுகிறதே! விழி பிதுங்குகிறதே! இன்னும் சில கண நேரம் போனால், உயிரே போய்

விடுமே...! வந்தியத்தேவன் ஒரு பெரு முயற்சி செய்து அந்த இரும்புக் கையின் பிடியைத் திமிறித் தளர்த்திக் கொண்டு வெளியில் பாய்ந்தான். பாய்ந்த வேகத்தில் தரையில் விழுந்தான். தலையிலே ஒரு பெரிய பாறுங்கல்லைப் போட்டது போல் இருந்தது. ஒரு கணம் அவன் கண்களின் முன் கோடி சூரியர்கள் கோடானுகோடி கிரணங்களைப் பரப்பிக்கொண்டு பிரகாசித்தார்கள். அடுத்த கணத்தில் அவ்வளவு சூரியர்களும் மறைந்தார்கள். நாலாபுறமும் இருண்டு வந்தது. வந்தியத் தேவன் அக்கணமே நினைவை இழந்தான்.

*　　*　　*

யாழ்க் களஞ்சியத்திலிருந்து, அதன் வாசலில் கிடந்த வந்தியத் தேவனுடைய உடலை மிதித்துத் தாண்டிக் கொண்டு, ஒரு கோர பயங்கரமான காளாமுக உருவம் வெளிப்பட்டது.

யாழ்க் களஞ்சியத்தின் அருகில் தடால் என்ற சத்தத்தைக் கேட்டு நந்தினி திரும்பிப் பார்த்தாள். காளாமுக உருவம் கையில் கத்தியை உருவிக் கொண்டு தன்னை நோக்கி வருவதைக் கண்டாள். விழிகள் பிதுங்கும்படியான வியப்புடன் அந்த உருவத்தை நோக்கினாள். அவள் வயிற்றிலிருந்த குடல்கள் மேலே ஏறி மார்பையும் தொண்டையையும் அடைத்துக் கொண்டதாகத் தோன்றியது. கண்களைத் துடைத்துக் கொண்டு, எதிரே பார்த்தாள். கரிகாலன் கீழே விழுந்து கிடக்கக் கண்டாள். அவன் உடலில் வீர பாண்டியனுடைய வாள் பாய்ந்திருந்ததையும் கண்டாள்.

அப்போது அவளுடைய தொண்டையிலிருந்து விம்மலும் சிரிப்பும் கலந்த ஒரு பயங்கரமான தொனி எழுந்தது. அது அந்த அறையிலிருந்த கட்டில் முதலிய அசேதனப் பொருள்களைக் கூட நடுங்கும்படி செய்தது.

"அடி பாதகி! சண்டாளி! உன் பழியை நிறைவேற்றி விட்டாயா?" என்று கூறிக் கொண்டே காளாமுக உருவம் அவளை மேலும் நெருங்கி வந்தது.

அதே சமயத்தில் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவின் வழியாக உள்ளே நுழைந்த புலி உருவத்தின் மறைவில் ரவிதாஸனும் பிரவேசித்தான். காளாமுகனைப் பார்த்தவுடனே புலியைத் தூக்கி வீசி எறிந்தான். அந்த அறைக்கு இலேசாக வெளிச்சம் தந்து கொண்டிருந்த விளக்கை அந்தச் செத்த புலியின் உடல் தாக்கியது.

விளக்கு அறுந்து விழுந்தது.

அது அணைவதற்கு முன்னால் ஒரு கண நேரம் மணிமேகலையின் பயப் பிராந்தி கொண்ட முகத்தைக் காட்டியது.

'கிறீச்' சென்று கூவிக் கொண்டு மணிமேகலை அங்கிருந்து ஓடினாள்.

அறையில் காரிருள் சூழ்ந்தது.

அந்தக் காரிருளில் சோகந் ததும்பிய விம்மல் குரலும் வெறி கொண்ட சிரிப்பின் ஒலியும் மரணத்தறுவாயில் கேட்கும் முனகல் ஓசையும் மனிதர்கள் விரைந்து அங்குமிங்கும் ஓடும் காலடிச் சத்தமும் கலந்து கேட்டன. (தொடரும்)

## புதுச் சத்திரத்தில் சுதந்திர தின விழா

திருவள்ளூருக்கருகில் உள்ள திரூர் என்ற சிற்றூரில் சர்க்கார் ஆதரவில் ஆதாரப் பயிற்சிப் பள்ளிக்கூடம் நடந்து வருகிறது. அந்தப் பள்ளியில் முதியோருக்கு இரண்டு வகுப்புகளும் இளையோருக்கு இரண்டு வகுப்புகளுமாக நாலு வகுப்புகள் நடைபெறுகின்றன. சுமார் 160 மாணவர்கள் ஆதாரக் கல்வி ஆசிரியர்களாகப் பயிற்சி பெற்று வருகிறார்கள்.

சென்ற ஆகஸ்டு பதினைந்தாம் தேதி யன்று மேற்படி பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த ஆசிரியர்களும் மாணவர்களும் திரூரிலிருந்து ஐந்து மைல் தூரத்தில் உள்ள புதுச் சத்திரம் என்ற கிராமத்துக்குச் சென்று அங்கு சுதந்திர தின விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினர். காலையில் அக்கிராமத்துத் தெருக்களைக் கூட்டிச் சுத்தம் செய்யும் பணி ஆற்றிச் சுதந்திர விழாவை ஆரம்பித்தார்கள்.

பின்னர், புதுச் சத்திரம் மாந்தோப்பில் வந்து கொடி வணக்கமும் பொதுக் கூட்டமும் நடத்தினார்கள்.

மாவட்டக் கல்வி அதிகாரி திரு கே. பி. எஸ். மணியம் விழாவுக்குத் தலைமை வகித்தார். பள்ளித் தலைமை ஆசிரியர் திரு சுந்தரராஜ ஜேம்ஸ் விழாவுக்கு வந்திருந்தவர்களை வரவேற்றுப் பேசினார். ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் தாயின் மணிக் கொடியைக் கம்பத்தின் உச்சியில் ஏற்றிப் பறக்க விட்டார். "கல்கி" ஆசிரியர் சுதந்திர தினத்தின் சிறப்பையும் ஆதாரக் கல்வியின் அவசியத்தையும் பற்றிப் பேசினார்.

திரு செல்லையாவும், திரு இராசமாணிக்கமும் நன்றி கூறினார்கள். நாட்டு வணக்கம் பாடப் பெற்று விழா இனிது முடிந்தது. மாணவ ஆசிரியர்களால் சமைக்கப்பட்ட சர்க்கரைப் பொங்கல் எல்லாருக்கும் வழங்கப்பட்டது.



பல் சுத்தத்தினால் சுகம் பல்லால்
அவதியுறுகிறீர்களா?

**காலஹரணம்செய்யாதீர்கள் ... இன்றே நீங்கள் பல் வைத்தியரைக் காணுங்கள்; வீடு திரும்புகையில் ஒரு ட்யூப் 'பினாகாவும்' வாங்குங்கள்.**

சாஸ்திரீய முறையில் தயாரிக்கப்பட்ட "பினாகா" பற்பசை, பற்சிதைவு, பலமற்ற ஈறுகள், வாய் நாற்றம் (பயோரியா) இவற்றிற்குக் காரணமாயுள்ள அபாயகரமான கிருமிகளை எதிர்த்து அறவே ஒழிக்கிறதென்பது பல நடவைகளில் செய்யப்பட்ட வைத்தியப்பரீக்ஷையினால் நன்கு நிரூபிக்கப்பட்டுள்ளது.

## பினாகா (ரோஸ்)

சக்தி வாய்ந்த "ஸல்போரிஸினோலியட்" என்னும் பொருள் கொண்டது.

## பினாகா க்ரீன்

இயற்கையின் ஆச்சரியதுர்க்கந்த நாசினியான சுத்தி செய்த க்ளோரோபில்லும் கொண்டது.







"ஸீபா" வின் விசேஷ குணம் பொருந்திய ஒரு பற்பசை.

ரேடியோ சிலோனில் பிரதி திங்கட்கிழமை மாலை 8 மணிக்கு பினாகா ஹிட்பரேட்டையும் பிரதி ஞாயிறு மாலை 8 மணிக்கு பினாகா கீதமாலையையும் கேளுங்கள்.

CBK 11073 TAMIL

★ ★ ★ மகாகவி ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியாரின் இளைய குமாரியான ஸ்ரீமதி சகுந்தலா பாரதியின் கணவர் ஸ்ரீ கே. நடராஜன் பல ஆண்டுகளுக்கு முன்னர் கடல் கடந்து சென்று போர்னியோ தீவில் அரசாங்க உத்தியோகம் பார்த்து வருகிறார். சென்ற மாதத்தில் விடுமுறை பெற்று அவர் இந்தியாவுக்கு வந்திருந்தார். அவருடைய அநுபவங்கள் சிலவற்றைப் பின் வரும் கட்டுரையில் எழுதியிருக்கிறார். அவை படிப்பதற்கு உற்சாகமளிப்பவை அல்ல. ஆயினும், கட்டுரையில் கண்டுள்ள உண்மை அம்சங்களைக் கருதியே வெளியிட்டிருக்கிறோம்.

# சுதந்திர இந்தியாவில் என் அனுபவங்கள்

கே. நடராஜன்

நான் இந்தியாவை விட்டுச் சென்று கால் நூற்றாண்டுக்குமேல் ஆகிவிட்டது. ஜீவனத்துக்காக வெளி நாட்டுக்குச் சென்றுள்ள நான் எப்போதாவது இந்தியாவுக்கு வருவது உண்டு. வந்தால், இங்கு சிறிது காலமே தங்கி இருக்க முடியும்.

இதற்கு முன் நான் இந்தியாவுக்கு வந்தபோதெல்லாம் இந்த நாட்டைப் பிரிட்டிஷார் ஆட்சி செய்து கொண்டிருந்தனர். அவர்களுடைய முறைகளும் கொள்கைகளும் எப்போதும்போல் ஒரே விதமாக இருந்தன.

அப்போது இங்கு சுதந்திரப் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. எந்தச் சுதந்திர உரிமைக்காகப் பிரிட்டிஷாரின் மூதாதையர்கள் போராடி உயிர்த் தியாகம் செய்தார்களோ, அந்தச் சுதந்திர உரிமையை இந்தியர்களுக்கு வழங்கப் பிரிட்டிஷார் மறுத்து வந்தனர். இந்தியர்களின் சுதந்திரப் போராட்டத்தைப் பிரிட்டிஷ் சர்க்கார் ஈவு இரக்கமின்றி நசுக்கி வந்தார்கள்.

ஆனால் 1953-ம் ஆண்டில் நான் தாய் நாட்டுக்கு வந்தபோது, நிலைமை முற்றிலும் மாறிவிட்டது. காந்திஜி, ஸி. ஆர். தாஸ், திலகர், கோகலே, லஜபதிராய் முதலிய மகாபுருஷர்களின் வாரிசுதார்களான நமது தலைவர்களே ஆறு வருஷங்களாகச் சுதந்திர சர்க்கார் நிர்வாக பீடத்தில் அமர்ந்திருக்கிறார்கள். நமது அபிலாஷையும் லட்சியமும் வெற்றி பெறுவதற்கு முக்கியப் பொறுப்பாளியான காங்கிரஸ் சர்க்கார் அதிகாரத்தில் இருந்து வருகின்றனர்.

அப்படி யிருந்தும், நான் எதிர்பார்த்துக் கொண்டு வந்தபடி இந்நாட்டுப் பொதுமக்களிடையில் 'சுதந்திரமடைந்து விட்டோம்' என்ற குதூகலத்தைக் காணமுடியவில்லை. முன்னைக் காட்டிலும் குறை கூறுதல் தான் அதிகமாயிருப்பதைக் கண்டேன். இதற்குரிய காரணங்களையும் ஒருவாறு தெரிந்து கொண்டேன்.

ரயிலில் பிரயாணம் செய்யும் போதெல்லாம், அதிகாரிகளின் எதேச்சாதிகாரத்தையும் கொடுமையையும் பற்றியே பேச்சாக இருக்கிறது. சிப்பந்திகளின் மிகவும் நியாயமான கோரிக்கைகளுக்குக்கூட இணங்க அதிகாரிகள் மறுத்து விடுகிறார்களாம். அதன் காரணமாகச் சீற்றம் கொண்ட சிப்பந்திகள் தங்களுடைய கோபத்தைப் பொது ஜனங்களிடம் காட்டுகிறார்கள்.

சிப்பந்திகளிடையே துடுக்குத்தனமும், அலட்சிய புத்தியும் தாண்டவமாடுகின்றன.

பாங்கி, தபால் ஆபீஸ், வருமான வரி ஆபீஸ், கலெக்டர் ஆபீஸ் முதலிய பல காரியாலயங்களிலும் ஒரு காரியத்தை முடித்துக் கொண்டு வர மிகவும் தாமதம் ஏற்படுகிறது.

டில்லியில் உள்ள இம்பீரியல் பாங்கியில் ஒரு டிமாண்ட் டிராப்டுக்குப் பணம் வாங்க எனக்கு இரண்டு மணி நேரம் ஆயிற்று. ஆனால் கல்கத்தாவில் உள்ள ஐரோப்பியர் ஸ்தாபனமான ஹாங்காங் பாங்கியில் அது போன்ற ஒரு டிராப்டுக்குப் பத்தே நிமிஷத்தில் பணம் வாங்கி விட்டேன்.

பாரங்கள் வாங்குவதற்காக வருமான வரி ஆபீசுக்குச் சென்றிருந்தேன். அங்குள்ள சிப்பந்திகள் என்னை ஒரு மணி நேரம் காக்க வைத்தார்கள். கடைசியில், மறுபடியும் சாயங்காலம் வரும்படி என்னிடம் கூறினார்கள்.

முன்பெல்லாம் தபால் ஆபீஸ் திறமைக்கும் நேர்மைக்கும் இருப்பிடமாக இருந்து வந்தது. ஆனால் இப்போதோ கடிதங்களின் மீது ஒட்டப்படும் அதிக விலை ஸ்டாம்புகள் மாயமாய் மறைந்து விடுகின்றன. வெளி நாடுகளிலிருந்து மணி ஆர்டர்கள் மூலம் வரும் தொகைகள் தற்காலிகமாகச் சொந்த உபயோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு விடுகின்றன; அல்லது மிகவும் தாமதித்துப் பட்டுவாடா செய்யப்படுகின்றன.

வீண் தொல்லையும் தொந்தரவும் கொடுக்கும் விதிகள், அர்த்தமற்ற சம்பிரதாயச் சடங்குகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பது, அற்பத் தவறுகளுக்காக மனுக்களைத் திருப்பி அனுப்புதல் முதலியவை சுயமதிப்புள்ள எவருக்கும் வெறுப்பை உண்டுபண்ணுகின்றன.

மூன்றாவது நபர் யாரையோ குறிப்பிடுவது போல், "இதன் மூலம் அவர் அறிவிக்கப்படுகிறார்" என்ற வாசகம் சர்க்கார் கடிதங்களில் உபயோகிக்கப் படுவது இன்னும் நின்றபாடில்லை.

நமது நாட்டின் பொருளாதார சுபிட்சம் நமது குடிசைத் தொழில்களின் வளர்ச்சியையே பொறுத்திருக்கிறது. ஆனால் அதிகார வர்க்கமோ, அத்தொழில்களின் முன்னேற்றத்துக்குப் பல முட்டுக்கட்டைகள் போடுகின்றது.

குடிசைத் தொழில் கமிஷனின் சிபார்சுகளைப் பார்த்த எனது நண்பர், சென்னை சர்க்காரிடமிருந்து இறக்குமதி பர்மிட் பெற்று ஆணிகள் உற்பத்தி செய்யும் யந்திரம் ஒன்றை விலைக்கு வாங்கினார். ஆனால் அதை ஓட்டுவதற்கு லைசென்ஸ் கொடுக்க இந்திய சர்க்கார் மறுத்து விட்டார்கள்.

உடனே நண்பர் டில்லிக்கு ஓடினார். அதிகாரிகளின் பேட்டிக்காக மூன்று நாட்கள் தவம் கிடந்தார். சம்பந்தப்பட்ட காரியதரிசியைப் பேட்டி கண்டார். கடைசியில் ஒரு பலனும் ஏற்படவில்லை.

பிறகு அவர் மந்திரியைப் பேட்டி கண்டார். நண்பரிடம் இரக்கம் கொண்ட மந்திரியின் தயவினால் அவருக்கு லைசென்ஸ் கிடைத்தது.

இத்தகைய சிறிய விஷயங்களுக்குக் கூட ஒருவர் நாள் கணக்கில் காத்திருந்து போராட வேண்டியிருக்கிறது, பணமும் செலவு செய்ய வேண்டியிருக்கிறதென்றால், வழி தெரியாத ஏழைகளின் பாடு அதோ கதிதான்!

இன்று உலகம் எங்கும் லஞ்ச ஊழல் தாண்டவமாடுகிறது என்பது உண்மையே. எனினும் இந்தியாவில்தான் அது மாமூல் வழக்கம் என்று அசட்டை செய்யப்படுகிறது. பியூனையும் குமாஸ்தாவையும் திருப்தி செய்யாமல் சாதாரண காரியங்களைக் கூட நிறைவேற்றிக் கொள்ள முடிவதில்லை. இதனால் பொது ஜனங்களின் நிலைமை மிகவும் கஷ்டமாகி விடுகிறது.

கௌரவ ஏணியின் உச்ச ஸ்தானத்தில் வீற்றிருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கும் சர்க்காரும் சர்க்கார் ஊழியர்களும் தங்களுடைய மேற்படி எண்ணத்தை இனி சிறிதும் தாமதமின்றி விட்டு விட வேண்டும். தாங்கள் ஜனங்களின் ஊழியர்கள் என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்: தாங்கள் ஒரு தர்ம ஸ்தாபனத்தை நிர்வகிப்பதாக எண்ண வேண்டும். தங்களுக்கு மேல் இருக்கும் உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு மாத்திரமல்ல, தேசத்துக்கும் கடவுளுக்கும் தாங்கள் பொறுப்பாளிகள் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

சிற்சில சமயங்களில் அதிகாரிகள் காரணமின்றியும் அநியாயமாகவும் குற்றம் சாட்டப்படுகிறார்கள் என்பது உண்மையே. ஆனால் அத்தகைய குற்றச்சாட்டுகளை சர்க்கார் ஊழியர்கள் பொறுமையுடனும் தைரியத்துடனும் சகித்து நின்று, தங்கள் யோக்கியப் பொறுப்பையும், நேர்மையையும், திறமையையும் ஜனங்கள் உணர்ந்து கொள்ளும்படி செய்ய வேண்டும்.

நமது சர்க்காரைப் போல் புதிதாக ஜனித்துள்ள சர்க்கார், கொள்கைகளில் உறுதியும், வாக்குறுதிகளை நிறைவேற்றும் ஆற்றலும் பெற்றிருந்தால் தான் பழைய சகதியிலிருந்து விடுபட்டு உன்னத ஸ்தானத்தை அடைய முடியும்.

* * *

நமது நாட்டில் சிலவி வரும் வண்டிப் போக்குவரத்து விதிகள் மிகவும் அதிருப்திகரமாக இருக்கின்றன. சிங்கப்பூரிலும் மலேயாவிலும் அமுலில் இருந்து வரும் விதிகளுடன் ஒப்பிடும்போது இங்குள்ள போக்குவரத்து விதிகள் மட்ட ரகமானவை என்றே கூற வேண்டும்.

வண்டிகளின் போக்குவரத்தைக் கண்காணிக்கும் கடமையில் ஈடுபட்டுள்ள கான்ஸ்டேபிள் தமது நண்பருடன் உல்லாஸமாகப் பேசிக் கொண்டிருக்கும் விபரீதத்தை இந்தியாவைத் தவிர வேறு எங்கும் காண முடியாது.

பாதசாரிகளோவெனில், ரஸ்தா ஒழுங்கு முறையை அனுசரித்து நடப்பதில்லை.

சட்டம், சமாதானம் இவற்றைப் பாதுகாக்கும் அதிகாரிகளிடம் எதிர்பார்க்கப்படும் ஒழுங்கு, சுறுசுறுப்பு, ஜாக்கிரதை முதலிய அம்சங்கள் நமது அதிகாரிகளிடம் போதிய அளவு இல்லை.

இந்தியாவில் கம்யூனிஸ்டுக் கொள்கை பரவாமல் பாதுகாக்க வேண்டுமாயின், வேலையில்லாக் கஷ்டத்தைத் தடுக்க சர்க்கார் முயற்சிக்க வேண்டியது அத்தியாவசியம். அதே சமயம் கல்வி பரவுவதற்கும் சர்க்கார் தகுந்த முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

தற்போதையக் கல்வி முறை சமூகத்துக்குப் பாரமாக இருப்போரை உற்பத்தி செய்து வருகிறது. எனவே அம்முறை மாறி, திறமை வாய்ந்த தொழில்களில் தேர்ச்சியளிக்கும் கல்வி முறை ஏற்பட வேண்டும். எல்லோரும் இளம் வயதிலேயே தொழில் துறைகளில் ஈடுபடுவதற்குக் கல்வி உதவியாக இருக்க வேண்டும்.

கட்டாய ஆரம்பக் கல்வி அளித்தல் இன்னும் ஏட்டளவில்தான் இருந்து வருகிறது. வேலையில்லாக் கஷ்டத்துக்குப் பரிகாரம் வெகு தொலையில் இருப்பது போல் தோன்றுகிறது.

ஜனங்களிடையே கம்யூனிஸ்டுக் கொள்கை பரவாமல் தடுக்க வேண்டுமாயின், அவர்களுக்குப் போதிய உணவு கிடைக்கும்படியான வழி வகை செய்ய வேண்டும்.

கைத்தறித் தொழிலாளரின் படுமோசமான நிலைமையைக் கண்ணாரக் கண்டேன்.

ஆலைத் தொழிலின் நலத்துக்காக கைத்தறி நெசவாளர்களின் கஷ்டங்களை அலட்சியம் செய்வது, காட்டில் புரட்சியை வரவேற்பதற்கு ஒப்பாகும்.

இந்தியாவின் நற் பெயருக்குக் களங்கத்தை உண்டு பண்ணக்கூடிய பிச்சைக்காரர்களின் தொல்லைக்கும் சர்க்கார் உடனடியாகப் பரிகாரம் தேட வேண்டியது அவசியம்.

இந்தியா கடைப் பிடிக்கும் அயல்நாட்டுக் கொள்கையினால் இந்தியாவின் மதிப்பு வெளிநாடுகளில் உயர்ந்து வருகிறது. இதைக் குறித்து வெளி நாட்டிலிருந்த போது நான் பெருமிதம் கொண்டிருந்தேன். ஆனால் இந்தியாவில் நமது மக்களின் நிலைமையையும் அதிகாரவர்க்கத்தின் ஊழலையும் பார்த்த பிறகு அந்தப் பெருமிதம் மிகவும் குறைந்து போய்விட்டது.

உள்நாட்டில் மக்கள் எல்லாத் துறைகளிலும் முன்னேற்ற மடையாத வரையில், வெளி நாடுகளில் நாம் அடைந்துள்ள கௌரவம் எத்தனை காலம் நிலைத்து நிற்க முடியும்!


3 வாசனைக் கலாரத்னங்கள்

கம் கம் ஜவாஜ் * கம்பால் * கமகர்

அகர்பத்திகள்

டி. எஸ். சுகந்தாலயா,

வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

சென்னை ஸ்டார் டாக்கீஸில்

வெகு விமரிசையாக ஓடும் இந்தியாவின் உன்னதச் சித்திரத்தை

("இரண்டு ஏகரா நிலம்")'

நீங்கள் பார்த்தீர்களா?




கதை தமிழில் சொல்லப்படும்

இதுவரையில் பார்த்திராத படத்தை இப்பொழுது கண்டு களியுங்கள்

தினசரி மூன்று காட்சிகள்: 3-30, 6-30 & 9-30 மணிக்கு

ANDHRA DISTRIBUTORS

**POORNA PICTURES - VIJAYAWADA**




"கிரி"

"கமலு!" என்று உரக்கக் கத்தினான் ராஜகோபாலன்.

"இதோ வந்து விட்டேன்!" என்று ஓடி வந்தாள் கமலா.

"நேற்றைக்குக் கொடுத்தேனே பணம், அதைக் கொண்டு வா!" என்றான்.

அவள் தயங்கினாள்.

"உம், எனக்கு நேரமாகிறது, சீக்கிரம்" என்று அவசரப்படுத்தினான்.

"செலவழிந்து விட்டது" என்று கூறி மென்று விழுங்கினாள் கமலா.

"என்ன, அதற்குள்ளேயா! இரண்டு ரூபாய் கொடுத்தேனே!"

"இல்லை, வந்து......" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தாள் அவள்.

"இல்லையாவது, வந்தாவது. குடும்ப நிலைமை தெரியாமல் இப்படிப் பொறுப்பற்றுக் குடித்தனம் நடத்தினால்...! உம், உன்னைச் சொல்வதில் குற்றமில்லை. எல்லாம் என் தலைவிதி!"

அதற்கு மேல் கமலாவால் பேசாமல் சும்மா இருக்க முடியவில்லை.

"என்னத்தைப் பிரமாதமாக என்னிடம் கொடுத்து விட்டீர்கள், அதை நான் செலவழித்து விட்டேன்! இரண்டு ரூபாய் பிச்சைக் காசு!"

"பிச்சைக்காசுதான்! அதை ஏன் தொட்டாய்!" என்று கத்தியபொழுது அவனது கோபம் அளவு கடந்து விட்டது.

"உங்கள் தரித்திர நிலைமை இப்படி என்று எனக்குத் தெரிந்திருந்தால் நான் அதை......"

"என்ன சொன்னாய்!" — அடுத்த கணம் கமலாவின் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது.

அதற்கு மேலும் ராஜகோபாலன் அங்கே நிற்பதற்கு விரும்பவில்லை. காரியாலயத்திற்குக் கிளம்பி விட்டான்.

அந்த அதிர்ச்சியில் கமலாவுக்கு ஒரு வினாடி ஒன்றுமே புரியவில்லை. சிறிது நேரம் கழித்துத் தான் அவளுக்கு நடந்த சம்பவங்கள் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. அப்பொழுதிருந்த மன நிலையில் அவளுக்குச் சாப்பாடு கூட வேண்டியிருக்கவில்லை. காமிரா அறையில் அப்படியே செயலற்று உட்கார்ந்து விட்டாள். அவளது குமுறிய உள்ளம் அவளது வாழ்க்கையைப் பற்றி ஆராயத் தொடங்கியது.

அவள் ராஜகோபாலனுடன் தனிக் குடித்தனம் நடத்தத் தொடங்கி ஆறு மாத காலம் தான் ஆகியது. இந்த நாட்களில் என்றைக்குமே அவள் வாழ்க்கையில் இம்மாதிரியான சம்பவம் ஏற்பட்டதில்லை. எல்லா வீடுகளிலும் போல் அவர்கள் வீட்டிலும் அவ்வப்பொழுது தம்பதிகளிடையே சிறு மனப் பூசல்களும், ஊடல்களும் ஏற்பட்டிருக்கின்றன. இருந்த போதிலும் அவனோ அல்லது அவளோ அவைகளைப் பெரிதாக்கித் தங்கள் வாழ்க்கையை வேம்பாக்கிக் கொள்ள விரும்பவில்லை இதை அவர்கள் இருவரும் நன்கு உணர்ந்திருந்தனர் என்பதற்கு இது நாள் வரையில் அவர்கள் சுமுகமாக நடத்தின வாழ்க்கையே போதிய சாட்சியமாகும்.

ஆனால் இன்று ராஜகோபாலன் அவளிடம் நடந்து கொண்ட விதத்தைக் கண்டு பயந்து போய் விட்டாள். அதை மறுபடியும் நினைத்துப் பார்க்கக் கூடக் கமலாவின் மனம் விரும்ப வில்லை. ராஜகோபாலன் தன்னிடம் அவ்வளவு முரட்டுத் தனமாக, நடந்து கொள்வான் என்று அவள் எதிர் பார்க்கவே யில்லை. உண்மையில் அவள் நினைப்பது போல ராஜகோபாலன் அத்தகைய முரட்டுச் சுபாவம் படைத்தவனா!... இதற்கு அவளால் பதில் அளிக்க முடியவில்லை. அப்பொழுது அவள் மனம் அவளது கடந்த கால இன்ப நாட்களை அப்படியே படம் பிடித்துக் காட்டியது.

அப்பொழுது கமலா கல்யாண வயதை அடைந்திருந்தாள். ஆனால் அவளோ தன் நிலையைக் கொஞ்சமும் உணர்ந்தவளாகக் காணப்பட வில்லை. வேடிக்கையும் விளையாட்டும் அவளுக்கு வேண்டியிருந்தன. சொல்லப் போனால் அவளது குழந்தை உள்ளம் இன்னமும் அவளை விட்டு மறைய வில்லை. ஓரொரு சமயம் அவளது பெற்றோர்கள் அவள் கல்யாண விஷயமாகப் பேசிக் கொள்வது அவள் காதில் விழும். ஆனால் அவைகளெல்லாம் அவள் உள்ளத்தைத் தொட்டனவாகக் காணப்பட வில்லை.

இந்நிலையில்தான் ஒரு நாள் அவள் வாழ்க்கையில் குறுக்கிட்டான் ராஜகோபாலன். அச்சம்பவம் அவள் மனத்தை விட்டு அகலவே யில்லை. இன்றைக்கு நினைத்துக் கொண்டாலும் அது அவள் உள்ளத்தின் உணர்ச்சியைக் கிளறி விடுவதாய் இருக்கிறது. என்ன இருந்தாலும் அவள் கணவனைச் சந்தித்த முதல் சந்திப்பு அல்லவா அது! அதை அவளால் மறக்க முடியுமா என்ன! இல்லை, எந்தப் பெண்ணால்தான் மறக்க முடியும்!

அன்று மாலை இருந்திருந்தாற் போல் மேகங்கள் இருண்டன. இடி இடித்தது. அதைத் தொடர்ந்தாற்போல் மழையும் 'சோ'வென்று பெய்யத் தொடங்கியது. அப்பொழுது அவ்வழியே போய்க் கொண்டிருந்த ராஜகோபாலன் அதைச் சற்றும் எதிர்பார்க்கவே யில்லை. அச்சமயம் எங்காவது சற்று ஒதுங்கிப் போவதைத் தவிர வேறு வழி யில்லை என்று பட்டது அவன் மனத்திற்கு. ஆகையால் 'சட்'டென்று அருகில் இருக்கும் வீட்டுத்

திண்ணை மேல் ஏறி நின்றான். நல்ல வேளையாக வீட்டுக் கதவு சாத்தப்பட்டு உள்பக்கம் தாளிடப் பட்டிருந்ததால் அவன் தயக்கமில்லாமல் நின்றான். மழை சிறிது நேரத்தில் நின்று விடும். நின்றதும் தன் நடையைக் கட்டலாம் என்பது அவன் எண்ணம். ஆனால் மழையோ வலுத்துப் பெய்யத் தொடங்கியது. நிற்கும் வழியாகத் தெரியவில்லை. மழைச் சாரல் வீட்டுத் திண்ணையைப் பாதி நனைத்து விட்டது. ராஜகோபாலன் தனது தேகத்தை ஒடுக்கிக் கொண்டு சுவரை ஒட்டினாற் போல் நின்று கொண்டான். இதுவரையில் தான் அங்கே நிற்பதை அந்த வீட்டினர் யாரும் கவனிக்க வில்லை என்பது அவன் எண்ணம்.

ஆனால் திண்ணையை ஒட்டினாற்போல் இருக்கும் உள் பக்கத்து அறையின் ஜன்னல் அருகே நின்று கொண்டு இரண்டு கண்கள் அவனைக் கவனித்துக் கொண்டிருக்கின்றன என்பதை, பாவம், அவன் அறியவில்லை. சிறிது நேரத்திற்கெல்லாம் மழைச் சாரல் அதிகமாக அடிக்கத் தொடங்கி ராஜ கோபாலனது உடைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக நனைக்க லாயிற்று.

அதற்கு மேலும் அவன் நிலையைப் பார்த்துக் கொண்டிருக்கக் கமலாவின் உள்ளம் இடம் கொடுக்கவில்லை. அவனை உள்ளே வந்து தங்கிப் போகும்படி எப்படிச் சொல்வது! அவள் தகப்பனார் வீட்டில் இல்லை. அம்மாவோ உள்ளே வேலையாக இருக்கின்றாள். அப்படியே நனைய வேண்டியது தானா அவன்!

அப்பொழுது தான் அவள் வாழ்க்கையிலேயே அவள் உள்ளம் முதல் தடவையாகத் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கியது. முன்பின் தெரியாத ஒரு புது மனிதன்—அதுவும் ஒரு இளைஞன்! அவனிடம் ஒரு வயது வந்த பெண் வலியச் சென்று எப்படிப் பேசுவது! அதற்கு ஒரு அலாதியான தைரியமும் மனத் துணிச்சலும் அல்லவா வேண்டும்! அப்படியென்றால் கமலாவினிடத்தில் அது இல்லையா!—இப்படி அவள் யோசித்துக் கொண்டு நிற்கையில் சாரல் இன்னும் அதிகமாக அடிக்கத் தொடங்கியது.

கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு "மழை இப்போதைக்கு விடாது போலிருக்கிறதே!" என்று தனக்குத் தானே சொல்லிக் கொள்ளுவது போல் ராஜகோபாலன் காதில் விழும்படி சொன்னாள் கமலா.

பேச்சுக் குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்த ராஜகோபாலன் கமலாவைக் கண்டதும் துணுக்குற்றான். அந்நிலையில் அவளுடன் பேசுவது அவனுக்கு உசிதமாகப் படவில்லை. இருந்த போதிலும் அவள் தன்னைப் பார்த்தே அவ்விதம் பேசியிருக்க வேண்டும் என்று அவன் மனத்திற்குப்பட்டது.

"ஆமாம்" என்று சொல்வதுடன் அவன் தன் பேச்சை நிறுத்திக் கொள்ளவில்லை.

"இங்கே நிற்கக்கூட முடியாமல் சாரல் அடிக்கிறது. மழை எப்பொழுதுதான் நிற்குமோ தெரியவில்லை" என்றான் மேலும் தொடர்ந்து.

கமலாவுக்கு இப்பொழுது ஒரு அசட்டுத் தைரியம் வந்து விட்டது.

"அதனாலென்ன! உள்ளே வந்து இருங்கள், எவ்வளவு நேரம் அப்படியே நனைந்து கொண்டு நிற்க முடியும்!" இதைச் சொல்லிவிட்டு அவள் சும்மா இருக்கவில்லை. வாசற்கதவை வந்து திறந்தாள். ராஜகோபாலன் கொஞ்சம் தயங்கினான். "பரவாயில்லை. உள்ளே வந்து இப்படி உட்கார்ந்திருங்கள். மழை நின்றதும் போகலாம்" என்று அவனுக்கு அந்த அறையைச் சுட்டிக் காண்பித்து விட்டு மறைந்து விட்டாள் கமலா.

ராஜகோபாலன் உட்கார்ந்தவாறே அந்த அறையைச் சுற்றி ஒரு கண்ணோட்டம் செலுத்தினான். அவனால் ஒன்றும் அறிந்து கொள்ள முடியவில்லை. அப்பொழுதிருந்த அவன் மன நிலையும் அதற்கு ஏற்றதாக இல்லை.

சிறிது நேரத்திற்கெல்லாம் மழை நிற்பது போல் காணப்பட்டது. ராஜகோபாலன் கிளம்பலாம் என்று நினைத்த பொழுது யாரோ வரும் காலடி ஓசை கேட்டது. அதைத் தொடர்ந்தாற் போல் நடுத்தர வயதுடைய ஒருவர் குடையை மடக்கியவாறு உள்ளே வந்தார். அவர் கமலாவின் தந்தையாக இருக்கக் கூடும் என்று ராஜ கோபாலன் ஊகித்தான்.

அவர் உள்ளே வந்ததும், "மன்னிக்க வேண்டும்" என்று எழுந்தான் ராஜகோபாலன்.

"பரவாயில்லை, உட்காருங்கள்! நீங்கள் யார் என்று தெரியவில்லையே! எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்களா என்ன!" என்று கேட்டார் அவர்.

"இல்லை. மழைக்காக..." என்று நிறுத்தினான் ராஜகோபாலன். அதற்குள் கமலா வந்து குறுக்கிட்டாள்.

"இல்லை, அப்பா' மழைக்காக நம் திண்ணையில் ஒதுங்கி யிருந்தார். திண்ணையில் சாரல் அதிகமாக அடிக்கத் தொடங்கவே நான்தான்......" என்று தயங்கியவாறு சொன்னாள்.

"ஓகோ! அப்படியா! நல்ல காரியம் செய்தாய் கமலா! உனக்குக் கூட அப்படிச் செய்ய வேண்டும் என்று தோன்றியதா என்ன!" என்று சொல்லிச் சிரித்தார் அவர்.

"போங்களப்பா!" என்ற பொய்க் கோபத்துடன் கமலா ராஜகோபாலன் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினாள். அவன் தன்னையே அது வரையில் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டவுடன் அவள் முகம் வெட்கத்தால் சிவந்தது. அப்பொழுது அவள் நடந்து கொண்ட விதத்தைத்தான் அதற்கப்புறம் எத்தனை தரம் சொல்லி அவளைக் கேலி செய்திருக்கிறான் ராஜகோபாலன். அவனா இன்று அவளிடம் இப்படி......

இந்த இடத்தில் அவள் சிந்தனை சிறிது தடைப் பட்டது. அதற்கப்புறம் அவனும் அவள் தந்தையும் என்னென்னமோ பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் பேச்சிலிருந்து கமலா அறிந்து கொண்டவை இவைதான்.

ராஜகோபாலனுக்கு ஒரு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் வேலை. பெற்றோர்கள் இல்லை. அவன் அண்ணா ஒருவர்தான் ஊரிலேயே நிலபுலன்களைப் பார்த்துக் கொண்டு குடும்பம் குடித்தனமாக இருக்கிறார். மற்றபடி ராஜகோபாலன் ஒரு தனிக் கட்டை. இன்னும் சம்சாரத்தில் ஈடுபடவில்லை.

சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் மரியாதைக் காகச் சில உபசார வார்த்தைகள் சொல்லிவிட்டு விடைபெற்றுக் கொண்டான். போகும்பொழுது தான் அவன் கமலாவின் பக்கம் ஒருமுறை தன் பார்வையைச் செலுத்தினானே! அதில் அவன் நன்றியறிதல் மட்டுமல்ல; இன்னும் என்னென்னமோ கலந்திருந்தன.

அதற்குப் பிறகு கமலாவின் நடத்தையில் ஒரு அதிசய மாறுதல் ஏற்பட்டது. அவள் நடத்தையில் மட்டுமென்ன, அவள் வாழ்க்கையிலேயே ஒரு மாறுதல்!—ஆம், அது அவளை ராஜகோபாலனுக்கு மனைவியாக்கியது. அதற்குப் பிறகு அடிக்

கூடி அவர்கள் வீட்டுக்கு வந்து உறவாடத் தலைப்பட்ட ராஜகோபாலன் நாளடைவில் அவ்வீட்டில் எல்லோரையும் — முக்கியமாக கமலாவையும் கவர்ந்து விட்டான். இன்னும் வேறென்ன வேண்டும்! காரியங்கள் துரிதமாக நடந்து அவனே அவ்வீட்டு மாப்பிள்ளை யாகியது.

கல்யாணம் ஆகித் தனிக் குடித்தனம் நடத்தத் தொடங்கிய பொழுது அவள் கட்டிய மனக் கோட்டைகள் தான் எவ்வளவு! இந்தக் குறுகிய காலத்திற்குள்ளேயே அவள் வாழ்க்கையில் கசப்பு தோன்ற ஆரம்பித்து விட்டதென்றால் காலம் முழுவதும் அவள் எப்படி ராஜகோபாலனுடன் வாழ்க்கை நடத்தப் போகிறாள்! இதை நினைத்ததும் அவள் கண்களில் நீர் துளித்தது.

* * *

"என்ன கமலா! இன்னும் சாப்பிடவில்லையா என்ன!" என்று கேட்டுக்கொண்டே வந்தாள் பக்கத்து வீட்டு விசாலம். குடும்பத்தைப் பொறுப்பேற்று நடத்துவதில் விசாலத்திற்கு நல்ல அனுபவம் உண்டு. கமலா தனிக் குடித்தனம் வந்ததிலிருந்து விசாலம் அவளுக்கு உயிருக்குயிராய் விட்டாள். கமலாவின் குழந்தை உள்ளமும் விசாலத்தைக் கவர்ந்து விட்டது. அவள் ஒருத்தியிடம்தான் கமலா எதையும் மனம் விட்டுப் பேசுவாள்.

"என்ன கமலா! அழுறாயா என்ன!" என்று அவள் தோளைப் பிடித்தாள் விசாலம். பிறகு "ஏன், என்ன நடந்தது கமலா!" என்று கேட்டுக்கொண்டே அவள் கண் துடைத்தாள்.

கமலா ஒரு புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, "ஒன்றுமில்லை அக்கா! ஏதோ பழைய நினைவுகள்" என்று கூறிக்கொண்டே எழுந்தாள்.

"நன்றாக நடிக்கிறாயே கமலா! என்னிடம் சொல்லக்கூடாத விஷயமாக்கும்!"

"இல்லை அக்கா அப்படியெல்லாம் ஒன்றுமில்லை" என்றாள் கமலா.

"சரிதான், நான் வந்தது உனக்குப் பிடிக்கவில்லை. அப்படித்தானே! நான் போகிறேன்" என்று எழுந்தாள் விசாலம்.

"அதற்குள் கோபித்துக் கொள்கிறாயே" என்று அவள் கையைப் பிடித்துக் கொண்டாள் கமலா.

"என்னதான் நடந்தது! என்னிடம் சொல்லேன்!" என்று அவள் முகவாய்க் கட்டையைத் தூக்கி நிமிர்த்தினாள் விசாலம்.

"ஒன்றுமில்லை. இன்று காலையில் அவர்..." என்று ஆரம்பித்தாள் கமலா. அதற்குமேல் அவளிடமிருந்து வார்த்தைகள் எழும்பாதவாறு சொல்லி முடியாத துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டு வந்தது அவளுக்கு.

"ஏன், அவர் கோபித்துக் கொண்டாராக்கும். அப்படித்தானே!"

"ஆம்" என்று தலையசைத்தாள் கமலா.

"அடி அசடே! இதற்காகவா அழுவது! இந்தப் புருஷர்களே இப்படித்தான். அர்த்தமில்லாமல் கோபித்துக் கொள்ளுவது. அதுவும் காலை வேளையில் அவர்களுக்கு ஆபீசுக்குக் கிளம்பும் அவசரத்தில் தலைகால் புரியாது. பின்னால் தானே வருந்துவார்கள். வேண்டுமானால் நீயே பாரேன். சாயந்திரம் 'அவர்' வந்து உன்னிடம் மன்னிப்புக் கேட்கப் போகிறாரா, இல்லையா என்று! அப்புறம் அவரது அணைப்பில் நீ எல்லாவற்றையும் மறந்து விடுவாய்! அப்படித்தானே கமலா!"

"போங்கள், அக்கா! அப்படியெல்லாம் ஒன்றுமில்லை" என்று சிரித்தாள் கமலா.

"சரி, சரி, போகிறேன். பேசாமல் சாப்பிடு. மனத்தை அலட்டிக் கொள்ளாதே."

அவள் போன பிறகு கமலா ஒருவாறு சாப்பிட்டு விட்டுக் காரியங்களையெல்லாம் செய்து முடித்தாள். இருந்த போதிலும் காலையில் நடந்த சம்பவம் அவள் மனத்தைவிட்டு இன்னும் அகலவில்லை.

கூடத்தில் வந்து உட்கார்ந்த பொழுது அது அவள் மனத்தை அரித்துக் கொண்டிருந்தது. விசாலம் சொல்லுவது போல் காலையில் ராஜகோபாலனது மன நிலை சரியில்லாம லிருக்கலாம். அதற்குத் தகுந்தாற்போல் அவளும் வார்த்தைகளை வரம்பின்றி உதிர்த்து விடவே அது அவனது கோபத்தைக் கிளறி விட்டிருக்கிறது. அதன் பலனை அவளுக்கு அறை விழுந்தது. என்ன இருந்தாலும் அவள் அம்மாதிரி பேசியிருக்கக் கூடாது என்பதை அவள் உணரத்தான் செய்தாள். இருந்தாலும் அதை அவள் உள்ளம் ஏற்க மறுத்தது.

அவள் மட்டும் என்ன பிரமாதமான தப்பு செய்து விட்டாள்! இருந்திருந்தும் அவனைக் கேட்காமல் இரண்டு ரூபாய் செலவழித்து விட்டாள். அவனது மனைவியான அவளுக்கு அதற்குக் கூட உரிமையில்லையா! மேலும் அவள் அதை வேண்டுமென்று செலவழித்தாள்! சமயம் அப்படி நேர்ந்து விட்டது. இதை யெல்லாம் கூடக் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் ராஜகோபாலன் அவளைக் கோபித்துக் கொள்வதென்றால் ...!

முதல் நாள் மாலை விசாலம் புடவை எடுக்கப் போனவள் கமலாவையும் தன்னுடன் அழைத்துச் சென்றாள். கமலா முதலில் வெறுங் கையுடன் தான் புறப்பட ஆயத்தமானாள். ஆனாலும் கடைசியில் வீட்டை விட்டுக் கிளம்பும் பொழுது எதற்கும் இருக்கட்டும் என்று ராஜகோபாலன் கொடுத்த ரூபாயை எடுத்துச் சென்றாள். கடையில் அன்றுதான் புதிய புதிய வாயில் துணிகள் வந்து குவிந்திருந்தன. கமலா அவைகளை ஆர்வத்துடன் பார்த்தாள். அதற்குத் தகுந்தாற்போல் கடைக்காரனும், "நீங்கள் வாங்காவிட்டாலும் பரவாயில்லை. பார்த்து விட்டாவது போங்கள், அம்மா" என்று அவைகளை எடுத்துப் போட்டான். கமலாவுக்கோ அவைகளைப் பார்க்கப் பார்க்க எல்லாவற்றையும் வாங்க வேண்டும் என்ற ஆசை தோன்றிற்று.

இடையில் 'கமலா' என்று குரல் கேட்கவே திரும்பினாள். அங்கே விசாலம் ஒரு வாயில் துணியைக் கையில் எடுத்தவாறே "கமலா, இந்த வாயில் புடவை நன்றாக இல்லை! எனக்கென்னமோ ரொம்பப் பிடிச்சிருக்கு. நான் ஒரு கெஜம் வாங்கப் போகிறேன். நீ கூட ஒன்று வாங்கிக் கொள்ளலாமே" என்றாள்.

"இல்லை. அக்கா வேண்டாம்......" என்று தயங்கியவாறு சொன்னாள் கமலா.

"ஏன்! மாதக் கடைசி, பணமில்லையே என்று யோசிக்கிறாயா கமலா!" என்றாள் விசாலம்.

என்ன இருந்தாலும் அந்த இடத்தில் விசாலத்தின் முன்பு கமலாவால் தன் கௌரவத்தை விட்டுக் கொடுக்க முடியவில்லை.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இப்பொழுது எதற்கு என்று பார்க்கிறேன்!" என்று மழுப்பினாள் கமலா.

"சரிதான். நீ பேசுவது அழகாயிருக்கே. இப்பொழுதில்லாமல் பின் எப்பொழுது வாங்குவது!

பணத்தை மிச்சப்படுத்துகிறாயாக்கும்! சரிதான் வாங்கிக் கொள், கமலா" என்று துணியைக் கிழிக்கச் சொல்லி விட்டாள் விசாலம்.

கடைசியில் வேறு வழியின்றித் தன்னிடமுள்ள இரண்டு ரூபாயைக் கமலா கொடுத்து விட்டு வர வேண்டி ஏற்பட்டது. இதை அன்று இரவே ராஜகோபாலனிடம் சொல்லி விடுவது என்று இருந்தாள் கமலா. ஆனால் அன்று அவன் நேரம் கழித்து வரவே அவளால் இதைச் சொல்ல முடிய வில்லை. மறுநாள் காலையில் இருந்த வேலை அவ சரத்தில் இதைச் சொல்ல அவளுக்கு நேரமேது!

ஆனால் அது இப்படி முடியும் என்று அவள் நினைக்கவேயில்லை. இல்லா விட்டால் அவள் விசாலத்தினிடம் ஒரேயடியாக வேண்டாமென் றல்லவா மறுத்திருப்பாள், உம். இப்பொழுது நடந்ததைப் பற்றிக் கவலைப்படுவதில் பயனில்லை. இனிமேலாவது இம்மாதிரியான சமயங்களில் கொஞ்சம் முன் யோசனையுடன் நடந்து கொள்ள வேண்டும். இவைகள்தான் அவள் மனத்தில் அப் பொழுது ஓடின. அன்று மாலை ராஜகோபாலன் வந்ததும் அவனிடம் நடந்ததைச் சொல்லி மன் னிப்புக் கேட்டுக் கொள்வது என்ற தீர்மானத் திற்கு வந்தாள். இப்பொழுதுதான் அவள் மனது சமாதான மடைந்தது.

அன்று சற்று சீக்கிரமாகவே வந்து விட்டான் ராஜகோபாலன். காப்பியை அவன் கையில் கொடுத்தவாறே அவன் முகத்தை ஒரு தரம் ஏறிட்டு நோக்கினாள் கமலா. எப்பொழுதும் போல் அவன் முகம் சலனமற்று விளங்கியது. அவன் காப்பியைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குடிக்க ஆரம்பித்தான்.

அப்பொழுது கமலா "காலையில்......" என்று ஆரம்பித்தாள்.

காப்பி முழுவதையும் குடித்து விட்டு "என்ன சொன்னாய் கமலா!" என்றான்.

"இல்லை. காலையில் நான் உங்களிடம் தெரியாத் தனமாகப் பேசி உங்களுக்குக் கோப மூட்டி விட்டேன். இனிமேல் என்றைக்கும் இம்மாதிரி நடந்து கொள்ள மாட்டேன்." அவள் குரலில் வருத்தமும் உறுதியும் தொனிப்பதை ராஜ கோபாலன் உணர்ந்தான்.

"உம். அதற்குரிய தண்டனையை உனக்குக் கொடுக்கத்தான் போகிறேன்" என்றான் ராஜ கோபாலன் தன்னுடைய முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு.

கமலா இதைக் கேட்டு உண்மையிலேயே பயந்து விட்டாள்.

அடுத்த கணம் ராஜகோபாலன் சிரித்தவாறே "பயந்து விட்டாயா, கமலா! என்ன தண்டனை தெரியுமா!" என்று அவளைத் தன் அருகில் இழுத்து அவள் கன்னத்தைக் கிள்ளி லேசாக ஒரு தட்டுத் தட்டினான்.

பிறகு "காலையில் ரொம்ப வலித்ததா கமலா!" என்று அவளைப் பரிவுடன் கேட்டான்.

"இல்லை. ரொம்ப சுகமாக இருந்தது" என்று சொல்லிச் சிரித்தாள் கமலா.

"என்னைக் குத்திக் காண்பிக்கிறாய், இல்லையா கமலா! உண்மையில் நான் நிமிடரென்று எப்படி அத்தகைய முரடனாக மாறினேன் என்பது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. இன்று முழு வதும் எனக்கு உன்னைப்பற்றியே சிந்தனை. நீ கூட இன்று முழுதும் அழுதுகொண்டே இருந் திருப்பாய் இல்லையா!"

"சே. சே. அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. என் மேல்தான் தப்பு. நான்தானே அம்மாதிரி பேசி உங்களுக்குக் கோபமூட்டினேன்!"

"போனது போகட்டும். இனிமேலாவது......" என்று சொல்லி நிறுத்தினான் அவன்.

"கண்டிப்பாக உங்களைக் கேட்காமல் இப்படிப் பட்ட காரியம் செய்ய மாட்டேன்" என்று முடித் தாள் அவள். இதைச் சொல்லும்பொழுது அவள் குரல் தழுதழுத்தது. கண்களில் நீர் ததும்பியது.

"சீ, அசடே! நான் அதைச் சொல்லவில்லை. செலவழிக்க உனக்கு உரிமையில்லையா என்ன! நம் வாழ்க்கையில் இனி இம்மாதிரியான சம்பவங் களுக்கு இடமிருக்கக் கூடாது என்றல்லவா சொல்ல வந்தேன்!" என்று அவள் கண்களைத் துடைத்தான் ராஜகோபாலன்.

கமலா பயந்ததெல்லாம் எங்கே தங்கள் வாழ்க் கையில் கசப்பு நிரந்தரமாக இடம் பெற்று விடுமோ என்று. இப்பொழுதோ அந்த பயம் அவள் மனத்தை விட்டு அகன்றது. ஏனெனில் கசப்பிலும் இனிப்பு இருக்கிறது. கசப்பும் இனிப் பும் கலந்து நிரவப்பட்டதுதான் வாழ்க்கை என் பதை அவள் இப்பொழுது உணர்ந்து விட்டாள்.

அப்பொழுது அவளைக் கனிவுடன் நோக்கிய ராஜகோபாலனது மகிழ்ச்சி நிரம்பிய கண்களும் அதைத்தான் அவளுக்குக் கூறின.

## வரவேற்கிறோம்

ஏட்டுக் கல்வியுடன், கைத்தொழிலின் உயர் வையும், மதிப்பையும் இளம் மாணவ மாணவிகள் அறிந்து அடைய வழி செய்யும் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தின் உன்னத லட்சியங்களையும், மகத்தான நோக்கங்களையும் செங்கற்பட்டில் ராஜாஜியும், பல பிரபல சொற்பொழிவாளர் களும் எடுத்து விளக்கினர். இதுவரை பல திட்டங்களில் ராஜாஜியை எதிர்த்து வந்த எங்கள் தொகுதி எம். எல். ஏ. திரு கே. விநாயகம் புதிய கல்வித் திட்டத்தை ஆதரிப்பதைக் கண்டு எந்த அரசியல் கட்சியிலும் சம்பந்தப்படாத பலர் ஆச்சரியப் படவில்லை; அதிசயிக்கவுமில்லை; ஆனால் ஆனந்தப்படுகிறார்கள். நேர்மையும், வல்ல மையும் எங்கு இருந்தாலும் அதை வாயார வாழ்த்திப் புகழ்வது தமிழர் மரபு. அந்தப் பண் புக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறார் திரு விநாயகம். கட்சிப் பூசல்களுக்கும், அரசியல் விதண்டா வாதங்களுக்கும் தாம் அப்பாற் பட்ட வர் என்பதை நிரூபித்து விட்டார். எதெற் கெடுத்தாலும் எதிர்ப்பதென்றில்லாமல் அரசாங் கம் கொண்டுவரும் நல்ல திட்டங்களுக்கு ஆதரவு கொடுக்க வேண்டியதும் எதிர்க் கட்சியினரின் கடமை என்பதை நினைவுறுத்தி யிருக்கிறார். நன்றாகப் படித்துப் பட்டம் பெற்றவரும், சிறிது காலம் ஆசிரியர் தொழில் செய்தவருமான திரு விநாயகம் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தை ஆதரிப்பது இயற்கையே. ஒவ்வொரு ஜனநாயக வாதியும், கிராமத்துக் குழந்தைகளின் நலனில் அக்கறை உடையவரும், நாட்டு முன்னேற்றத் தில் சிரத்தை உடையவரும் இப்புதிய கல்வித் திட்டத்தை ஆதரிக்க வேணுமென்று திரு விநாயகம் கேட்டுக் கொண்டதை உற்சாகத் துடனும் உள்ள நிறைவுடனும் வரவேற்கிறோம்.

செங்கற்பட்டு
25—8—53

பி. வெங்கன்

# உங்கள்
# நரம்புகள்!

வலுவுள்ளதாக உறுதியுடன் இருக்க வேண்டும் — அதுவும் ஓய்வில்லாத உழைப்பும் ஒழியாத கவலையும் நிறைந்த தற்கால வாழ்க்கையில்

# அஸ்வான்

நீண்ட காலமாய் மனோ பலமும் தேக திடனும் வியர்த்தமாகி யிருந்தாலும் ஈடு கொடுத்து போஷாக்கு அளிக்கக் கூடிய ஒரு உயர்ந்த டானிக்

**இன்றே ஒரு பாட்டில் வாங்குங்கள். எப்போதும் கைவிருப்பாக வைத்திருங்கள்**




சிறியோர்

•

முதியோர்

•

நோயாளிகள்

யாவருக்கும்

உகந்தது

## பெங்கால் கெமிகல்

**கல்கத்தா : பம்பாய் : கான்பூர்**

ஏஜண்டுகள் :

**என். தேசாய் கௌண்டர் & கோ.**
**41, பந்தர் தெரு - சென்னை**



*இது பிரக்கியாதி பெற்றது*

## உலக மார்க்
## அசல் ஷண்முகம்
## பட்டணம் பொடி

**ORIGINAL SHUNMUGAM**
**SNUFF (ESTD 1839) CO.**
P.B. No. 140 .......... MADRAS-1

நாகரீகத்திற்கும், அழகிற்கும்
**C. G. C. பிராண்ட் தங்க முலாம் பூசப்பட்ட பித்தான்களையும், நகைகளையும் உபயோகியுங்கள்**



5 வருஷங்களுக்கு உத்தரவாதம்

5 வருஷத்திற்குள்ளாக, நிறம் மங்கிவிட்டால் இலவசமாக வேறு மாற்றிக் கொள்ளலாம்.

நாங்கள் எல்லாவிதமான, பித்தான்கள், கப்லிங்ஸ், பிரஸ்லிங்ஸ் காலர் பின்கள், புடவை பின்கள், சங்கிலி, தோடுகள் முதலியவைகளை தயாரிக்கிறோம்.

உங்களது டீலர்களிடம்
C. G. C தயாரிப்புகளையே கேளுங்கள்

**THE PIONEER INDUSTRIAL TRADERS**
**SOUTH SINTHI ROAD. CALCUTTA - 2**
சிட்டி ஸ்டாக்கிஸ்டுகள் :
**என். கே. கந்தரவதனம் & கோ., சென்னை - 1**




## 8. யார் இவன்?

விதர்ப்ப நாட்டை விட்டு ஏழு பேர் புறப்பட்டு வந்தனர். ஆனால் திரும்பிப் போகும் போது ஆறு பேராகத்தான் திரும்பிப் போயினர். சங்கீத வித்வான் பின் தங்கி விட்டார்.

திரும்பிச் சென்ற ஆறு பேரும் வழி நெடுகக் கனவில் கண்டதெல்லாம் நனவில் காண நேர்ந்த அதிசயத்தை நினைத்து நினைத்து மாறி மாறிப் பேசிக் கொண்டே சென்றார்கள். கனவில் கேட்ட அதே பதிலை ஞாபகமாக எப்படித்தான் அந்தக் கிழவன் சொன்னானோ என்று வேறு அதிசயித்தார்கள். ஆனால் இவர்கள் யாரும் பிரபாவைப் பற்றிப் பேசவே இல்லை. ஏனெனில் யாருமே பிரபாவைப் பார்க்கவில்லை!

இப்படி நான்கு நாட்கள் பிரயாணம் செய்து விதர்ப்ப நாட்டை அடைந்தார்கள்.

அரசனில்லாமல் தவிக்கும் அந்நாட்டு மக்கள், இந்த ஆறு பேரைக் கண்டதும் ஒரே படியாய்க் குதூகலமடைந்து ஆரவாரம் செய்தனர். "ராஜ குரு வந்து விட்டார்" "முதல் மந்திரி வந்து விட்டார்" "சேனாதிபதி வந்து விட்டார்" என்று அவரவர்களுக்குத் தோன்றியபடியெல்லாம் இரைந்து பெரிய கூட்டத்தைச் சேர்த்து விட்டனர். கூட்டத்தைக் கடந்து செல்வது என்பது ரொம்பவும் சிரமமாகி விட்டது. ஜனங்கள் யாவரும் "நமக்கு ராஜ குமாரன் கிடைத்தானா?" "நம்மை யாளும் அரசன் அகப்பட்டானா?" என்று கேள்விமேல் கேள்வி கேட்கத் தலைப்பட்டனர். இப்பொழுது ராஜ குருவும், பிரதான மந்திரியும் சேனாபதியும் கலந்து ஆலோசித்தனர். இந்த ஜனங்களுக்கு என்ன பதில் சொல்வது என்று யோசித்தனர். உண்மையைச் சொன்னால், மறு நாள் காலை கோட்டைக் கதவுகளின் வாசலில் விதர்ப்ப தேசமே சேர்ந்து நின்று விடும். அந்த ஜனக் கூட்டத்தைக் கண்டு, தன்னை அறியாமல் வரும் ராஜகுமாரனும் வராமல் போய் விடலாம். ஆகவே, முன் கூட்டியே கோட்டை வாசலில் ஜனக் கூட்டத்தைச் சேர்த்து வைத்துக் கொள்வது நியாயமில்லை. ஜனங்களுக்கு உண்மையை அப்படியே சொல்லக் கூடாது என்று தீர்மானித்தார்கள். ஜனங்கள் மனதில் பதியும்படியாக உண்மையான தர்ம சங்கடத்தைத் தெரிவிக்க வேண்டும். எப்படித் தெரிவிப்பது என்ற கேள்வி பிறந்தது. எல்லாரும் கொஞ்ச நேரம் யோசித்தனர். கடைசியில் ராஜ குரு "ஜனங்களிடம் நான் சொல்லுகிறேன்" என்று எழுந்தார்.

"மகா ஜனங்களே, நம் குறை, நம் நாட்டுக்கு அரசனில்லாத குறை, வெகு

சீக்கிரத்தில் நீங்கப் போகிறது! அதாவது ஒரு மாதத்தில் நீங்கி விடும் என்றோ பதினைந்து நாளில் நீங்கி விடும் என்றோ ஒரு வாரத்தில் நீங்கி விடும் என்றோ நீங்கள் நினைக்கலாம். அது தான் இல்லை—நாளையே நீங்கப் போகிறது! எப்படி, எவ்வாறு, யார் அந்த அரசன் என்று மட்டும் இப்பொழுது கேட்காதீர்கள். அது சில முக்கிய காரணங்களுக்காக மிக ரகசியமாக வைக்க வேண்டியிருக்கிறது. ஆனால் நாளை பிற்பகல் உங்கள் எல்லோருக்கும் நம் நாட்டு அரசரை அறிமுகப் படுத்தும் போது, அந்த ரகசியத்தையும் தெரிவித்து விடுகிறோம். அது வரை பொறுத்திருக்கும் படி கேட்டுக் கொள்ளுகிறோம். இத்தனை நாள் பொறுத்திருந்த நீங்கள் இன்னும் சில மணி நேரம்தான் பொறுத்திருக்கும் படி கேட்டுக் கொள்ளுகிறோம். இந்த உதவியைச் செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்'' என்றார்.

"நாங்கள் பொறுத்திருக்கிறோம்! எங்களுக்கு ஆட்சேபமில்லை!" என்று கூறிக் கொண்டே ஜனங்கள் தத்தம் இல்லங்களுக்குத் திரும்பிச் சென்றனர்.

* * *

விதர்ப்ப தேசத்தின் தலை நகரத்தின் கோட்டைக் கதவுகளைத் தினம் விடியற் காலை நான்கு மணிக்குத் திறப்பார்கள்.

விடியற்காலை நான்கு மணிக்குக் கோவில் மணி ஒலிக்கும். அந்தச் சத்தத்தைக் கேட்டு அரைத் தூக்கத்திலிருக்கும் காவலாளி விழித்துக் கொள்வான். மெள்ளக் கோட்டைக் கதவுகளைத் தூங்கி விழுந்து கொண்டே திறப்பான்.

இன்று விடியற் காலை கோட்டைக் கதவுகளைத் திறக்கும் காவலாளி விழித்துக் கொண்ட போது, எதிரில் ஆறு பேரைப் பார்த்தவுடன் திடுக்கிட்டான். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்த போது, ராஜகுரு, பிரதான மந்திரி, சேனாபதி மற்ற யாரோ மூவர் நின்று கொண்டிருப்பதைப் பார்த்து அலறிப் போனான். ஆம், அவன் சற்றும் எதிர் பார்க்கவில்லை, இந்த வேளையில் இவர்கள் வருவார்கள் என்று. ஊரே அடங்கி ஒடுங்கிக் கிடக்கும் போது ஒருவித ஆடம்பரமுமின்றி இவ்வளவு அமைதியாக தேசத்தின் முக்கியஸ்தர்கள் வருவார்கள் என்று எதிர்பார்க்க முடியுமா ஒரு சேவகனால்?

அடங்கி ஒடுங்கிப் பயந்து நின்ற காவலாளியைப் பார்த்து, "ஊம், திற!" என்று கட்டளையிட்டார் சேனாபதி.

கதவுகள் திறக்கப் பட்டன. கோட்டை வாசலிலிருந்து நேர்க் கோடு இழுத்தாற் போல் ஒரு சாலை சென்றது. அருணோதயமே ஆகவில்லை. வானிலும் சந்திரனில்லை. ஒன்றிரண்டு நட்சத்திரங்கள் மட்டும் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன.

அந்த நட்சத்திர ஒளியில் கொஞ்ச தூரம் வரை சாலை தெரிந்தது. அதற்குப் பின்னர் சாலையும் இருளில் இரண்டறக் கலந்து, 'கருகும்' என்றிருந்தது.

"ராஜ குமாரன் வரப் போகிறான்!" "ராஜகுமாரன் வரப் போகிறான்" என்று உள்ளத்தில் ஆர்வத்துடன் ஆறு பேர் காத்திருந்தனர்.

ஆனால் சாலையிலோ ஆள் நடமாட்டமே இல்லை. பட்சி இனங்கள் மட்டும் கிறீச் மூச்சென்று சத்தமிட்டுக் கொண்டு அங்கு மிங்கும் பறந்தன.

சிறிது நேரத்தில் கிழக்கு வானம் சிவக்க ஆரம்பித்தது. "அதோ அருணோதயமாகிறது" என்று அவர்கள் உள்ளம் களிக்கத் தொடங்கியது. "இனிமேல் சற்று ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ராஜகுமாரன் வரும் நேரமாகி விட்டது!" என்று கூறிக் கொண்டனர்.

இப்படிப் பேசிக் கொண்டிருந்த போது, தூரத்தே ஒரு சின்னஞ்சிறு உருவம் தெரிந்தது. "அதோ! யாரோ வருகிறாற் போல் தோன்றுகிறதே!" என்றார் ஒருவர்.

"ஆமாம், நம்ம பக்கமாகவே தான் வருவது போல் தெரிகிறதே!"

"அவர் தான் ஒருவேளை ராஜகுமாரரோ?"

"ஆமாம்; அப்படித்தான் தோன்றுகிறது—தலையில் கூடக் கிரீடம் இருக்கிறாற் போல் தெரிகிறதே!"

"கழுத்தில் ரத்ன கண்டி அணிந்திருக்கிறாற் போலவும் தோன்றுகிறது."

"இடையில் வாள் கூட இருக்கிறாற் போல் தெரிகிறதே!"

"வயசு ரொம்ப இள வயசாக இருக்கும் என்று தான் தோன்றுகிறது."

இப்படி ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டனர். இந்த வேளை அந்த உருவம் நெருங்கி நெருங்கி வரலாயிற்று. அப்போது அவர்கள் முக பாவம் மாறலாயிற்று. இத்தனை நாழிகை பேசிய வாய்கள் அடைத்துப் போயின!

"ஐயோ, இவன் எங்கள் வீட்டு மாட்டுக்காரப் பையன் அல்லவா?" என்றார் வைர வியாபாரி மெல்லிய குரலில்.

"அட, இவன் வாள் வீரன் விஜயனுடைய சிஷ்யனல்லவா!" என்றார் சேனாபதி.

"சம்பந்தர் மடத்தில் தேவாரம் ஓதிக் கொண்டிருந்தானே?" என்றார் ராஜகுரு.

"சங்கீத வித்வானின் சிஷ்யனல்லவா? என்னிடம் அடிக்கடி மூங்கில் துண்டுகளைக் கொண்டு வந்து கொடுத்துத் தொளைகள் போட்டுக் கொண்டு போவானே, அந்தச் சிறுவன் அல்லவா, இவன்! என்று சொன்னார் கன்னார்.

"எதுவானால் என்ன? இவனை முதலில் சிறையில் வைப்போம்!" என்று ஆத்திரத்துடன் கூறினார் சேனாபதி. (தொடரும்)

# கதவு திறந்தது!

துரோணன்



மேல் மாடியில் நின்று கொண்டிருந்த கல்யாணி வீதியையே நோக்கிக் கொண்டிருந்தாள். தெருவில் காலை நிகழ்ச்சிகள் என்னென்னவோ நிகழ்ந்து கொண்டிருந்தன. சாரி சாரியாகக் காய்கறி விற்பவர்கள் ஒரு புறத்தில் கூவிக் கொண்டிருந்தனர். சற்றுத் தூரத்தில் கழைக் கூத்தாடியொருவன் தன் மூன்று வயதுக் குழந்தையைப் போட்டுப் பேயாட்டம் ஆட்டிக் கொண்டிருந்தான். தன்னுடைய பாலைத் தன் குழந்தை பருக உரிமை யிழந்து விட்ட குறையுடன் தாய்ப் பசுவும், அதன் கன்றும் ஒருபுறத்தில் வந்து கொண்டிருந்தன. ஏழைமையான ஒரு இளம் தம்பதிகள் தங்கள் குழந்தையைச் சுமந்து கொண்டே ஆஸ்பத்திரியை நோக்கி விரைந்து கொண்டிருந்தனர். வைக்கோல் வண்டியின் எருதுகள் இரண்டும் பாரம் தாங்க முடியாமல் திணறிக் கொண்டே நகர்ந்து கொண்டிருந்தன. ஆனால், அதன் மீதிருந்த சாரதியோ, யானையின்மீது பவனி செல்லும் அரசனைப் போல் இறுமாப்புடன் வீற்றிருந்தான்! இவை யெல்லாவற்றையும் அவளது கண்கள் கவனித்தனவே யன்றி, மனம் எங்கேயோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது. பின்புறத்திலொரு குரல் வெகு நாழிகையாக அழைத்துக் கொண்டிருந்தது. அவள் சற்றே வேகத்துடன் திரும்பினாள். எதிரிலிருந்த வேலைக்காரக் கிழவன் நடு நடுங்கி விட்டான்.

"என்னடா, என்ன? குழந்தைக்கு இப்போ என்ன வந்து விட்டதாம்?" என்றாள் கல்யாணி மிடுக்குடன்.

"ஒன்றுமில்லை குழந்தை, பெரிய ஐயா வந்து விட்டாங்க; உன்னைக் கூப்பிட்டுக் கிட்டு வரச் சொன்னாங்க" என்றான் குழப் பத்துடன் கிழவன்.

"எல்லாம் எனக்கு வரத் தெரியும், நீ போ" என்றாள் கல்யாணி. அவளது பதிலில் ஒலித்த கோபத்தைக் கண்டு கிழவன் பயந்து திரும்பினான். ஆனால், சற்று நேரத்திற் கெல்லாம் அவளது தாய் பாகீரதி யம்மாளின் கூப்பாடு அவளை யழைத்தது. 'தட தட' வென்ற ஓசையுடன் கீழிறங்கி வந்த கல்யாணி யின் முகத்தைக் கண்டதும், அவளது தாயா ருக்கே கொஞ்சம் அச்சமாகத்தான் இருந்தது.

"கல்யாணி, காப்பிகூடச் சாப்பிடாமல் மாடிமேல் என்ன செய்கிறே? அப்பாகூட வெளியிலிருந்து வந்து விட்டார்—" என்று கூறிக்கொண்டு வந்த பாகீரதியம்மாள் பாதி யிலேயே நிறுத்தி விட்டாள். கல்யாணியின் விழிகளில் ஆக்ரோஷம் நிரம்பி யிருந்தது. பின்னர், கனிவான குரலுடன், "ஏண்டி பெண்ணே, உனக்கென்ன பைத்தியமா இல்லை, உடம்புக்கு ஏதாவது......" என்று கேட்டாள் தாயார்.

எங்கோ பார்த்துக் கொண்டிருந்த கல் யாணி சரசரவென்று நடை இரேழிப் புறத்தை நோக்கி விரைந்தாள். பாகீரதி யம்மாளும் விடுவதாக இல்லை; அவளைத் பின் தொடர்ந்தாள்.

கல்யாணி 'சட்'டென்று திரும்பினாள். "அம்மா, எனக்கு ஒரு கேடுகாலமும் இல்லை; எனக்குக் காப்பியும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். வீணாக என் பிராணனை வாங் காதே!" என்று அவள் வெறுப்புடன் கூறிய பொழுது பாகீரதி யம்மாள் ஸ்தம்பித்து நின்று விட்டாள்.

"இங்கே பாருடி—ஏ பித்து, இப்போ தான் உங்கப்பா வெளியிலேயிருந்து வந்திருக் கிறார். நீகூட இரண்டு நாளைக்கு முன்னால் உன் தோழியிடம் அவளுடைய 'வைர நெக்லே'சைப் பற்றிச் சிலாகித்துக் கொண் டிருந்தாயாம். அது எனக்குத் தெரியாது. அவர் கேட்டுக்கொண்டே இருந்து விட்டு, நேற்று ராத்திரி போய் எழுநூறு ரூபாய்க்கு அதை வாங்கிக் கொண்டு வந்து விட்டு, உன்னைத் தேடுகிறார். நீயானால் இப்படி" என்று நயமும், ஹாஸ்யமும் பிரதிபலிக்கப் பாகீரதி கூறினாள்.

"அம்மா, நீ சொன்னால் கேட்கமாட்டே? எனக்கு ஒரு நகையும் வேண்டாம். வாங்கிக் கொண்டு வந்தால் என்ன? நீ போட்டுக் கொண்டால் பார்தமா யிராதோ?" என்று பாணப் பிரயோகம் போன்ற வார்த்தைகளை உதிர்த்துக் கொண்டே மாடிப்படிகளை நோக் கித் தாவினாள் கல்யாணி.

சற்று நேரம் பாகீரதி யம்மாளுக்கு ஒன் றுமே தோன்றவில்லை. பின்னர், முன்புறத்து ஹாலில் பத்திரிகை பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த தன் கணவரை நோக்கி வந்தாள். அவளது தாயுள்ளத்திலும் ஏதேதோ விவரிக்க முடியாத குழப்பங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன.

"இப்படி என்னைப் போலொரு பெண் பிறக்க வேண்டாம்" என்றாள் சலிப்புடன் பாகீரதி. அவளது குரலில் ஏக்கம் கலந் திருந்தது. அவளது கணவர் ராமய்யா அவளை யொருதரம் ஏற இறங்கக் கவனித்தார்.

"ஏன், இப்பொழுது உனக்கு என்ன வந்து விட்டதாம்?" என்றார் சற்று ஹாஸ்யம் கலந்த குரலுடன் ராமய்யா.

"வேறு என்ன வரவேண்டும்? இந்தப் பெண் விசாரமே எனக்குப் பெரிதாகப் போய் விட்டது."

"ஏன், அவளுக்கு நம் வீட்டில் என்ன குறை வந்து விட்டதாம்?" என்றார் ராமய்யா புருவங்களை நெறித்தபடி.

"அவளுக்கு என்ன குறை? உடுத்திக் கொள்ள டஜன் கணக்கில் பட்டுப் புடவை யில்லையா? போட்டுக் கொள்ள மரக்கால் கணக்கில் நகையில்லையா? ஊர் சவாரிக்குக் காரில்லையா – இன்னும்—" என்று கூறிக் கொண்டே போனார். பாகீரதி ஒருதரம் பெருமூச் செறிந்தாள்.

"பின்னே?"

"பின்னே என்ன? வயசும் பதினேழு நிறைந்து விட்டது. விளையாட்டுப் போலத் தலை தீபாவளியும் வந்து விட்டுப் போய் வருஷம் இரண்டாகி விட்டது" என்று அடுக்கிக் கொண்டே வந்த பாகீரதி சற்றே நிறுத்தி விட்டாள். ஏனெனில், எந்த ஒரு பொருளைப் பற்றிச் சொன்னால் அவருக்குக் கோபம் வருமோ, அது அவளுக்குப் பழக்க மாகி யிருந்தது.

"அதற்கு என்னை என்னடி செய்யச் சொல்லுகிறாய்? அந்த மடையன் என்னை ஏதோ ஒரு கிள்ளுக் கீரையாக நினைத்து விட்டான்! அப்பனுமில்லாமல், ஆயியுமில்



லாமல் பிரமாதமாக உத்தியோகம் பார்த்துப் புரட்டிவிடப் போகிறானாக்கும்? இல்லே, இந்தப் பங்களாவில் இருப்பதற்கு அந்தத் துரைக்குக் கசக்குமோ? ஏதோ சொற்ப சில்லறைக் காசுக்காகப் பிராஞ்சுப் போஸ்டாபீசில் சீல் குத்துகிறான்! இந்த மாப்பிள்ளையை விட வெட்கக்கேடு வேறு எனக்கு என்ன வேண்டும்?" என்று ராமய்யா சற்றுப் படபடப்புடன் கூறிவிட்டு நிறுத்தினார்.

"இருந்தாலும், நீங்கள் பேசுகிறது நியாயமில்லே" என்று பாரேதி கூறி முடிப்பதற்குள்ளாகவே ராமய்யாவின் வார்த்தைகள் குறுக்கிட்டன. "ஆமாம், இனிமேல் நியாயம் உன்னிடமிருந்துதான் 'தெரிந்து' கொள்ள வேணும்! ஏதோ ஏழையாக இருந்தாலும் படித்தவனாகவும் இலட்சணமாகவு மிருக்கிறானே யென்று அவனை இலட்சியம் செய்து முடித்தேன். அந்தப் பிரபு சுய கௌரவம் கொண்டாடுகிறார்!—போடி போ! இந்தப் பீடிகை யெல்லாம் போட்டுக் கொண்டு என்னெதிரில் வராதே—" அவரது வார்த்தைகளில் உஷ்ணம் பிரதிபலிக்கவே, பாரேதி நீண்ட பெருமூச்சுடன் எழுந்து சென்றாள்.

★

வெகு சீக்கிரமாகவே போஸ்டாபீசின் அன்றைய வரவு செலவுக் கணக்குகளை ஒருவாறு முடித்தான் சுந்தரம்—அவன்தான் கல்யாணியின் கணவன். அவனுள்ளத்தில் ஒரு திருப்தி. வெகு தூரத்திலிருந்து வந்து கொண்டிருந்த பார வண்டியின் 'கிறீச்' சிட்ட ஓசை அவனை யெங்கோ அழைத்துக் கொண்டிருந்தது. இவ்வளவு நாட்களாக இல்லாத ஒரு ஆசை அவனை உந்திக் கொண்டிருந்தது. அதாவது, அன்றைக்குத் தான் ஏதாவது ஒரு சினிமாவுக்குப் போகவேண்டுமென்று நினைத்திருந்தான். ஆகவே, பரபரப்புடன் ஆபீஸ் அறையைப் பூட்டி முத்திரையிட்டு விட்டுத் தன் குடியிருப்பு வீட்டை நோக்கிக் கிளம்பினான். அங்கே அவனுக்கு எதிர் பாராத ஆச்சரியம் காத்திருந்தது!

அவனெதிரே நின்று கொண்டிருந்த பெண் யாரென்பதையே ஊகிக்க அவனுக்குச் சற்று நேரம் பிடித்தது. கல்யாணிதான் நின்று கொண்டிருந்தாள். இடுப்பில் சாதாரண வாயில் புடவை. முகம், கழுத்து யாவும் வெறிச்சோடியிருந்தன. நெற்றியிலிருந்த குங்குமத் திலகம் மட்டில் அவளது முகத்தின் எழிலை மிகைப் படுத்திக் கொண்டிருந்தது. ஆனால், சுந்தரத்தின் உள்ளத்தில் இரண்டு வருஷங்களாகப் புகைந்து கொண்டிருந்த ஆண்மையின் உரிமையும், சுய கௌரவமும் ஒன்று கூடிக் கனலைக் கிளறி விட்டன. அவன் வாய் திறவாது சென்று தன் மாடி அறையின் கதவைப் படாரென்று திறந்து கொண்டு உட்புறம் சென்றான்.

கல்யாணியும் அவனைத் தொடர்ந்து சென்றாள். அவள் எதைக் கூறவேண்டுமென்று நினைத்திருந்தாளோ, அதை அவளால் கூற முடியவில்லை. சோகமும், பயமும் கூடி நெஞ்சைப் பாறையாக அழுக்கிக் கொண்டிருந்தன. கண்களில் ஜலம் ததும்ப அவனருகே சென்று ஒருதரம் நமஸ்காரம் செய்து விட்டு எழுந்தாள். அவன் அதை இலட்சியம் செய்யாமல் வெறிச்சிட்டிருந்த வானவெளியை நோக்கினான். விரக்தி கலந்த 'ஹுங்காரம்' அவனது கண்டத்தினின்றும் வெளியாகி பயங்கரத்தை மிகைப்படுத்திற்று.

"சீமாட்டி யம்மாளுக்கு இந்த ஏழையின் குடிசை எப்படித் தகும்? வந்த வழியே பார்த்துக் கொண்டு செல்லலாம்—" என்றான் கண்டிப்பான குரலுடன் சுந்தரம்.

கல்யாணி விசித்து விசித்து அழுதாள். அடுத்த கணம் அவனது கோபம் அதிகமாயிற்று. 'சரசர' வென்று எழுந்து வேறொரு அங்கவஸ்திரத்தை யெடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு வெளியில் போகலானான். அவனது கால்களைப் பற்றிக் கொண்டாள் கல்யாணி.

"என்னை என்ன வேண்டுமானாலும் திட்டுங்கள்; அடியுங்கள்—நான் உங்களை விட்டு நகர மாட்டேன்—" என்றாள் கல்யாணி பரிதாபமான குரலில்.

"இதென்ன சண்டித்தனம்? இரண்டு வருஷங்களாக என் ஞாபகமே கிடையாதோ? வேண்டாம்; என் உறவே உனக்குத் தேவையில்லை. வெளியே போய் விடு!" என்று சுந்தரம் ஆத்திரத்துடன் கூறிவிட்டு வாசற்படி யருகில் வந்தான். அவன் முகத்தில் ஆண்மையின் வீறுப்பு கொந்தளித்தது. கதவைச் 'சரே'லென்று பூட்டிக்கொண்டு திரும்பிப் பாராமல் வேகமாகத் தெருப்பக்கம் வந்து விட்டான். அவனைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த கல்யாணியின் பரிதாபமான விக்கல்கள் அவனது கால் கடையின் வேகத்தைத் தூண்டின.

உலகத்துப் பழமொழி போல் கல்யாணி பேய்க்கு வாழ்க்கைப் படவில்லை. ஆனால் அவளது சூழ்நிலையும் இளம் நெஞ்சமும் சேர்ந்து அவளைக் கைப்பொம்மையாக மாற்றி யிருந்தன. இன்று அவளது உள்ளம் உலகத்தைத் துருவி ஆராய்ந்தது. பெண்மையின் சக்தி அவளை ஆட்கொண்டது. பொன்னையும் பொருளையும் உதறிவிட்டு ஓடோடியும் வந்தாள். ஆனால்...?

விளையாட்டுப்போல் மூன்று தினங்கள் ஆகிவிட்டன. சுந்தரம் தனது அறைப் பக்கமே திரும்பவில்லை. உடம்பிலிருந்த ஒரே உடுப்புடனேயே தன் ஆபீசில் புழங்குவதும் ஹோட்டலில் சாப்பிடுவதுமாக இருந்தான். இரண்டு வருஷங்களாகத் தேங்கியிருந்த ஏக்கமும் கோபமும் ஒரே பிடிவாதமாகச் சேர்ந்து அவன் உள்ளத்தில் கல்யாணியைத் திரஸ்கரித்துக் கொண்டிருந்தது.

அன்றையத் தபால்களை முத்திரையிட வேண்டிய நேரம் கடந்து விட்டது. வெகு

நேரச் சிந்தனைக்குப் பின் விழித்துக் கொண்ட சுந்தரம் எழுந்து பரபரப்புடன் தபால் பெட்டியைத் திறந்து அதிலிருந்த கத்தையான காகிதங்களை எடுத்து மேஜை மீது போட்டான். முத்திரை யிட்டபின் அவைகளை ஊர்வாரியாகப் பிரிக்கும்போது அவன் ஒரு கணம் திகைத்தான். ஒரு கவரின் மேலிருந்த விலாசம் அவனை ஆச்சரியத்திற் குள்ளாக்கியது. விலாசம் மணி மணியான எழுத்துக்களுடன் கும்பகோணத்திலிருந்த அவனது மாமனார் பெயருக்கு இருந்தது. அவன் அதை முன்னும் பின்னுமாகப் புரட்டிப் பார்த்தான். சட்ட விரோதமான ஒரு காரியத்தைச் செய்வது பற்றிச் சற்று நேரம் அவனது மனம் போராடிற்று. இதற்குள்ளாகத் தபால் வண்டி வந்து விடவே, அதை ஒரு புறத்தில் எறிந்து விட்டு மூட்டையைக் கட்டி முத்திரை யிட்டான்.

அந்தக் கடிதம் யாரால் எழுதப்பட்டிருக்க வேண்டுமென்பதை அவன் ஊகித்தவுடனேயே உரிமை அவனை வென்றது. சாவதானமாக அதைப் பிரித்து நோக்கினான். தலைப்பில் தன்னுடைய விலாசத்துடன் கல்யாணிதான் இரண்டு பக்கங்களுக்கு எழுதி யிருந்தாள்.

அன்புள்ள அப்பா, அம்மா இருவருக்கும் தங்கள் கல்யாணி அநேக நமஸ்காரம்.

என் விஷயமாகத் தாங்கள் எவ்விதக் கவலையும் படவேண்டாமென வேண்டுகிறேன். நான் அவ்விடத்தை விட்டுக் கிளம்பிய பின், எங்கெங்கெல்லாமோ தேடி யிருப்பீர்கள்; விசாரித்திருப்பீர்கள் — ஏன். எல்லாத் தெய்வங்களையுமே வேண்டியிருப்பீர்கள். ஆனால், சுய கௌரவமும், பண மமதையும் என்னை எங்கே போய்த் தேட வேண்டுமென்ற குறிப்பான யோசனையைக்கூடத் தங்களுக்கு அளிக்க வில்லை. நான் எங்கேயிருக்க வேண்டுமோ, அங்கேதான் நான்கு தினங்களாக இருக்கிறேன்.

நான் தாங்கள் பெற்ற பெண்தான். அதற்காகத் தங்களை யெல்லாம் மீறி நடக்துவிடவும் எனக்கு எண்ணமில்லை. ஆனால் பெருமாள் மாட்டுக்காரன் தன் மாட்டுக்கு விதவிதமான துணிகளையும் ஆபரணங்களையும் பூட்டித் தன்னுடனேயே ஓட்டிச் செல்லுகிறான். அவன் கொடுக்கும் ருசியான பதார்த்தங்களையும் தான் அது உட்கொள்ளுகிறது. இருந்தும் காலாரச் சென்று வாயாரப் புல்லை மேய அதற்கு உரிமையில்லை. என் நிலை அப்படித்தா னிருந்தது.

நான் ஒரு பொருளின்மீது ஆசைப்படுவதாகக் கனவு கண்டால் கூடத் தயங்காமல் சென்று வாங்கிக் கொடுத்தீர்கள். பொன்னும் மணியும், பட்டாடைகளுமாக வாங்கிக் குவித்தீர்கள். இதிலெல்லாம் நான் பாக்கியசாலிதான். ஆனால், அவை யெல்லாவற்றிற்கும் நான் அருகதையுள்ளவளில்லை. அந்தச் சுமைகள் யாவும் பீரோவுக்குள்ளேயே வைத்துப் பூட்டியிருக்கிறேன். ஏனெனில், தாங்கள் தேடிக் கொடுத்த ஒரு ஏழைக் குமாஸ்தாவின் மனைவி நான். இதற்கு வருந்தவுமில்லை; ஏங்கவுமில்லை. மனத்திருப்தியுடன் இருக்கிறேன்.

தற்போது, தலை தீபாவளிக்காக என் கணவர் வாங்கி வந்திருந்த வாயில் புடவைதான் என் உடலைச் சுற்றியிருக்கிறது. மற்றபடி அவரால் இடப்பெற்றிருந்த இரண்டொரு நகைகள்தாம், நானுமொரு பெண் என்பதற்காகப் பூண்டிருக்கிறேன். இந்த நான்கு தினங்களாக நான் இவரது அடியிலேயே இருக்கிறேன். இது எனக்கு அமர வாழ்க்கையாக இருக்கிறது. சாந்த சொரூபியான இவரது ஊதியமும், அன்பும் எனக்கு என்றென்றைக்கும் போதுமென்றே என் உள்ளம் கூறுகிறது.

தாங்கள் — அப்பாவோ, அம்மாவோ—யாரும் என்னுடைய அதிகப் பிரசங்கமான கடிதத்திற்காக வருந்தாமல் என்னை மன்னிக்க வேண்டுகிறேன். கல்யாணியின் க்ஷேமங்கள் தங்களுக்குத் தெரிய வேண்டுமாயின், அதன் உரிமை வேறிடத்திலிருக்கிறது என்பதையும் தாங்கள் அறிவீர்களென நம்புகிறேன்.

தாங்கள் நினைக்கிறபடி பொன்னும் மணியும் பூண்டு நான் பங்களாவைச் சுற்றிவரப் பிறக்கவில்லை. சுகத்தையும் துக்கத்தையும் சீர் தூக்கிப் பார்ப்பதற்காகப் பிறந்தவள்தான் நானும்.

கல்யாணி.

கடிதத்தைச் சுமார் பத்து தடவைகளுக்கு மேல் சுந்தரம் படித்து விட்டான். அவனது இரண்டு வருஷத்திய மனப் போராட்டங்களும் கணத்தில் விடை பெற்றுக் கொண்டு விட்டன. அடுத்த சில நிமிஷங்களில், தன் ஜாகையை நோக்கி விரைந்து வந்தான். அவனெதிர்பாராதபடி, அறையின் கதவுகள் திறந்திருந்தன. உட்புற மெல்லாம் கோலமிடப்பட் டிருந்தது. அவனது துணிகளெல்லாம் சுத்தமாகக் கொடியில் உலர்த்தப் பட்டிருந்தன.

வேகமாக வந்து கொண்டிருந்த சுந்தரத்தைக் கண்டதும் கல்யாணி ஒரு கணம் நடுங்கி விட்டாள். ஆனால் அவனோ, ஆசையும் அன்பும் முகத்தில் பொங்கி வழிய மெல்லிய குரலில் 'கல்யாணி—' என்றான். அடுத்தபடியாக, என்ன பேசுவ தென்பது அவனுக்கு விளங்கவில்லை. அவனது சட்டைப் பையிலிருந்த அந்தக் கடிதம் சிரமமின்றி அதைத் துவக்கி வைத்தது!

"இதென்ன கடிதம்? இது ஏது உங்களுக்கு?—" என்றாள் கல்யாணி. வியப்பு, கலவரம், நாணம் மூன்றும் அவள் முகத்தில் சேர்ந்து பிரதிபலித்தன!

சுந்தரம் ஒரு தரம் கீழ குனிந்து பார்த்து விட்டு இலேசாக நகைத்தான்.

"இந்த வீட்டுக்காரப் பெண்ணிடம் கொடுத்து 'போஸ்ட்' பண்ணியது உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?—" என்றாள்.

"இந்தப் பாழும் வட்டாரத்தில் என் 'தபாலாபீஸ்' ஒன்றுதானே யிருக்கிறது?—"

கல்யாணியின் முகத்தில் வெட்கம் ததும்பி நின்றது. "அப்படித்தா னாகட்டும்; பிறர் கடுதாசைப் பிரிப்பது எவ்வளவு குற்றம்?"

"அதுவா, அது என் உரிமை!—" என்று அழுத்தமாகக் கூறிவிட்டு, வாய் விட்டு நகைத்தான் சுந்தரம். பின்னர், "அது இருக்கட்டும்; நான் பூட்டி யிருந்த கதவை நீ எப்படித் திறக்கலாம்—ஹாம்?—" என்றான் கொஞ்சலான அதட்டலுடன்.

"இதுவா?—இது என் உரிமை!" என்று கூறிக்கொண்டே அவனது நகையொலியில் கலந்து கொண்டாள் கல்யாணி!

# இதோ பாருங்கள்...




## புதிய சிவப்பு, வெள்ளை & நீல நிற டின்னில்

புதிய சீர்திருத்தம் கூடிய

# ப்ளிட்

## சக்திவாய்ந்த 6 கீடநாசினிகள் சேர்ந்தது

ஆம், நிரூபணமான குணம் பொருந்திய ஆறு கீடநாசினிகள் ஒருங்கே சேர்ந்துள்ளதால் இப்புதிய சீர்திருத்தப்பட்ட ப்ளிட், பூச்சிகளைக் கொல்லும் மற்ற மருந்துகளில் தலைசிறந்து விளங்குகிறது—வியாதிகளைத் தாங்கிவரும் பூச்சிகளை ஒழித்து உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பதில் இணையற்றது! தவிர, ப்ளிட்டின் மாரக சக்தி பல வாரங்கள் நீடித்திருப்பதால் அடிக்கடி தெளிக்கவேண்டிய அவசியமுமில்லை. புதிய சிவப்பு-வெள்ளை மற்றும் நீல நிற டின்னில் வரும் ப்ளிட்டை இன்றே வாங்கி உங்கள் ஆரோக்கியத்தை 6 வழிகளில் பாதுகாத்துக்கொள்ளுங்கள்!



ப்ளிட்
அதிக பூச்சிகளைக் கொல்லுகிறது-அதற்குச் செலவழிக்கும் காசு வீண்போகிறதில்லை

ஈயைக் கொல்லுங்கள்-அது வியாதியைப் பரப்புகிறது

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி (கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)




# அவன் நண்பன்

பூவை

"ஏலே, காவேரி! சீக்கிரமா ஓடி வா, வானத்திலே மப்பும் மந்தாரமும் அமர்க்களப்படுகிறது. பொட்டுத் தூத்தல் விழுந்து மண் நனைஞ்சாக் கூடத் தேவலாம். ஆத்தா தான் பெரிய மனசு செய்ய வேணும். மழை பெய்தால் கருக்கலிலே விதை பாவலாம். ஆடிப்பட்டம் தேடி விதைன்னு சொல்லுவாங்களே. ஹூம், இந்தா, காவேரி சீக்கிரமாக இந்த எருக் குப்பையை எல்லாம் ஒன்னு சேர்த்துக் கொட்டடியிலே நிரப்பு. நான் வந்ததும் சீர் பண்ணிக் கொள்கிறேன். நான் புறப்பட்டுப் பக்கத்து எருக்கலக் கோட்டை ஆவுடை, சின்னையா ரெண்டு பேரையும் கண்டு நாளைக்கு அறந்தாங்கிக்குப் போறதுக்கு ஏற்பாடு பண்ணிட்டு வாரேன். விடிஞ்சா கோர்ட்டுக்குச் சாட்சிகளை ஆசர்ப்படுத்தியாக வேணும். ஊம்...... தோளுக்குத் தோள் நின்னு, உசிருக்குசிராப் பழகின நம்ம சொக்கலிங்கம் நாளைக்குக் கோர்ட்டிலே பொய்ச் சாட்சி சொல்லப் போகிறானாம் எனக்கு எதிரியா. சம்மன் கூடப் பெத்துக்கிட்டானாம். நியாயத்துக்கு விரோதமாகச் செய்யப் போறான் பயல். பார்க்கலாம்; அப்பாலே ஆத்தா விட்ட வழி.. ...!"

பஞ்சாட்சரம் துண்டை எடுத்து உதறித் தோளில் போட்டுக் கொண்டு கிளம்பினான். தன் கணவன் செல்லுவதையே கவனித்துக் கொண்டிருந்த காவேரி, கணவனின் தலை மறைந்ததும் அவன் ஏவிச் சென்ற வேலையை இட்டு நிரப்ப மண் வெட்டியையும் கூடையையும் எடுத்தாள்.

வானத்தில் கருமேகங்கள் முழங்கின; சிறு சிறு தூற்றல் துளிகள் பூமியில் தெளிக்கப்பட்டன. மண்ணிலிருந்து ஒருவகை வாடை குபுகுபுவென்று கிளம்பியது.

"காவேரி!"

தலையின் சும்மாட்டில் இருந்த குப்பைக் கூடையை உரிய இடத்தில் சேர்ப்பித்து விட்டுத் திரும்பினாள்; வியர்வையைச் சேலைத் தலைப்பினால் துடைத்துக் கொண்டு காவேரி தலை நிமிர்ந்தாள். அடுத்த தெரு அஞ்சுகம் நின்றாள். அவள் கைக்குள் ஏதோ பொட்டலம் அடங்கியிருந்தது.

"வா, தங்கச்சி. அந்தி பூத்தாப்போலே இருக்கிறதே!"

"ஆமாம் அக்கா. மூச்சு விட்டா மூச்சுக் கேட்கும். அப்படிப் பக்கத்துக்குப் பக்கமா இருக்கிறோமின்னு பேருதான். ஒருத்தர் மூஞ்சியை ஒருத்தர் காணுகிறது கூட ஒரே அதிசயமாகத் தான் இருக்குது. அக்கா, உங்கிட்டே ஒரு சேதி சொல்லணும். ஆமாம், உன் மச்சான் எங்கே?"

"மச்சான் ஊருக்குப் போயிருக்கிறார். என்ன சேதி, அஞ்சுகம்...?"

"உன் மச்சானுடைய தோழன் சொக்கலிங்கம் இருக்கிறாரே அவர் பொண்சாதிக்கு

அவசரமா ஒரு அம்பது ரூபா தேவையாம். அவன் பொண்ணு வேறே ஆளாகியிருக்கு. அதுக்கு நாளை விடிஞ்சு சடங்கு சுத்தறாங்களாம். புதுச் சேலை ஒண்ணைக் கொண்டுவந்து அடமானம் வச்சுக்கிட்டுப் பணம் கொடுக்கச் சொன்னா. எங்கிட்டே செல்லாக் காசுக்கும் வழி ஏது? உங்கிட்டே வந்தா காரியம் கைகூடுமென்னு வந்தேன். பிறக்கிற மாசம் வட்டியோடே பணத்தைக் கட்டிப் புடவையைத் திருப்பிக்கிறாளாம், அக்கா'' என்றாள் அஞ்சுகம். கையில் கொணர்ந்திருந்த புத்தம் புதிய சுங்கடிப் புடவையை நன்றாகப் பிரித்துக் காட்டினாள்.

காவேரி ஒரு சிறிது நேரம் அசைவற்று நின்றாள். பொம்மையாகிப் போனாள். அவள் பார்வையில் அந்தப் புடவைதான் குடைராட்டினம் சுழன்றது. அஞ்சுகம் சொன்ன வார்த்தைகள் அவள் காதுகளில் எதிரொலித்தன. அவள் எண்ணினாள்: 'என் மச்சானுடைய பழைய தோழன் சொக்கலிங்கம். அவருதானே இப்ப இவருக்குப் பரம வைரி? கோர்ட்டுப் படியேறி, பணத்துக்கும் பவுசுக்கும் பயந்து, பொய்ச் சாட்சி வேறே சொல்லப்போற அந்த ஆசாமியின் பொண்டாட்டிதானே அவள்...? அவளுக்கு இரக்கப்படவேண்டுமா? அம்மாடி, இது மச்சான் காதில் பட்டால் அப்புறம் என் தலையைச் சீவி விடுவாரே! ஊஹூம், கூடாது...'

'' அக்கா ''

'' தங்கச்சி, உனக்கு விஷயமே ஒண்ணும் தெரியாது போலே என்னிடம் வந்திருக்கிறாயே! வீணா எதுக்கு வாய் வளர்த்தணும்? புடவையை நீயே எடுத்துக்கிட்டுப் போ. இப்போ எங்கிட்டே பணத்துக்கு வகையில்லே. ஊம்; பொய் எதுக்குச் சொல்லவேணும்...? அந்தப் பொண்ணு ரெத்தினத்தின் புருசன் சொக்கலிங்கம்தான் எங்களை மோசம் பண்ணிப்பிட்டாரே! நான் இப்போ அவுங்களுக்காக சல்லிக் காசுகூட சுருக்குப் பையை விட்டு எடுக்க முடியாது. அவளிடம் சொல்லிவிடு...நீ ஒண்ணும் இதை மெனக்கிட்டு உன் மனசுக்குள்ளாற போட்டுப் பூட்டி வைக்காதே. நாம்ப ரெண்டு பேரும் எப்பவும் போலே அக்காளும் தங்கச்சியுந்தான். போய் வா. பெரிசாத் தூத்தல் விழுகிறது...'' என்று அஞ்சுகத்திடம் அந்தப் புடவையைக் கொடுத்து வழியனுப்பி விட்டாள் காவேரி. அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாகப் பொங்கி வந்தது.

'' அதிசயக் கூத்தா யிருக்கிறதே! அண்டிக் கெடுத்தவர்களுக்கு ஆபத்துக்கு உதவியும் ஒத்தாசையுமாக்கும்...உம்...!''

★

''பாவம்...!''

பெண்ணுக்குப் பெண்ணாகின்ற தருணம், காவேரியின் பெண் இதயம் அப்படிப் பட்ட சொல்லைத்தான் உதிர்த்து அதே நினைவில் பதிந்து போய்க் கிடந்தது...!

மண்வெட்டியும் கூடையுமாகக் குப்பை மேட்டில் நின்றவனுக்குக் கை ஓடவில்லை; நெஞ்சோடியது: நினைவு மறந்தான்; தன்னை மறந்தான். மறைந்து சென்ற அந்தப் புதிய சுங்கடிப் புடவை அவன் மனக் கண்ணை விட்டு மறையாமல், மறக்காமல் நடந்த கதையைச் சொல்லத் தொடங்கியது. அந்தக் கதை அவன் கதையை ஓட்டியது. இல்லையென்றால், காவேரி இந்நேரம் தன் ஆசை மச்சான் பஞ்சாட்சரத்தின் நேசக் கண்ணாட்டியாகி யிருக்க முடியுமா? இல்லையென்றால் பஞ்சாட்சரம் கல்யாணப் பரிசாகத் தன் தோழன் சொக்கலிங்கத்தின் மூலம் அவன் மனைவிக்கு அந்தப் புடவையை அளித்திருக்கத்தான் முடியுமா?

பூவத்தகுடியிலும் சரி, பக்கத்துக் குடியிருப்பு வட்டாரத்திலும் சரி, தோழமைக்குப் பஞ்சாட்சரம் - சொக்கலிங்கம் ஜோடியைப் போல வேறொன்றைக் கண்ணால் காணுவதென்பது குதிரைக் கொம்புதான். ஒரே கப்பில் வெடித்த இரட்டைக் காய்கள் போல இணைந்து பழகினார்கள் இருவரும். எங்கேயும் எப்போது பார்த்தாலும் அவர்கள் இரண்டு பேரும்தான் கூட்டாளிகள்! செல்லத் தேவன் ஊருணி இரண்டு பட்டுச் சேறும் சகதியுமானதென்றால் அந்தப் புண்ணியம் இந்த இரண்டு இளங் காளைகளைத்தான் சேரும். மணியக்காரர் சிதம்பரத் தேவர் வீட்டுப் புழக் கடை ஒட்டு மாமரத்தில் மாம்பழங்கள் காணோம் என்றால் அதற்கும் மறைமுகமான பொறுப்பாளர்கள் இவர்களேதான்.

ஒரு சமயம், ஐயனார்கோவில் குதிரை எடுப்பிற்கு மைதானத்தில் தெருக்கூத்து நடத்தினார்கள். பஞ்சாட்சரமும் சொக்கலிங்கமும் இல்லாமலா? நாடகம் ஆரம்பிப்பதற்குள் கிட்டிப்புள் விளையாடினார்கள்; நல்ல பால் நிலவு; பின்னர் கொண்டு வந்திருந்த வில்லினால் கவண் வீசிக் கல் எறிந்தான் பஞ்சாட்சரம். மறு கணம் அவன் கையில் புள் ஒன்று தஞ்சமடைந்தது. அதே சமயம் ''ஆத்தாடி?'' என்ற அதிசயங் குழைந்த ஒய்யாரக் குரல் பஞ்சாட்சரத்துக்குக் கைலாகு தந்தது. அவன் குலுங்கிப் போனான். அழகு குலுங்கப் பொன் நகை குலுங்க, இன் நகை குலுங்க நின்று கொண்டிருந்தாள் காவேரி. அப்பொழுதே பஞ்சாட்சரம் அந்தக் குட்டியின் மேல் ஒரு 'கண்' போட்டு விட்டான். மறுபடியும் அவன் போட்ட கண்ணை மீட்டு எடுக்கும் சமயத்தில் அவனிடம் ஜோடிக் கண்கள் சிதம்பர ரகசியம் பேசின. அவை காவேரியின் வேல் விழிகள் என்பதைச் சொல்ல வேண்டுமா, என்ன?

தோழனின் நெஞ்சு அந்தக் காட்டுப் பூவிடம் மையல் கொண்டதை அறிந்த சொக்கலிங்கம் ஓடிப்போய்த் தூது சென்று தையலிடம் சேதி சொன்னான்; சேதி அறிந்தாள். பஞ்சாட்சரத்துக்கும் காவேரிக்கும் பரிசம் போட்டு, பாக்கு மாற்றி நல்ல நாளில் மூன்று

முடிக்கப் போடப்பட்ட பின்னர்தான் சொக்கலிங்கத்துக்கு நல்ல மூச்சு வந்தது.

"சொக்கலிங்கம், இதோ பாரு, சுங்கடிப் புடவை. இது உன் பெண்சாதிக்கு. இப்பவே கொண்டு போய்க் கொடுத்துவிடு. காவேரிப் பொண்ணுக்கு இதிலே ரொம்பக் கருத்து..." என்று குஷாலாகச் சொல்லிய பஞ்சாட்சரம் தன் திருமணப் பரிசாகத் தன் நண்பனிடம் அந்தப் புடவையைச் சமர்ப்பணம் செய்தான். தாங்க முடியாத மகிழ்ச்சியுடன் சொக்கலிங்கம் அதைப் பெற்றுக் கொண்டான். "பஞ்சாட்சரம், காளி ஆத்தா புண்ணியத்திலே நாம் ரெண்டு பேரும் இன்னிக்குப் போல என்னிக்கும் உசிரும் உசிரும் கலந்த நண்பர்களாகப் பழகிப் பாடி ஆடவேணும்" என்றான் சொக்கலிங்கமும் குதூகலம் தாங்க முடியாமல்.

மழைத் துளிகள் ஈரம் சொட்டி நின்றன.

"என்னை மச்சான்கிட்டே ஒப்புவிச்ச சொக்கலிங்க அண்ணாச்சி வீட்டுக்கு ஆபத்துக்கு உதவி செய்யத்தான் வேணும். அந்த மனுசன் மனசு மாறிப் படுத்தடியா நடந்தாலும், அதுக்காவ நாம்பளும் நடக்கலாமா? அப்பது ரூபாயை எண்ணி இப்பவே கொடுத்துட்டு வரேன்......" என்று முடிவு செய்து கொண்டு உள்ளே கடைக்குள் நுழைந்த காவேரி, அரிசிப்பானை அடுக்கினுள் கை விட்ட தருணம் பார்த்து. "காவேரி" என்ற அழைப்பு அலைபாய்ந்து வந்தது. தொப்பலாக மழையில் நனைந்து நின்றான் பஞ்சாட்சரம்.

'அம்மாடி, நல்ல வேளையாப் போச்சு. நான் இவரு விரோதிக்கு இப்பொழுது பணம் கொடுத்து ஒத்தாசை பண்ண நெனைச்சதை அறிஞ்சா, அப்பாலே என் தலையைச் சீவிப்பிடுவாரே. அவரு கோபத்துக்கு என்னாலே பதில் சொல்ல முடியாதே...' என்று நினைத்துக் கொண்டே காவேரி, தன் மச்சானுக்குக் கொடியிலிருந்து மாற்றுடை எடுத்துக் கொடுத்தாள்.

மந்தாரம் கலைந்தது; வானத்தில் தாரகைக் குழந்தைகள் சில கண் சிமிட்டி விளையாடிக் கொண்டிருந்தன.

*

**வா**சல் முகப்பில் வில் வண்டி நின்றது. பஞ்சாட்சரம் பறந்து கொண்டிருந்தான்.

"ஏய் காவேரி, சீக்கிரம் பணத்தை நல்லா எண்ணிக் கொண்டு வா. இன்னிக்கு ஒரு பச்சை நோட்டு வெட்டாயிடும். வாயைக் கட்டி வயித்தைக் கட்டி, மண்ணிலே உழைச்ச பணம் கடைசியாக் கோர்ட்டுக் கச்சேரிக்கு இப்படித் தண்டத்துக்குத் தண்ணியாக் கரையுது. அதுக்காக வந்த வம்பை விட்டுவிட முடியுமா? என்னமோ, நம்பளுக்கு விடி மோட்சம் காட்ட வேணும். இன்னிக்குத் தீர்ப்பை நெனைச்சாத்தான் நெருப்பாப் பத்தி எரியுது நெஞ்சு. அந்தப் பய மவன் சொக்கலிங்கம் இன்னிக்குத்தான்


## கல்கி

(வாரப் பதிப்பு)

சந்தா விவரம்

| | | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|---|
| இந்தியா இலங்கை | ரூ. | 13-0-0 | 6-8-0 |
| பர்மா மலேயா வெளிநாடு | ரூ. | 16-4-0 | 8-2-0 |

குறிப்பு:—வி. பி. பி. மூலம் அனுப்புவது கிடையாது. தயவு செய்து முன் பணம் அனுப்ப வேண்டும். இலங்கை நேயர்கள் மட்டும் வி. பி. பி. மூலம் சந்தாத் தொகையைச் செலுத்தலாம்.

கடிதம் எழுதும்போது சந்தா நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரைக் குறிப்பிடவும்.

**மானேஜர் - கல்கி காரியாலயம் - சென்னை**


கூண்டேறிப் பொய்ச் சாட்சி சொல்லப் போகிறான். காளி ஆத்தா, இம்மிகூட என் பேரிலே தப்புத் தண்டா கிடையாது. நீ அறியாததா? நியாயம் பலிக்குமின்னுவாங்களே...தாயே, என் மானத்தை இன்னிக்குக் காப்பாத்து. நீ தான் தீர்ப்பிலே வந்து நீதி பேசவேணும்........." என்று கூறி உடனே அவன் அங்கிருந்து புறப்பட்டான்.

**அ**ன்றுதான் அறந்தாங்கி மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் வழக்கின் தீர்ப்பு. பஞ்சாட்சரத்துக்கும் அவ்வூர் மாஜி கி. மு. பெரியண்ணத் தேவனுக்கும் நில விஷயமாக எழுந்த சிறு தகராறு வளர்ந்து, வாய் முற்றிக் கைகலந்து அடிதடி ஏற்பட்டுக் கடைசியாகக் கோர்ட்டுப் படி ஏறிவிட்டது. பஞ்சாட்சரம் கேஸ் கொடுத்தான்; குற்றப் பத்திரிகை பதிவானது. கேஸ் நடந்தது; சரங்கிகள் பல முடிந்தன. எதிர்த் தரப்புக்காரன் பணக்காரன்; அடாபிடிக் காரனுங்கூட. இல்லையென்றால், பஞ்சாட்சரத்துக்குப் பரம்பரை பாத்தியமாகச் சொந்தமான பத்துக்குழித் துண்டு 'தாழையடிச் செய்க்'கு உரிமை கோருவானா? இல்லையென்றால், ஒரே தட்டில் ஒன்றாக உண்ட பஞ்சாட்சரத்துக்கு எதிராக அவன் நண்பன் சொக்கலிங்கத்தைச் சரிக்கட்டித் தனக்குச் சாட்சி சொல்லுவதற்கு ஏற்பாடு பண்ணியிருப்பானா?

பஞ்சாட்சரத்துக்கு நடக்கும் வியாச்சியத்தைப் பற்றி அக்கறையில்லை; விரோதிக்காரனுடைய காணியாட்சியைப் பற்றிக் கூட அவன் அக்கறை கொள்ளவில்லை. ஆனால், 'உயிர்த்தோழன் சொக்கலிங்கம் இப்படித் தன்னை ஆபத்தில் கைவிட்டுத் தன்னை ஆழக் குழிதோண்டி மண் மூடப் பார்க்கிறானே...' என்ற ஆத்திரம்தான் பஞ்சாட்சரத்தைப்

பாடாய்ப் படுத்தியது; இராத் தூக்கத்தை மறக்கடித்தது; ஆக்கின கஞ்சியைக் குடிக்கவும் மறந்தான்; சிரிப்பில்லே; கேளிக்கையில்லை. நண்பர்களிடையே பிளவு ஏற்பட்டது. வைகாசி விசாகத்தன்று காளி அம்மன் தேர்த் திருநாளன்று நண்பர்களிடையே விளையாட்டாக எழுந்த பேச்சு வாதம் கடைசியில் வினையாக முற்றியது. அன்று தொட்டு இருவரும் ஒருவரோடு ஒருவர் பேசுவதில்லை; காண்பதில்லை. அந்தச் சமயம் பார்த்துத்தானு, அந்தக் கோர்ட் கேஸு ம் மூளக்க வேண்டும், பஞ்சாட்சரத்துக்கு விரோதமாக? பஞ்சாட்சரத்துக்கு எதிரிடையாகச் சொக்கலிங்கம் கோர்ட்டில் சாட்சியம் சொல்லுவதாகக் கையடித்துக் கொடுத்த சிதம்பர ரகசியம் எப்படியோ எதிரி பெரியண்ணனையும் விட்டு நழுவி, ஊரெங்கும் பரவிக் கடைசியில் பஞ்சாட்சரத்தையும் அடைந்து விட்டது. பஞ்சாட்சரம் தன் நண்பனின் நம்பிக்கைத் துரோகத்தை எண்ணி எண்ணி ஏங்கிக் குமுறிப் புரண்டான்! இதை யெல்லாம் சொக்கலிங்கம் எப்படி அறிந்திருப்பான்...?

✶

"**கா**வேரி! காவேரி...!"

"மச்சான், வந்துட்டிங்களா? கேசு என்னுச்சுங்க...மச்சான்..."

"காவேரி, தெய்வம் நம்ம பக்கம் நின்னு நியாயத்தை அனுசரிந்து நல்ல தீர்ப்புச் சொல்லிப் பிடுச்சு."

"அம்மாடி, ஆத்தா கைவிட மாட்டான்னு தெரியுமே. மனுசங்க நமக்கு எத்தனே கிட்டி கட்டி, கருவம் வச்சுத் தீவினை செய்ய நினைச்சாலும், தெய்வம் நமக்கு என்னிக்கும் துணையிருக்கும்..."

"காவேரி, தெய்வம் நமக்குத் துணை என்பது ரொம்ப உண்மை. ஆனு முதலிலே இன்னிக்கு வியாச்சியம் நம்ப பக்கம் தீர்ப்பாகி, எதிரிக்கு நூறு ரூபாய் அபராதம் போடறதுக்கு மூல காரணமாயிருந்த மனித தெய்வம் ஒன்றும் உண்டு, பொண்ணே..."

"என்ன, விடுகதை போடுறீங்களே...?"

"விடுகதைதான் காவேரி, விடுகதைதான்! என் தோழன்தான் அந்தத் தெய்வம்..."

"நெசம்மாவா?"

"ஆமா; சொக்கலிங்கம்தான் என் மானத்தைக் காப்பாத்தி விட்டான். நியாயத்தைச் சொன்னுன் கோர்ட்டிலே. எதிரி தரப்புக்கு ஆஜரான சாட்சி, இப்படி நியாயத்தைக் கண்ட பிரகாரம் சொன்ன சொக்கலிங்கத்தின் வாக்குமூலத்திலேதான் நம்ப கேஸ் ஜெயிச்சுது...! அவன் மனசு இப்படித் திடீருன்னு மாறி நிஜத்தைச் சொன்னதிலே எனக்குக்கூட ஒரே மலைப்பாப் போயிடுச்சு. கச்சேரியிலே யிருந்து வண்டியிலே வருகிற போது, அவன் வீட்டிலே குரல் கேட்டுச்சு வண்டியை நிப்பாட்டிக் கேட்டேன். கோர்ட்டிலே வேணுமின்னுதான் - அதுவும் எனக்குச் சாதகமாகத்தான் அப்படி நியாயத்தைத் துணிஞ்சு சொன்னுளும். ஏதோ ஆத்திரத்திலே முன்னடி எதிரிக்குச் சாட்சி சொல்லுகிறதாகத் தலையாட்டி விட்டானும் சொக்கலிங்கம். ஆனு, நேத்திக்கு சாயந்திரம் அந்தச் சுங்கடிப் புடவை — அதுதான் நான் அவனுக்கு கல்யாணப் பரிசாகக் கொடுத்த அந்தச் சேலைத் துணியை அவன் பெண்டாட்டி எடுத்து அவன் கண்ணிலே பட வச்சாளாம். புடவையைக் கண்டாலாவது தன் மச்சானின் இறுக்கு மனசு மாறி நமக்கு நல்லதாகச் சாட்சி சொல்லமாட்டாரான்னு தான் அவளுக்கு ஆசை வந்து அப்படிச் செய்தாளாம். கடைசியிலே அவள் தந்திரம் பலித்து விட்டது. நம்பளுடைய அந்தப் புடவைதான் கடைசியாகச் சொக்கலிங்கத்தின் மனசைச் சொக்குப் போட்டு மாத்திருச்சு. புருசனும் பொண்டாட்டியும் சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கிட்டிருந்தாங்க......காவேரி, என்ன இருந்தாலும் சொக்கலிங்கம் என்னேடு அடி நாள் தொட்டு உசிருக்குசிராகப் பழகினவனில்லையா? வார இளமை அவன் தலைப் பொண்ணுக்குச் சடங்கு சுத்தரானுங்களாம். பணம் தேவைப் படுறதைக் கொடுத்து, நாமே போய் அந்த விழாவைச் சிறப்பாக நடத்தவேணும். சரி, ராவுக்குச் சீக்கிரமா ஒரு விருந்து பண்ணிப் பிடுவோம்! சொக்கலிங்கத்தைப் போய்க் கையோடே கூட்டிக்கிட்டு வாறேன்; காவேரி, இப்பத்தான் ஞாபகம் வருது, இந்தக் கிழமை என் கூட்டாளி சொக்கலிங்கம் சம்சாரம், நாம் மூந்தி கண்ணாலத்துக்கு வாங்கிக் கொடுத்திருந்த புடவையை யார் மூலமோ உங்கிட்டே அனுப்பி, அதை அடகு வச்சிக்கிட்டுப் பணம் கடன் கேட்டு அனுப்புச்சுதாமே...அப்படிச் செஞ்சது கூட உன் மனசைச் சோதிக்கத்தானும்......! நீ அப்படி மூஞ்சி முறிச்சு 'இல்லே'ன்னு மறுதளிச்சுங்கூட, அன்னிக்கு அந்தப் பொண்ணுக்கு நம்ப பேரிலே என் னத்தனை கிலேசமும் தோணலே; இப்பத்தான் எனக்குத் தோணுது......காவேரி, சொக்கலிங்கத்துக்கும் அது சம்சாரத்துக்கும் சேர்த்தே இன்னிக்கு விருந்து பண்ணிப் பிடுவோம்......பலே......பலே......! எல்லாம் ஆத்தா கருணைதான்......!"

காவேரி அப்படியே பெண் பதுமை போல் பிரமித்து நின்று விட்டாள்!

★

**அ**ந்த வாரம் சொக்கலிங்கத்தின் முதல் பெண்ணின் சடங்குக்கு, அவன் உயிர்த் தோழன் பஞ்சாட்சரத்தின் முதல் பரிசு கொட்டு மேளம் முழங்க ஊர்வலம் சென்ற வைபவத்தைப் பற்றித்தான் பூவந்தர்குடிக் கிராமமே இறந்த வாய் மூடாமல் பேசிக் கொண்டிருக் கதாம்......!






சௌம்ய நாராயணன்

நானும் என் நண்பர் சாரதியும் சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டு, ஹோட்டலிலிருந்து வெளியே வரும்பொழுது, யாரோ ஒருவன் பின்னாலிருந்து என்மீது மோத நல்ல வேளையாகக் கீழே விழுந்து விடாமல் சமாளித்துக் கொண்டு அவனுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்ய வாயெடுத்தபொழுது அவன் "ஸார், தயவு செய்து மன்னிக்க வேண்டும். வாழைப் பழத்தோல் வழுக்கி விட்டது. வேறொன்றுமில்லை" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

சாரதி தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "பார்த்தாயா"......என்று ஆரம்பிக்க "சரி, இதை ஒட்டி உன் குட்டிப் பிரசங்கத்தை ஆரம்பித்துவிடுவாயே" என்றேன்.

"ஆமாம் கேள்! இந்த வாழைப் பழத் தோலின் அபூர்வ சக்தியைப் பற்றிக் கதை கதையாகச் சொல்லலாம்."

"ஆரம்பி, ஆரம்பி! உன் வயிற்றுக்குள்ளே குளு குளுவென்று இரண்டு கப் ஐஸ் கிரீம் அல்லவா வேலை செய்கிறது" என்று சொன்னேன்.

"போன வருஷம் லிபர்ட்டி இன்ஷ்யூரன்ஸ் மானேஜருக்குக் கல்யாணம் நடந்த விஷயத்தைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கலாம்."

"ஆமாம்!"

"அந்த மானேஜருக்குக் கொடுத்த பெண் யாரென்று தெரியுமா...?"

"தெரியாது!..."

"அதைத்தான் சொல்ல வருகிறேன். கிங்ஸ் சர்க்கிள் ஸ்டேஷனை ஒட்டி "குப்தா சதன்" இரண்டாம் மாடியிலிருந்த ரங்கண்ணாவைத் தெரியுமா உனக்கு?"

"ஆகா, நன்றாகத் தெரியும்."

"சாட்சாத் அவர் பெண் மைதிலியைத் தான் லிபர்ட்டி இன்ஷ்யூரன்ஸ் கிளை ஆபீஸ் மானேஜர் சாரங்கபாணிக்குக் கொடுத்திருக்கிறது" என்றார்.

அடடா! அவ்வளவு பெரிய இடத்திலா அவர் சம்பந்தம் செய்துகொண்டிருக்கிறார்?"

"அவரா சம்பந்தம் செய்தார்? பையனைப் போய்ப் பார்த்தாரா, ஜாதகம் வாங்கினாரா அந்தச் சிரமமெல்லாம் அவர் சிறிதும் எடுத்துக் கொள்ளவேயில்லை."

"பிறகு எப்படித்தான் இந்த இடம் அவருக்குக் கிடைத்தது?"

"அதைத் தான் சொல்ல வருகிறேன். இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி சாரங்கபாணியைப் பற்றி உனக்குத் தெரிந்திருக்கலாம்..."

"ஆமாம். பெரிய பணக்காரர்; மயிலாப்பூரில் நான்கு வீடு; மாம்பலத்தில் இரண்டு மூன்று பங்களா. அவர் தகப்பனார் ரிடயர்ட் ஜட்ஜ்; பெரிய லக்ஷாதிபதியாயிற்றே!"

"போதும். இனிமேல் நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டு வா."

சாரங்கபாணி, எம். ஏ., பி. காம். எல்லாம் படித்து மூளையை முறுக்கேற்றி விட்டுக் கொண்டு பிறகு வீட்டில் சும்மா இருப்பதை நரகவேதனை போல் உணர்ந்த தன் தகப்பனாரை நச்சரித்து, லிபர்ட்டி இன்ஷ்யூரன்ஸ் கிளை ஆபீஸ் மானேஜராக நியமிக்கப்பட்டு பம்பாய்க்கு வந்து சேர்ந்தான். வெஸ்ட் டெண்டு ஹோட்டலில் ஜாகை. பிரோஸ் ஷா மேத்தா ரோட்டில் ஆபீஸ். ஆபீஸ் போய் விட்டு வருவதற்குக் கம்பெனியில் புது மாடல் ப்யூக் கார் கொடுத்திருந்தார்கள்.

கன்னிப் பருவத்தைக் கனவேகத்தில் அடைந்து விட்ட மைதிலி அதன் பிறகு தன் வாழ்க்கை நத்தை போல ஊர்வதை உணர்ந்தாள். மெட்ரிகுலேஷன் பரீக்ஷை தேறிவிட்டு, அதற்கு மேற்கொண்டு படிக்க வசதியோ, உதவியோ இல்லாமல் சிறைவாசம்போல வீட்டிலடைந்து கொண்டிருக்கும் பொழுது அவளுக்கு மனவேதனை அதிகமாகியது. தகப்பனாரை அடிக்கடி நச்சரிப்பதும், தாயாரிட்ட வேலையைச் செய்யப் பிடிவாதம் செய்வதும், தனக்கெதிராக வீட்டில் சதிசெய்து கொண்டிருக்கும் பாட்டியைத் தன் மனதிற்குள் வைது கொண்டும், அண்ணன் தம்பிமார்களுடன் சதா சண்டை சச்சரவு செய்து கொண்டும், நாட்களை வருஷங்கள் போலவும், மாதங்களை யுகங்கள் போலவும் கழித்துக்கொண்டு வந்தாள். அதோடு கூட ஒரு நாள் அவளுடன் சேர்ந்து படித்துக்

கொண்டு வந்த நீலா தனக்கு ஸப்ளை டிபார்ட்மெண்டில் வேலை கிடைத்திருக்கிறதென்று சொல்லியதும், மைதிலிக்கு நிலையே கொள்ளவில்லை.

அன்றிரவே அவள் தகப்பனாரிடம் விஷயத்தைச் சொல்லி அவரை இணங்க வைத்து விட்டாள். ஒரு கம்பெனியில் டெலிபோன் ஆபரேடராக அவளுக்கு வேலை கிடைத்தது. மைதிலி அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. வேலையும் கஷ்டமில்லை. சம்பளமும் நிறையக் கிடைத்தது. ரங்கண்ணா குடும்பமும், மேட்டி விருந்து சரிவை நோக்கிச் செல்லும் பாரவண்டிபோல் சற்று பரபரப்புடன் காணப்பட்டது.

“குதிர்மாதிரி வளர்ந்து கிடக்கும் பெண்ணை வைத்துக் கொண்டு இப்படியா வெறுமனே இருப்பது!” என்று தன் தாயாரிடமிருந்து சொற் பாணங்கள் ரங்கண்ணாவைத் தாக்க அவரும் பற் பல திசைகளிலிருந்து ஜாதகங்களைத் தருவிக்கலானார். எவ்வளவோ பிள்ளைகள் வந்து மைதிலியைப் பார்த்து விட்டுப் போயினர். சில இடம் மனதிற்குப் பிடித்தது, சில இடம் பிடிக்கவில்லை. ஆனால் ஒரு வருடம் ஓடி மறைந்தும் ஒரு வரனாவது நிச்சயமாகவில்லை.

வெறுங்கை முழம் போடுமா? ரங்கண்ணா கையில் ஓட்டமிருந்தால் இருந்த இடத்திலா இருப்பார்? கல்கத்தாவுக்கோ, டெல்லிக்கோ, கன்னியாகுமரிக்கோ பறந்து சென்று ஊரை வட்டமிட்டு வரன்களைக் கட்டிக்கொண்டு வந்துவிட மாட்டாரா? பிரமதேவனின் பரிபூர்ண கடாக்ஷத்தினால் அவர் குடும்பம்பெருகியிருந்தும், மஹாலக்ஷ்மியின் வரப்பிரசாதம் மாத்திரம் இல்லாமலிருந்தது.

மைதிலியின் ஜாதகத்தைப் பார்த்தவர்களோ, “அடே, இவள் கலியாணத்திற்காகவா கலங்கிக் கொண்டிருக்கிறீர்கள்? அட, ராமச்சந்திரா! இவளுக்கு வரப்போகிறவன் மன்மதன் சார்! உங்கள் பெண் எதிரிலே வந்து விழப்போகிறான் சார்! பேசாமலிருங்கள். வருகிற சித்திரை மாதத்திலே நான் சொல்லியபடி கலியாணம் நடக்கவில்லையென்றால் என் பெயரை மாற்றிக் கூப்பிடும்!” என்று அவள் தகப்பனாரிடம் சொல்லி விட்டுப் போனார்கள்.

மழைகாலம் நெருங்குவதற் கறிகுறியாக வானத்தில் மேகக் கூட்டங்கள் சஞ்சரித்துக் கொண்டிருந்தன.

மைதிலி தினந்தோறும் ஹார்ன்பி ரோட்டின் வழியாகப் பிரோஸ் ஷா மேத்தா ரோட்டைக் கடந்து தன் ஆபீஸ் போய்வந்து கொண்டிருந்தாள்.

பிரோஸ் ஷா மேத்தா ரோட்டிலிருந்து சாரங்கபாணி வக்கீலைக் கலந்து பேச அடிக்கடி “மெடோஸ் தெருவுக்கு”ப் போய் வந்து கொண்டிருந்தான்.

எவ்வளவோ தடவைகள் அதே பாதையில், மைதிலியும் சாரங்கபாணியும் சேர்ந்தோ தனித்தோ பார்த்தும் பார்க்காமலும் சென்று கொண்டிருந்த போதிலும் பிற்காலத்தில் அவர்களிடையே உண்டாகப் போகும் நெருங்கிய பந்தத்தைப் பற்றிச் சிறிதாவது அறிந்தவர்களில்லை.

சங்கர் கபேயில் டிபன் சாப்பிட்டு விட்டு மைதிலி ஆபீசுக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள். அதே சமயம் சாரங்கபாணியும் விரைவாக சர்ச் கேட் தெருவை நோக்கி விரைந்துவந்து கொண்டிருந்தான்.

இதற்கிடையில் பிளாஸ்டிக் சாமான்கள் வியாபாரம் செய்யும் ஜனாப் அபூபக்கர் இரண்டு வாரமைப்



பழங்களை உரித்துத் தின்று விட்டுத் தோலை அந்த நடை பாதையிலேயே போட்டு விட்டுத் தன் அரும் பெருந் தொண்டை அறியாதவனாய், அன்றுடைய வயிற்றுப் பிழைப் பிற்காக, அடித் தொண்டை கிழியக் கத்திய வண்ணம் போய்க் கொண்டிருந்தான்.

வழக்கம் போல மைதிலி, பிரோஷ் ஷா மேத்தா ரோட்டைக் கடந்து எதிர்ப்புறத் திலுள்ள மேடையின் மீது சென்று கொண் டிருந்தாள். அப்பொழுது அவள் பின்னால் "டக் டக்" என்று ஓசையிட, அவசரமாக வந்து கொண்டிருந்த சாரங்கபாணியின் பூட்ஸின் அடிப் பாகத்தில், அபூபக்கர் எறிந்து விட்டுப் போன வாழைப் பழத் தோல் அன்புடன் சிக்கிக் கொள்ள, நிலை தடுமாறிச் சாரங்கபாணி கீழே விழ, அதே சமயம் அவன் முன்னால் சென்று கொண்டி ருந்த மைதிலியின் மீது அவன் ஒருகால் தாக்க அவளும் "ஐயோ" என்று அலறிக் கொண்டு எதிர்ப் புறத்திலிருந்த கல்தூணில் முட்டிக் கொண்டு, பிரக்ஞை தவறிக் கீழே விழுந்து விட்டாள். நெற்றியின் ஒரு புறத்தி லிருந்து ரத்தம் பெருகிக் கொண்டிருந்தது.

"டாம், நான்ஸென்ஸ்" என்று சொல்லிக் கொண்டு எழுந்த சாரங்கபாணி, தன்னால் தாக்கப்பட்ட ஒரு பெண் நினைவிழந்து கீழே கிடப்பதைப் பார்த்து, சப்தநாடியும் ஒடுங்கப் பெற்றான். பெரிய கூட்டம் கூடிவிட்டது.

"ஐயோ பாவம், அடி பலமோ!" என்று சிலர் மைதிலிக்காக அனுதாபப்பட்டார்கள்.

"டீக்காக டிரஸ் செய்து கொண்டு வந்து விட்டால் கண் நலை தெரியாது போலிருக் கிறது" என்று மறைமுகமாகச் சாரங்க பாணியை நிந்தித்தார்கள்.

"கூட்டத்திலிருந்த ஒரு பார்ஸிப் பெண் மைதிலிக்கு முதல் சிகிச்சை செய்தாள். "என்னய்யா வேடிக்கை! உடனே ஆஸ்பத் திரிக்கு எடுத்துக் கொண்டு போங்கள்" என்று கூட்டத்திலிருந்து ஒருவர் சொல்ல, அந்த க்ஷணமே சாரங்கபாணி ஒரு டாக்ஸியை அமர்த்தி, மைதிலியை ஸெயிண்ட் ஜார்ஜ் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றான்.

தன்மீது என்ன பழி நேர இருக்கிறதோ என்று மனங் கலங்கினவனாய், ஆப்பரேஷன் ரூமிற்கு வெளியே சாரங்கபாணி நிலை கொள் ளாமல் மேலும் கீழும் நடந்து கொண்டிருந் தான். பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் மைதிலி தலையிலும் கையிலும் பெரிய கட் டுடன் வெளியே கொண்டு வரப்பட்டு ஒரு வார்டில் கொண்டு செல்லப்பட்டாள்.

சாரங்கபாணி, பரபரப்புடன் டாக்டரை அணுகி, எப்படியிருக்கிறதென்று விசாரித் தான். அவர் ரொம்ப அபாயமில்லை; சரி யாகிவிடும் என்று சொல்ல, சாரங்கபாணி ஒருவாறு மனத்தைத் தேற்றிக் கொண்டு, மைதிலியை ஒரு முறை பார்த்து விட்டு ஆபீஸுக்குத் திரும்பினான்.



மைதிலிக்கு நேர்ந்த விபத்தை டெலி போன் மூலம், ரங்கண்ணாவின் நண்பர் காணுவையர், 'யாரோ ஒருவன் உங்கள் பெண்ணை அடித்துக் காயப்படுத்தி விட் டானாம். ஸெயிண்ட் ஜார்ஜ் ஆஸ்பத்திரிக் குக் கொண்டு போயிருக்கிறார்களாம்' என்று சொல்ல, ரங்கண்ணா பதறிப் போய் ஒரு டாக்ஸியை அமர்த்திக் கொண்டு ஆஸ்பத்திரியை அடைந்தார். அவர் மைதிலியின் கட்டிலின் அருகே நெருங்கவும், அதே சமயம் ஒரு வாலி பன் அவ்விடத்தை விட்டு நகர்ந்து செல் வதையும் கவனித்தார்.

மைதிலி கண்களைத் திறந்த பொழுது தன் தகப்பனார் கவலையோடு உட்கார்ந்து கொண்டிருந்ததைக் கண்டாள். முதலில் எங்கிருக்கிறோம் என்று அவளுக்குப் புரியவில்லை. பிறகு "அப்பா, என்ன... இங்கெப்படி வந்தேன். என் தலையில் என்ன கட்டு? ஐயோ கை வலிக்கிறதே" என்று முனகினாள்.

"நான் சொன்னால் நீ கேட்பாயா, வேலைக்கும் போக வேண்டாம்; வெட் டிக்கும் போக வேண்டாம் என்று சொன் னேன். நீ கீழே விழுந்து விட்டாயாம். யாரோ இரக்க சிந்தையுள்ளவர் உன்னை இங்கு கொண்டு வந்தார்களாம்" என்று சுருக்கமாகக் கூறிமுடித்தார்.

மறு தினம் ஆபீஸுக்குச் சென்ற சாரங்கபாணிக்கு வேலையே ஓடவில்லை. சதா மைதிலிக்கு நேர்ந்த விபத்தைப் பற்றியும், அவள் எப்படியிருக்கிறாளோ என்றும் வேதனையாயிருந்தது. அவள் காயத்திற்குத் தான்தான் காரணமென்று கவலை கொண்டு அன்று சாயங்காலம் அவளைப் போய்ப் பார்த்துவிட்டு வருவோமென்று கிளம்பி ஆஸ்பத்திரியை அடைந்தான். மைதிலியின் கட்டிலின் பக்கத்தில் வயது முதிர்ந்த தம்பதிகள் இருக்கக் கண்டு சற்றுத் தயங்கினான்.

அவன் அவளை நெருங்க நெருங்க மைதிலியின் கண்கள் பிரகாசமடைந்தன. அவன் தோற்றத்தைக் கண்டு அவள் கண்கள் அதிசயத்தால் விரிந்தன. அவள் இருதயம் படபட வென்றடிக்க, ரத்த ஓட்டம் அதிவிரைவில் பெருக, அவள் முகம் குப்பென்று சிவந்தது. இருவர் கண்களும் கலந்தன. பார்வையின் வேகத்தில் கட்டுண்டு பரவசமடைந்தனர். அவர்கள் உள்ளங்களின்றும் உணர்ச்சிப் பெருக்குப் பொங்கி வழிய, இருவர் மனதும் ஒன்று சேர்ந்து நிர்மலமான ஆகாயத்தில் பறந்து திரிவது போல் உணர்ந்தார்கள்.

தங்களையே மறந்து ஒருவரையொருவர் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த சாரங்கபாணியையும் மைதிலியையும் கவனித்த, ரங்கண்ணாவின் சம்சாரம் தன் கணவனை எச்சரிக்க, அவரும் விஷயத்தைப் புரிந்து கொண்டு, சாரங்கபாணியிடம் பேச ஆரம்பித்து, அந்த அரைமணி நேரத்திற்குள்ளாக, அவன் வரலாறு முழுவதையும் கேட்டு அளவிலா ஆனந்தமடைந்து, தம் பெண்ணுக்காக அவன் எடுத்துக் கொண்ட சிரமத்திற்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். அவர் கேட்ட கேள்விகளுக்குப் புன்னகை தவழப் பதிலுரைத்து அவர் மனசைப் புளகாங்கிதமடையச் செய்ததோடு மல்லாமல், வைத்தியச் செலவு முழுதும் தானே ஏற்றுக் கொள்வதாகச் சொல்லி விடை பெற்றுக் கொண்டான்.

சாரங்கபாணி மைதிலியின் மனசிலிருந்த ஒரு காலியான இடத்தை வியாபித்துக் கொண்டு தன் நினைவு நாளுக்கு நாள் அதிகரிக்க, மைதிலியின் நிலை கொள்ளாத தவிப்பை அதிகப் படுத்தினான். அதே போல் மைதிலியைப் பற்றிய நினைவுகள் அவன் உள்ளத்தில் வியாபித்தன.

மைதிலி ஆஸ்பத்திரியை விட்டு நீங்கி, வேலைக்குச் சேர்ந்த பின் அடிக்கடி சாரங்கபாணியைச் சந்தித்துப் பரஸ்பர நட்பை வளர்த்துக் கொண்டு வந்தாள்.

இவர்கள் இப்படியிருக்கையில், சாரங்கபாணியின் தகப்பனார், தம் பிள்ளையின் விவாக விஷயமாக மிகவும் சிரத்தை காட்டலானார். காரணம் அவர் மனைவியின் நச்சரிப்புதான். அவனை எப்படியாவது மணமேடையில் பார்க்க வேண்டும் என்று அந்த அம்மாள் ஆவல் கொண்டாள்.

இந்தச் சமயம் பார்த்துச் சாரங்கபாணி, மைதிலியைப் பற்றி, அவள் குடும்பத்தைப் பற்றி, அவளுக்கு நேர்ந்த விபத்தைப் பற்றியெல்லாம் தன் தகப்பனாருக்கு எழுதினான்.

சாரங்கபாணியின் தகப்பனார் வெகு முற்போக்கான கொள்கைகளைக் கொண்டவராதலால், அவன் மனசுக்கிசைந்த மங்கையை மணம் புரியத் தனக்கு யாதொரு ஆட்சேபணையும் இல்லையென்றும், எதற்கும் மைதிலியைப் பார்க்க ஆவலாயிருக்கிறதென்றும் பதில் எழுதினார்.

அந்தக் கடிதத்தைப் பார்த்த சாரங்கபாணி துள்ளினான், குதித்தான், தகப்பனாரை மனமாரப் புகழ்ந்தான்.

எதிர்பாராத அதிருஷ்டம் ரங்கண்ணாவின் குடும்பத்திற்கு முன்னால் தொங்கவிடப்பட்ட மெல்லிய திரையின் பின்னால் காத்துக் கொண்டிருந்தது.

ஒரு நாள் வெள்ளிக்கிழமை. சாரங்கபாணி டெலிபோனின் மூலம் ரங்கண்ணாவிடம் தானும் தன் தாய்தந்தையரும் பெண்ணைப் பார்ப்பதற்காக வரப்போகிறோமென்று அறிவித்தான்.

ரங்கண்ணா அப்படியே அசந்து போனார். ஆபீஸை விட்டு இரண்டு மணிக்கே கிளம்பி வீட்டுக்குச் சென்று விட்டார்.

ரங்கண்ணா வந்தவர்களை உபசரித்தார். அவர் மனைவி வெகு பரிவுடன் சாரங்கபாணியின் தாயாரை விசாரித்தாள். மைதிலி தன் சௌந்தர்யத்திலும், கானத்திலும் அடக்க ஒடுக்கத்திலும் சாரங்கபாணிக்கும் மேலாக அவன் பெற்றோர்களின் மனத்தில் இடம் பெற்று விட்டாள்.

இவ்வளவு தூரம் ஆகிவிட்ட பிறகு ரங்கண்ணாவின் பணக் கஷ்டம் எங்கேயோ ஓடி ஒளிந்து கொண்டது.

ஒரு சுப முகூர்த்தத்தில் ஸ்ரீமதி மைதிலியின் கழுத்தில் சாரங்கபாணி மாங்கல்யத்தை அணிவித்தான்.

* * *

"என்ன சாரதி, இதையும் கட்டுக்கதை என்று சொல்லு!"

"நான் சொல்லத்தான் வேண்டுமா......" என்றேன்.

"சரி, அது கிடக்கட்டும் இன்னொரு முக்கியமான விஷயம். என்ன வென்று கேளு."

"என்ன......?"

"ரங்கண்ணாவும் அவர் குடும்பமும் இப்பொழுது இங்கில்லை. மாப்பிள்ளை சாரங்கபாணி கொடுத்த மாம்பலத்திலுள்ள 'மோகன் வில்லா' வில் இருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டேன்."

"வாழைப் பழத் தோல் வழுக்கி விட்டாலும் விட்டது. ரங்கண்ணாவின் குடும்பத்திற்கு அதிர்ஷ்டம் அடிக்கிறது" என்றேன்.

"ஏன். உனக்கும் அடிக்கும்...அடிக்கும்... எங்கேயாவது வாழைப் பழத் தோல் கிடந்தால் மிதித்துப் பார்!" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தான் சாரதி.

**100% தூய்மையானது, சௌந்தர்ய தைலங்கள் சேர்ந்தது**

# பாமாலிவ் அழகை எடுத்துக் காட்டுகிறது

**உங்கள் சருமத்தையும் சுத்தப்படுத்துகிறது**



இதர உயர்ந்த சோப்களின் 'சாதாரண கவனிப்பை'
விடவும் உங்கள் சருமத்துக்கு உகந்தது பாமாலிவ்
அழகு முறை.
ஆம், இதர உயர்ந்த சோப்களின் 'சாதாரண கவ
னிப்பை' விடவும் உங்கள் சருமத்துக்கு பாமாலிவ்
சோப் உகந்தது என்பது 1285 மாதர்களிடம் 36 நிபு
ணர்கள் நடத்திய சோதனையில் மறுக்க முடியாதபடி
நிருபணமாகி யிருக்கிறது.

பாமாலிவ், அதன் அழகுமுறையைக் கையாளுங்கள். 100% தூய்மையான அதன் மெல்லிய, நறுமண நுரையை தினசரி மும்முறை 60 விநாடிகள் தேயுங்கள். 14 நாள், அல்லது அதற்குள்ளாகவே உங்கள் சருமம் மென்மையும் புதுமையும் பெறும்.

புதுமலரின் நறுமணம்
100% சுத்தமான
நுரைக்களஞ்சியம்
அதிக காலம்
உபயோகிக்கலாம்




**பாமாலிவ் – அழகுக்கு அழகு செய்யும் அருமை சோப்**

# வாழ்க்கையில் அதிக ஆனந்தம்




# கால்கேட்

போரேட்டட்

## பேபி பவுடரை

### உபயோகிப்பதால்

........அதனுல்தான் விவேகமுள்ள தாய்மார்கள் தங்கள் குழந்தையின் தளிர்மேனியை அரிச்சலன்றிப் பாது காக்க கால்கேட் போரேட்டட் பேபி பவுடரை உபயோகிக்கிறார்கள். மிக மெல்லிய மேனிக்கும் இதம் அளிப்ப தற்காக விஞ்ஞான முறையில் தயாரிக் கப்பெற்றது ... புண்படுத்தும் உஷ் ணம் தாக்காமல் தடுக்கிறது; குழந்தை தான் முழுதும் ஜிலுஜிலுவென்று சௌகரியமாய் இருக்க உதவுகிறது இதன் மெல்லிய நறுமணம் உங்களை யும் குழந்தையையும் கவர்ந்துவிடும்

பணம் மிச்சம் — ஜயன்ட் சைஸை வாங்குங்கள்

---

கார்மேகத்தினிடை
காணும் சந்திர மண்டலம்
அழகு வாய்ந்ததே: ஆயினும்
சேர்ந்த கூந்தலிடையே திகழும் சுந்தரி
யின் முக மண்டலத்துக்கு அழகு ஈடாகுமோ?
கூந்தலையும் கூந்தல் அழகையும்
கேசவர்த்தினி கொண்டு
இன்றே பெருக்கிக்
கொள்ளுங்கள்

கேசவர்த்தினி அணா 14. ஷாம்பு அணா 14. தபால் செலவு வேறு: எங்கும் கிடைக்கும்

**தென் இந்திய ரஸாயனசாலை, கோயமுத்தூர்**




## 12. புண் ஆறியது

கொஞ்ச நாட்கள் சென்றன. அப்புறம் தான் குமிளிக்குத் தன் ஒருத்திக்கு மட்டும் அல்ல, தன்னைப் போன்ற அநேகம் பெண்களுக்கு இந்த இடம் அடைக்கலம் அளித்திருக்கிறது என்பது தெரிந்தது. அதை அறிந்த அவளுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. மனிதன் புண்ணியமும் செய்கிறானா? ஆதரவற்றவர்களுக்கு ஆதரவு அளிக்கிறானா? அநாதைகளுக்கு ஆசிரமம் நிறுவுகிறானா? ஆனால் தீயவாழ்க்கை வாழ்ந்து பாவப் படுகுழியில் விழுந்த பெண்ணுக்குத் தூய வாழ்க்கை அருள யாரும் இதுகாறும் ஆசிரமம் நிறுவவோ, அடைக்கலம் அளிக்கவோ முன் வரவில்லையே என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் எழுந்தது.

இந்த உலகம் புண்ணிய காரியத்தைப் புண்ணிய காரியமாகக் கருத வில்லையா, அல்லது இந்தப் புண்ணிய காரியம் இது வரை இந்த உலகத்தின் கண்களில் படாமலே இருந்து விட்டதா? தீய வழியில் இறங்கி உடலை விற்று உயிர் வாழும் மடமை நிறைந்த பெண்களுக்கு, உழைத்து மானமாக உயிர் வாழவும், உணவு தேடிக் கொள்ளவும் தீய வாழ்க்கையைத் தூய வாழ்க்கையாக்கிக் கொண்டு வாழவும் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று ஏன் இந்த உலகத்துக்குத் தெரிய வில்லை? 'எத்தனை இனங்கள் இதுவரை தீண்டத் தகாதவையாகக் கருதப்பட வில்லை? அவையெல்லாம் இன்று தீண்டத் தகுந்தவையாக ஆகி விடவில்லையா? இந்த உலகத்திலே வாழும் பெரும்பாலான மக்கள் நெறி தவறிய மாதர்களைத் தொட்டு இன்புற்று வாழச் சிறிதும் நாணவில்லை; அவர்களை ஒருபுறமாக ஒதுக்கித் தள்ளி இழிவு படுத்தி, தான் ஆனந்தமாக வாழவும் நாணவில்லை. ஆனால் அவர்களை நெறி நிறைந்தவர்களாக ஆக்க வேண்டும் என்று ஏன் ஒரு தர்மாத்மாவோ சீர் திருத்தவாதியோ முன் வரவில்லை? அவர்களைப் பற்றி ஒரு வார்த்தை என்றால் ஒரு வார்த்தை நல்ல வார்த்தையாகச் சொல்லக் கூட அவர்கள் முன் வரவில்லையே, ஏன்? தாழ்ந்த சகோதரிகளின் பெயர்களைச் சொல்லக்கூட அவர்கள் அஞ்சுகிறார்களே, ஏன்? பெயரைச் சொல்லவே கூசும் அந்தப் பெரியார்கள், அவர்களுடைய பரிதாப நிலைக்கு இரங்கி அவர்களை உயர் தூக்கி விடும் பணியில் எங்கே கவனம் செலுத்தப் போகிறார்கள்? தீண்டத் தகாதவன், அன்னிய மதத்தினன், சண்டாளன், கொலையாளி ஆகியவர்களைப் பற்றியெல்லாம் இந்த உலகம் கவலை எடுத்துக் கொள்கிறது. 'தீண்டத் தகாதவனைத் தீண்டத் தகுந்தவனாக ஆக்கு, அன்னிய மதத்தினனைப் பரிசுத்தப்படுத்தித் தன் மதத்தில் சேர்த்துக் கொள், சண்டாளனைச் சகோதரனாகப் பாவி, கொலையாளியின் தூக்குத் தண்டனையை ரத்து செய்து அவன் மீது கருணை காட்டு!' என்றெல்லாம் வானளாவக் கோஷம் போடுகிறது. தன் உரிமையை விலை நாட்டத் தலையால் விற்கிறது. ஆனால் இந்தப் பெண் இனம் என்ன பாவம் செய்ததோ, புரியவில்லையே! எல்லாவற்றிலும் கேடு கெட்ட ஜன்மமாக இந்தப் பெண் இனம் ஏன் இப்படி ஒதுக்கித் தள்ளப்படுகிறது?

நேர்மையும் நெறியும் தவறிய பெண் எந்த இனத்தில் சேர்க்கப்பட வேண்டியவள்?

இது ஒரு கேள்வியா? அவளும் மனித இனத்தைச் சேர்ந்தவள்தான். அவளுக்கும் இருதயம் என்று ஒன்று இருக்கிறது. இவ்விஷயத்தை மக்கள் ஏன் இப்படி மறந்து போய் விடுகிறார்கள்?

தங்களை நெறி தவறாதவர்கள் என்று கூறி இறுமாப்புக் கொள்ளும் புண்ணியாத்மாக்கள் தங்கள் இருதயத்தைத் தொட்டுச் சொல்லட்டும். தவறும் தாழ்வும் யாருக்குத்தான் ஏற்படுவதில்லை? வாழ்க்கையில் தவறே இழைக்காதவர்கள் யார்? தாழ்ச்சியே உறாதவர்கள் யார்? வீழ்ச்சியே பெறாதவர்கள் யார்? ஆனால் ஒன்று; முன்னேற வழி கிடைப்பவன் முன்னேறி விடுகிறான். தன் தவறைத் திருத்திக் கொள்ளச் சந்தர்ப்பம் அளிக்கப்படுபவன், திருந்தி நல்லவன் என்று பெயர் பெற்று விடுகிறான். ஆனால் அதற்கு வகையில்லாதவன் என்ன செய்வான், பாவம்? வாழ்க்கையில் வீழ்ச்சி என்பதையே காணாத மனிதன் யார்? அப்படி ஒரு மனிதன் என்றால் ஒரு மனிதன் இருக்கிறான் என்று யாராவது விரல் மடக்க முடியுமா? வாழ்க்கையில் வீழ்ச்சி என்பதையே காணாதவன், தவறு என்றால் என்ன என்பதையே அறியாதவன் மனிதனோடு சேர்ந்தியே அல்ல; ஒருவேளை அவனைத் தெய்வப் பிறவி என்று சொல்லலாமோ என்னவோ? ஆனால் இந்த உலகமோ நெறி வாய்ந்தவர்களின் உலகம்; மனிதர்கள் வாழும் உலகம். தவறே இழைக்காத தெய்வங்கள் வாழும் உலகம் அல்ல.

நெறி தவறுதவன் என்று சொல்லப்படுகிறவனின் பல வீனங்கள் அவனுடைய உள்ளத்திலேயே ஒளிந்திருக்கின்றன. நெறி தவறியவனின் பலவீனங்கள் பலர் அறியும் பகிரங்க ரகசியமாக அம்பலமாகி விடுகின்றன. இதைத் தவிர இருவருக்கும்இடையே வேறு ஏதாவது வேறு பாடு இருக்கிறது என்ருல், அதை நெறி வழி நின்று வாழ்பவர்கள்தாம் நன்ருக அறிந்திருக்கக் கூடும்.

குயிலி, குயிலியைப் போல் வாழ்க்கையில் வழி தவறி விட்ட கணக்கற்ற பெண்கள் இவர்களுடைய வீழ்ந்த வாழ்வைத் தூய்மைப் படுத்துவதற்கும், அவர்களை அழிவின் கையில் சிக்கி மாள்வதிலிருந்து மீட்பதற்கும், அவர்களைக் காத்து ரட்சிப்பதற்கும், கூலி வேலை செய்து மானமாக உண்டு உடுத்தி உயிர் வாழ வகை செய்வதற்கும், திறன் மிக்க கைத் தொழில் கல்வி புகட்டி அவர்களுடைய வாழ்வைப் பண்படுத்தி வாழ்வாக்குவதற்காகவுமே, பரமானந்தர் 'தர்ம சத்திரம்' ஒன்று திறந்திருந்தார்.



குயிலி தன் சோகக் கதையைப் பரிதாபகரமான குரலில் சொல்லி முடித்தாள். அதைக் கேட்ட சுதாகர் அப்படியே அயர்ந்துபோய் உட்கார்ந்து விட்டான். அவனுடைய இருதயம் இளகியது; உள்ளம் உருகியது. பரமானந்தரின் பிதற்றல்களுக்கிடையே அன்பும் ஆதரவும், தியாகமும் எவ்வாறு இழைந்து பாவோடியிருக்கின்றன என்பது சுதாகருக்கு அப்பொழுதுதான் சரிவர விளங்கியது.

"இந்த உலகத்தில் குயிலியைப் போல் கண் கெட்டுக் கதறுகிறவர்கள் ஒருவரா, இருவரா? பதின்மரா; பல்லாயிரக் கணக்கானவரா, அல்லது எண்ண எண்ணக் கணக்கில் அடங்காதவர்களா?" என்று கணக்கிடத் தொடங்கி விட்டான் சுதாகர். "அனந்தமான இந்த உலகத்தில் அவர்களுடைய எண்ணிக்கையும் அனந்தமாகத்தான் இருக்கும்" என்ற முடிவுக்கு அவன் வர அதிக நேரம் ஆகவில்லை.

சுதாகருக்கு ஏற்பட்டிருந்த காயம் சீக்கிரம் ஆறுவதாயில்லை. அவன் அங்கே உட்கார்ந்திருந்த வேளைகளில் குயிலியின் வாழ்க்கை வரலாற்றைக் கம்பீரமாக ஆராயலானுன். ஆராய ஆராய அவனுக்கு உலகத்தின் உண்மை உருவம் புலப்படலாயிற்று. அதோடு பரமானந்தரின் விசித்திர வாழ்க்கை வேறு, அவன் மனத்துக்கு ஒரு இன்பத்தை அளித்து வந்தது; அறிவை விருத்தி செய்து வந்தது. பரமானந்தரின் வாழ்க்கை அவனுக்கு மாபெரும் லட்சிய வாழ்க்கையாகவே தோன்றலாயிற்று. மாலதி என்ன வேண்டும், ஏது வேண்டும் என்று அடிக்கொரு தடவை கேட்டு அவனைப் பரிவுடன் கவனித்து வந்தாள். அவனுடைய சொந்த வீட்டார்கள் கூட அவ்வளவு கவனித்துச் சிச்ருஷை செய்ய மாட்டார்கள். மாலதி அவ்வளவு தூரம் கவனிக்கத் தொடங்கவே, சுதாகருக்கு வீட்டின் நினைவுகூட வெகு குறைவாகவே வரலாயிற்று.

குயிலி அவன் கேட்டுக்கொண்டபடி அவனுக்குப் பாட்டுக் கற்றுக் கொடுக்க ஆரம்பித்தாள். ஸ்வர சாதகம் செய்வது எத்தனை கஷ்டமான காரியம் என்பது அவனுக்கு அப்போதுதான் விளங்கியது. இசைக் கலையின் ஆனு ஆவன்னு தெரியாதகாலத்தில் அவன் ஸ்வரம் கற்பதைக் கின்னுக் கீரையாக மதித்திருந்தான். க்ஷேத்திர கணிதத்தின் கோட்பாடுகளை நினைவு வைத்துக் கொள்வது சிரம சாத்தியமான காரியம் என்பதை அவன் அனுபவ வாயிலாகக் கற்று உணர்ந்தான். நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது என்பார்களே, அந்தப் பழமொழி ராக ஞான விஷயத்தில் முற்றிலும் பொருந்துவதைக் கண்டான். அவன் ஒரு ராகம் என்று எண்ண அது வேறு ஒரு ராகமாக ஆகி விடுவதைக் கண்கூடாகக் கண்ட பொழுதுதான் அவனுக்குச் சங்கீதக் கலையின் பெருமை புலனுகியது. எந்த ராகத்தில் எந்த ராகத்தின் சாயை பிரதிபலிக்கிறது என்பதை அவனுல் எவ்வளவு முயன்றும் பல தடவைகளில் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவன் 'ப' பேசவேண்டிப் பாடுபட்டால் 'த' தன்னையறியாமல் வந்து விடும். சிற்சில சமயம் ஸப்த ஸ்வரங்களையும் தாண்டி எட்டாவது ஸ்வரமாக ஒரு குரல் ஒலிக்கும். அவன் அரும்பாடுபட்டுப் பாடும் ஸ்வரங்களையெல்லாம் குயிலி வெகு லகுவாகவும் லாகவமாகவும் பாடி விடுவாள். ஸ்வர சாதகம் செய்யும்பொழுது அவனுக்கு எங்கேயாவது இம்மியளவு ஸ்வரம் தப்ப வேண்டுமே! கண்குத்திப் பாம்பாகக் கவனித்தாலும் தப்புவதில்லை. அதையெல்லாம் நேரில் கண்ட அவனுக்கு, அவளுடைய அந்த லாகவத்துக்



குப்பின்னே எத்தனை மாபெரும் உழைப்பு மறைந்திருக்கிறது, அசுர சாதகம் ஒளிந்திருக்கிறது என்பது ஒருவாறு புலனாகியது. அவ்வளவு நாட்களும் சங்கீதத்தை வெகு துச்சமாக நினைத்து வந்த அவனுக்குச் சங்கீதம் உண்மையிலேயே மாபெரும் சாஸ்திரம் தான் என்பது தெற்றென விளங்கியது.

பரமானந்தரின் அந்தத் தர்ம சத்திரத்தில் வாழும் வேறு பல பெண்களுடனும் அவனுக்குச் சிறுகச் சிறுக அறிமுகம் கிட்டியது. அங்கே அவன் பாவச் சகதியில் சிக்கிய பல பெண்டிர்களைப் பார்த்தான். பாவச் செயல்களில் ஈடுபட்டுப் பின் அதில் வெறுப்புக் கொண்ட பல பெண்டிர்களையும் பார்த்தான். தியாகத்தீயில் செல்லத் துணிந்த வேறு சில பெண்டிர்களையும் கண்டான். உலகம் பலவிதம் என்பதை அவன் அந்த இடத்தில் பிரத்யக்ஷமாகக் கண்டான். சிற்சிலருடன் அவனுக்கு ஏற்பட்ட அறிமுகம் நெருங்கிய பழக்கமாகவும் உருப்பெற்றது. அவர்களுடன் நெருங்கிப் பழகக் கிட்டிய வாய்ப்பின் பலனாக, அந்தப் பாபாத்மாக்களுக்கும் இருதயம் என்று ஒன்று இருக்கிறது என்பதை அவனால் நேரில் கண்டு உணர முடிந்தது. அது மட்டும் அல்ல; அவர்களுடைய இருதயம் பூப்போன்றது: மென்மையானது என்பதையும் அவன் உணர முடிந்தது. ஆஷாடபூதி வாழ்க்கை வாழும் குடும்பஸ்தர்களைக் காட்டிலும், சொல்லளவில் நீதி நேர்மை பேசும் சுயகாரியப் புலிகளைக் காட்டிலும், கொழுப்பும் கர்வமும் கலந்து உருவான டாம்பீக புருஷர்களைக் காட்டிலும் அவர்களுடைய இருதயம் ஈரமைப்பு உடையது; இளகிய சுபாவம் படைத்தது என்பதையும் அவன் அறிய முடிந்தது.

பம்பாயில் வாழ்ந்து வந்த அவனுடைய நண்பன் இரண்டொரு தடவை அவன் இருக்கும் இடம் தேடி வந்து அவன் தேக நலத்தை விசாரித்துச் சென்றது உண்டு. அம்மாதிரி பெண்கள் நிறைந்த வீட்டிலே வயது வந்த வாலிபன் ஒருவன் தனியாக வாழ்ந்து வந்தது சுதாகரின் நண்பனின் நேத்திரங்களில் ஐயந்திரிபுக்கு இடம் இன்றிப் பாவப் படுகுழியில் விழுவதாகத்தான் பட்டது. கட்டிளங் காளையான அழகிய வாலிபன், செழித்த பெண்களின் மத்தியில் தனியாக வாழ்க்கை நடத்துவதென்றால் எவருடைய கண்களுக்கும் விபரீதமாகப் படுவது இயல்பு தானே? அவன் நண்பனின் உள்ளத்தில் தோன்றியதை ஒளித்து மறைத்து வைக்கவில்லை. சந்தர்ப்பம் வாய்த்த பொழுது நேருக்கு நேர் சுதாகரிடமே கூடத் தெளிவாகச் சொல்லி விட்டான். ஆனால் சுதாகர் அதைப் பற்றி அவ்வளவாக அக்கறை செலுத்தவும் இல்லை. காதில் வாங்கிக் கொள்ளவும் இல்லை.

ஒரு சந்தர்ப்பத்தில் பரமானந்தர் கூட அங்கே ஆஜராயிருந்தார். அவருடைய நடை உடை பாவனையைக் கண்ணுற்ற சுதாகரின் நண்பனுக்குச் சுதாகர் நிஜமாகவே காலாடி

களின் கூட்டத்தில் வகையாகச் சிக்கிக் கொண்டு கெட்டுப் போவதாகத் தோன்றியது. பரமானந்தரையும் அவன் காலாடிகளின் கூட்டத்தில் ஒருவராகவேதான் கணக்கிட்டான். பரமானந்தர் உலகத்தை ஒரு பொருட்டாக மதித்தால்தானே, அவனுடைய அபிப்பிராயத்தை ஒரு பொருட்டாக மதிப்பதற்கு? அவர் பார்ப்பதற்கு எப்படி யிருந்தால் என்ன? அவர் காரியம் உண்டு, அவர் உண்டு. காரியத்தில் கண்ணும் கருத்துமா யிருந்தார். 'பார்ப்போர்களின் கண்களிலே தம் நடை, உடை, பாவனை எப்படி காட்சி அளிக்கும்? என்ன அர்த்தத்தைக் கொடுக்கும்? என்பதைப் பற்றி யெல்லாம் அவர் எப்பொழுதாவது துளியாவது சிந்தித்துப் பார்த்தால்தானே?

சுதாகரின் நண்பன், சுதாகருக்குப் பாவச் செயலில் ஈடுபடாமல் இருக்குமாறு உபதேசம் செய்தான். பாவச் செயல் என்பது எது, எத்தகையது என்றெல்லாம் சுதாகருக்கு அடுக்கி அடுக்கிச் சொல்லிக் கொண்டே போய்க் கொண்டிருந்தான். பரமானந்தரும் அவன் வார்த்தைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார். அவனைப் பேச்சில் மடக்கி விட வேண்டும் என்று முடிவு கட்டிக் கொண்டு அவர் அவனிடம் பாவத்தைப் பற்றிப் பேசக் கொடுத்தார். அவர் பாவத்துக்குச் செய்த வியாக்கியானத்தைக் கேட்டு அவன் கலங்கிப் போய் வாய் அடைத்து நிற்கும்படியாகி விட்டது.

"பாவமாவது, புண்ணியமாவது? உலகத்தில் பாவம் என்று ஒன்று இருப்பதாகவே நான் எண்ணவில்லை. நேர்மையானவர்கள், நீதி நெறி நிறைந்தவர்கள் என்று தம்மைத் தாமே சொல்லிக் கொள்கிறார்களே, அவர்கள் மனத்தில் உதிக்கும் சந்தேகத்தைத் தவிரப் பாவத்துக்கு இந்த உலகத்தில் தங்கும் இடம் வேறு கிடையாது. பாவம் தங்குவதற்கு இடம் இருந்தால் அல்லவா, பாவம் என்று ஒன்று இருப்பதற்கு?" என்றார் பரமானந்தர்.

"அட! இதென்ன பேச்சு? விதண்டாவாதப் பேச்சு? இப்படியும் ஒரு பேச்சா? எந்தத் தீச் செயலும் பாவம் என்று தான் அழைக்கப்படுகிறது!" என்றான் சுதாகரின் நண்பன்.

"நீ சொல்வது வாஸ்தவம். உன் சொல்லை ஒப்புக் கொண்டே நான் மேலே பேசுகிறேன். என்னைக் கேட்டால் கெட்ட காரியங்கள் செய்வது ஒன்றும் பாவமில்லை. செய்வதையும் செய்துவிட்டு அந்தக் கெட்ட காரியங்களை ஒளித்து மறைக்கப் பாடுபடுவது இருக்கிறதே, அதுதான் பெரிய பாவம், கொடிய பாவம். அதற்கடுத்தாற்போல் உள்ள கேள்வி எந்தக் காரியத்தைக் கெடுதல் என்று சொல்வது, எதைக் கெடுதல் இல்லை என்று சொல்வது என்பது தான். இது மிகமிகச் சிக்கலான கேள்வி. இதற்குப் பதிலே சொல்ல முடியாது; முடிவே ஏற்பட முடியாது!" என்றார் பரமானந்தர்.

"தீச் செயல்கள் என்று எதைச் சொல்கிறோம் என்பதைக் கண்டு பிடிக்க முடியாவிட்டால், தீச் செயல்களைத் தடை செய்வதற்குச் சட்டதிட்டங்கள் ஏன் வகுக்கப்படுகின்றன? எப்படி வகுக்கப்படுகின்றன?" என்று கேட்டான் சுதாகரின் நண்பன்.

"அரசியல் என்பது வெறும் சகதி. அதைக் குட்டை குழப்பிக் கொலை களவை ஆதாரமாகக் கொண்டு அரசாங்கம் என்னும் மாளிகையின் அஸ்திவாரம் நாட்டப்படுகிறது. அந்த அஸ்திவாரத்தின் மேல் கபடம் என்னும் கற்களைக் கொண்டு மாளிகை நிர்மாணிக்கப்படுகிறது. அந்த மாளிகையிலே தான் சட்டங்கள் உருவாகின்றன; திட்டங்கள் தயாராகின்றன. அப்படியிருக்கும் பொழுது அரசாங்கங்கள் புண்ணியத்தின் ரகசியத்தை என்ன அறியும்? புண்ணியத்தை அஸ்திவாரமாகக் கொண்டு இன்று வரை எந்தச் சாம்ராஜ்ய மாளிகையும் எழும்பவில்லை என்று தைரியமாகக் கூறலாம். அதனால் வீண் பிரமையில் கிடந்து உழலாதே. சட்ட திட்டத்தை எடுத்துக் காட்டி அது புனிதமானது என்று சொல்லி அதற்குள் பதுங்கிக் கொள்ள வழி தேடாதே.

"ஒரு குறிப்பிட்ட சட்டம் உருவாவதற்கு ஒரு வக்கீல் காரண பூதராயிருப்பார். ஆனால் கோர்ட்டு ஏறிவிட்டால் அவரே அதற்கு எதிர்வாதம் புரிந்து சட்டத்தைச் சிதள் சிதளாக்கிப் புது வியாக்கியானம் செய்வார். அவருடைய வாக்கு ஜாலம் அவர் வழக்காடும் திறமையினால் உண்மையானதாகத் தோற்றம் அளிக்கும். அதேபோல் ஒரு நீதிபதி வழக்குக்கு நியாயம் வழங்குகிறார் என்று வைத்துக் கொள். பல பொடிகள் வைத்துப் பேசி வழங்கிய நியாயத்துக்குப் பல அர்த்தங்கள் கற்பிக்கும்படியாகத்தான் பேசியிருப்பார். ஏனென்றால் உலகத்தை ஏமாற்றி அவர் அவர்கள் பிழைக்க வழி தேடிக் கொள்ள வேண்டாமா?

"வழக்காடி வெற்றி கொள்ள வேண்டும் என்று வழக்கு மன்றம் ஏறும் கட்சிக்காரன், வக்கீலின் வாக்குச் சாதுர்யத்தையும், நீதிபதியின் மதிமயக்கும் தீர்ப்பையும் கேட்டு மகிழ்கிறானா? அல்லது மதிகெட்டுக் கூண்டு ஏறியதற்கு வருந்துகிறானா என்பதை யார் கண்டார்கள்? இம்மாதிரி மனிதனைப் பித்தனாக்கும் நீதி நெறி முறைகளுக்குத்தான் சட்டம் என்று பெயர். இப்பொழுது புரிந்து கொள்!" என்றார் பரமானந்தர்.

பரமானந்தர் மூச்சு விடாமல் பொரிந்து தள்ளியதைக் கேட்டதும் சுதாகரின் நண்பனுக்கு, இந்தக் கிழவர் ஒரு வேளை கொஞ்சம் மறை கழன்றவராக இருப்பாரோ என்று தோன்றியது. அப்படி யிருந்தால், இந்தப் பைத்தியக்காரக் கிழவனின் அறிவுக்கு எட்டக்கூடிய வகையில் விஷயத்தை விளக்குவது மிக மிகச் சிரம சாத்தியமான காரியம் என்பதை உணர்ந்தான். எனவே, அவரை ஏளனம் செய்யும் நோக்கத்துடன்

அலட்சியமாக ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துவிட்டுச் சுதாகரின் நண்பன் பேசாமல் உட்கார்ந்து விட்டான். அதைக் கண்ட சுதாகர் சிரித்தான். ஏனெனில் அவன்தான் பரமானந்தரை நன்றாகப் புரிந்து கொண்டிருந்தானே! சுதாகர் சிரிப்பதைக் கண்ட அவனுடைய நண்பன், அவன் இந்தத் துஷ்டக் கிழவனின் சகவாச தோஷத்தில் சிக்கிக் கெட்டு விட்டான் என்றே எண்ணினான். சுதாகரைக் காத்து ரட்சிக்க வேண்டும் என்று பகவானை மனத்துள் பிரார்த்தனை செய்துகொண்டு, நண்பன் அங்கிருந்து விடை பெற்றுக் கொண்டான்.

அங்கிருந்து சென்றவனுக்குச் சும்மாயிருக்க முடியவில்லை. சுதாகரின் விஷயத்தை யாரிடமாவது சொல்லாவிட்டால் அவனுக்கு உயிரே வெடித்து விடும்போலத் தோன்றியது. தன் நண்பன் ஒருவனை அழைத்து வேறு யாரிடமும் சொல்லவில்லை என்ற வாக்குத்தத்தம் வாங்கிக் கொண்டபின், "சுதாகர் கெட்ட சகவாசத்தில் ஈடுபட்டான். காவாலிகளின் கூட்டத்தில் கலந்து கருத்திழந்து விட்டான். மனம் போன போக்குப்படியெல்லாம் சுற்றுகிறான். ஊர் சுற்றியாகத் திரிகிறான். அவன் போய்க் கொண்டிருக்கிற போக்கைக் கவனித்தால் கொலை களவுக்குக் கூட அஞ்ச மாட்டான் போலத் தோன்றுகிறது!" என்று சொல்லி வைத்தான்.

அதைக் கேள்விப் பட்ட அந்த நண்பன் சுதாகரின் நிலைக்கு இரங்கி மிகவும் மனம் வருந்தினான். பிறகு ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டு, "பகவானே, நீதான் சுதாகரைக் காத்தருள வேண்டும். இம்மாதிரிக் காரியங்களில் இறங்கி விட்டால், சிறைக் கம்பிகள் எண்ணுவதோடு மட்டுமா? தூக்குத் தண்டனையே கிடைத்தால்கூட ஆச்சரியப் படுவதற்கு இல்லையே!" என்றான். வாய் வருத்தம் தெரிவித்துக் கொள்வதைத் தவிர அவன் வேறு என்ன செய்வான், பாவம்!

நாட்களுக்கு மேல் நாட்கள் ஓடின. சுதாகரின் காயம் கொஞ்சம் கொஞ்சமாக ஆறத் தொடங்கியது. அவனுக்குப் பரமானந்தரின் வாழ்க்கை மிகவும் பிடித்திருந்தது; அதுவே மிகவும் உயர்வானதாகவும் தோன்றியது. நாமும் இப்படியே வாழ்க்கையைக் கழித்தால் என்ன என்றுகூட அவன் எண்ணலானான். இவ்வளவு நாட்களாக அந்த வாழ்க்கையில் ஊறி விட்ட அவனுக்கு அப்படித் தோன்றியதில் என்ன வியப்பு!

ஒரு நாள் பரமானந்தர் அவனைப் பார்த்து, "உன் உடம்புதான் இப்பொழுது நன்றாகக் குணமாகி விட்டாற் போலிருக்கிறதே! உனக்கு எங்கேயாவது ஒரு நல்ல உத்தியோகமாகத் தேடட்டுமா?" என்று கேட்டார்.

"எனக்கு உத்தியோகமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். நான் உங்களுடனேயே இருக்கிறேன். வாழ்நாள் முழுதும் நானும் உங்களைப் போலவே உழைத்து வாழ விரும்பு

## சாதீயம் ஒழியும்

ராஜாஜி அவர்கள் கொண்டு வந்துள்ள புதிய கல்வித் திட்டம் சாதியத்திற்கு ஆக்கமளிக்கும் என்ற அபத்தக் கூக்குரல் தமிழ் நாட்டில் கிளப்பப்பட்டுள்ளது.

நம் நாட்டில் பெரும் பாலான மக்கள் ஏழை விவசாயிகளும் தொழிலாளர்களுமாவர். இவர்கள் தங்கள் பாலர்களைப் பள்ளிக்கு அனுப்பச் சக்தி பெற்றிருந்தாலும் ஐந்து வகுப்பு முடிய ஒழுங்காகப் பள்ளிக்கு அனுப்ப முடியாத நிலையில் இருக்கின்றனர். காரணம் தங்கள் தொழிலுக்கு உதவியாகப் பையன்களை வீட்டு வேலையில் கவனம் செலுத்த வைக்க எண்ணம் கொள்வதே யாகும்.

இந்த எண்ணத்தால் விவசாயிகள் தொழிலாளர்கள் குடும்பத்தில் உள்ள குழந்தைகள் அரை குறைப் படிப்பில் தங்கள் கல்வி வாழ்வை முடித்துக் கொண்டு அவதியுறலாயின. உடல் உழைப்பை விரும்பாத கூட்டம் தங்கள் பிள்ளைகளைக் கல்வியில் சிறக்கச் செய்து உயர்ந்த பதவிகளில் உயர்த்தி உயரிய வாழ்வு வாழ்ந்து வந்தது; தங்கள் பதவியின் காரணமாகப் பாமர மக்களை, மாக்களாக மதித்து வஞ்சம் போன்ற ஏமாற்று வேலையால் மறைமுகமாகச் சுரண்டல் நாடகம் நடத்தி வந்தது படித்த கூட்டம். இந்த ஊதாரிச் செயலை உருக்குலைத்துச் சாதாரண தொழிலாளர், விவசாயிகள் வீட்டுக் குழந்தைகளும் உயரிய நிலையில் தங்கள் தாய் தந்தையருக்குப் பாதி வேளையில் உதவி செய்து மீதியுள்ள நேரத்தில் கல்வி கற்றுச் சீரிய பண்புபெறச் சாதகமாக வழிகாட்டுகிறது இப்புதிய திட்டம்.

இளம் பாலர்களது உள்ளத்திலே தொழில் அறிவை ஊட்டுவதின் மூலம் தொழிலில் உயர்வு, தாழ்வு பாராட்டக் கூடாது என்ற எண்ணம்தோன்றி, சாதியத்தைச் சாகடிக்கும் கருத்தை வளர்க்க இந்தத் திட்டம் பெரிதும் உதவுகிறது.

வண்ணார் மகன் வக்கீலாகவும், கன்னார் மகன் கலெக்டராகவும் வழிகாட்டும் இந்தத்திட்டத்தால் பாமர மக்களின் வாழ்வில் பொருளாதார உயர்வு ஏற்பட்டு அதன் மூலம் சாதியம் சாகடிக்கப்படும்.

ஒக்கூர்
20—7—53

ஏ. எம். நூர்துசாமி

கிறேன். தயவு செய்து உங்களுக்கு ஒத்தாசையாக இருக்க எனக்கு அனுமதி அளியுங்கள்!" என்றான் சுதாகர்.

"அன்றைக்கு என்னவோ, நான் லட்சாதிபதியாகப் போகிறேன் என்று சொன்னாயே! என்னோடு இருந்தால் உனக்கு எங்கே காசு கிடைக்கும்? என்னைக் கேட்டால், நீயும் என்னைப் போல் வாழ்க்கை நடத்து என்று நான் உனக்கு ஒரு நாளும் ஆலோசனை கூற மாட்டேன். தெரிந்ததா?" என்று சொன்னார் பரமானந்தர்.

"ஏன்?"

"ஏனா? முதலில் அதற்குக் கல்லைப் போல் உடல் வேண்டும். உன் உடம்பு அப்படியில்லை; பூப்போன்றிருக்கிறது. வஜ்ரத்தைக் காட்டிலும் கடினமான இருதயம் வேண்டும். உன் இருதயம் அப்படியில்லை. உன் இருதயம்

ரொம்பவும் இளகியது; உருகிவிடக் கூடியது. நீ என்னதான் நினைத்தும் உன்னால் ஒரு கொலை செய்ய முடியாது. எதிரியின் மார்பில் கத்தியைப் பாய்ச்ச முடியாது. கழுத்தை இரண்டு துண்டாக்கும் வேகத்தில் வாளை வீச முடியாது. உன்னிடம் ஒரே ஒரு குணம்தான் இருக்கிறது. அது என்ன குணம் என்று சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டாயே! கோபித்துக் கொள்வதாயிருந்தால் சொல்ல மாட்டேன். கோபித்துக் கொள்ளவில்லையென்றால் தான் சொல்லுவேன். அந்தக் குணம் என்ன தெரியுமா? உனக்கு நன்றாக அழத் தெரியும். ஆனால் அழத் தெரிந்திருந்தால் மட்டும் போதாது. ஏனெனில் அழுகையே அனைத்தும் ஆகிவிட முடியாது. பார்! இன்னும் நீ உலக அநுபவத்தைப் பெறவில்லை. இனித்தான் பெற வேண்டும். உலகாநுபவத்தைப் பெற்ற பின்னும் நீ எனது வாழ்க்கை போன்ற வாழ்க்கையைத் தேர்ந்தெடுக்கத் துணிந்தால் உன்னைத் தடுக்க யாருமே முன் வர மாட்டார்கள். உன் வாழ்க்கை நம்பிக்கையற்றதாகி விட்டால், என்னை நினைவு வைத்துக் கொள். அதற்கு முன் என்னைப் பற்றி ஸ்மரிக்கவே ஸ்மரிக்காதே!" என்று போதனை செய்தார் பரமானந்தர்.

பரமானந்தர் கூறுவது அவ்வளவும் சுதாகருக்கு உண்மையானதாகவே பட்டது. அவனிடத்தில் உற்சாகமும் உணர்ச்சியும் ஒன்றையொன்று மேவிக் கொண்டு பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தன. அவன் பணக்காரனாக ஆக விரும்பினான். அவன் மனோரமாவுக்கு இன்பம் சேர்ப்பிக்க விரும்பினான். 'முதலில் மனோரமாவின் காலடிகளில் பணத்தை அரித்துக்கொண்டு போய்க் குவிக்க வேண்டும். அப்புறந்தான் மற்ற எல்லாக் காரியங்களும்!" என்று எண்ணமிடத் தொடங்கி விட்டான்.

ஆனால் அவனுடைய மனோரமா எங்கேயிருந்தாள்?

மனோரமா தனக்காகத் தன் வரவை வழிமேல் விழி வைத்த வண்ணம் எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதாகவே சுதாகருக்குத் தோன்றியது. அவன் உள்ளத்தில் ஏதோ ஒன்று, அந்த எண்ணத்தை ஆமோதித்து உறுதிப் படுத்திக் கொண்டும் இருந்தது. சிறகச் சிறக அவன் பணத்தைச் சேர்த்து மனோரமாவின் காலடிகளில் கொண்டு போய்க் குவியலாகக் கொட்டுவான். சுதாகரின் திடமான நோக்கத்தைக் கண்டு மனோரமா முறுவலிப்பாள். கடைக்கண்ணால் நோக்கிக் குறுநகை புரிவாள். அவனுடைய உழைப்பு அவ்வளவும் பயன் பெற்றதாக ஆகிவிடும். அவன் ஜன்மமே ஸாபல்யம் அடைந்து விடும்.

அவன் கற்பனை மேலும் ஓடியது.

அவள் வெறும் குறுநகை மட்டுந்தான் புரிவாளா? அல்லது அவனுக்கே கிடைத்து விடுவாளா? அதாவது அவனுக்கே சொந்தமானவளாக ஆகிவிடுவாளா?

மனோரமாவை அடைந்தே தீருவது என்ற நம்பிக்கையை வழி நடை உணவாக அதாவது கட்டுச் சாதமாகக் கட்டிக் கொண்டு சுதாகர் உலக யாத்திரை செய்வது என்று தீர்மானித்தான். தீர்மானத்தைச் செயலாக்குவதற்குச் செயற்களத்தில் இறங்கி விடுவது என்றும் தீர்மானித்துக் கொண்டு அதற்கான ஏற்பாடு செய்யத் தொடங்கினான்.

ஆனால்......?

மனோரமா எங்கே இருக்கிறாள்?

இக் கேள்வி அவனைச் சுற்றிச் சுற்றிச் சதா வட்டமிட்டுக் கொண்டிருந்தது. (தொடரும்)

## கல்வித் தொண்டுக்கு உதவி நடனக் கச்சேரி

தமது மயில் நடனத்தினால் ஐரோப்பா, இங்கிலாந்து, அயர்லாந்து முதலிய தேச மக்களை ஆச்சரியத்தில் மூழ்க வைத்த ஸ்ரீ கோவிந்த கோபால் தாய் நாடு திரும்பி யிருக்கிறார்.

ஸ்ரீ கோபிநாத் அவர்களிடம் நாட்டியக் கலை பயின்ற இந்த இளைஞர் ஸ்ரீ ராமகோபாலுக்குச் சகாவாக மேற்கு நாடுகளில் சுற்றுப் பிரயாணத்தை வெற்றி கரமாகச் செய்து திரும்பி யிருக்கிறார்.

அவர் தாய் நாடு திரும்பிய பின் தமது முதல் நடனத்தை, 1842ம் ஆண்டில் துவக்கப்பட்டு இன்று வரை கல்வித் தொண்டு செய்து வரும் ஸெயின்ட் மேரீஸ் பள்ளி ஏழைக் குழந்தைகளின் கல்வி நிதிக்காக உதவ முன் வந்திருப்பது போற்றத் தக்கதாகும். நடனம் செப்டம்பர் 13ந் தேதி ஞாயிறு மாலை 6 மணிக்கு ஸெயின்ட் மேரீஸ் ஹாலில் (அரண்மனைக்காரத் தெரு) நடைபெறும்.

கலையன்பர்கள் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு உன்னதமான நடனங்களைக் கண்டு களிப்பதோடு, ஒரு உன்னதமான லட்சியத்திற்கும் உதவும்படி கோரப்படுகிறார்கள்.




புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் சுரணையுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.



நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம். அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.

# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனோஹரமான நறுமண முள்ளது.




தயாரிப்பாளர்கள்:
பவநகர் ஆயில் அண்டு கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிட்., பவநகர்.

த. பெ. நெ. 1611, பம்பாய்-1

விநியோகஸ்தர்கள்:

ஜி. கே. ஸிண்டிகேட்
119, அரண்மனைக்காரத் தெரு, சென்னை

எஸ். தர்மராஜன்
40, நாயக்கர் புதுத் தெரு, மதுரை

நாயகம் மெடிகல் ஸ்டோர்ஸ்
தூத்துக்குடி



## பைல் பீன்ஸ்

உங்களது ஆரோக்கியத்தையும் அழகான தோற்றத்தையும் திரும்பவும் தருகிறது.

டாக்டர்கள் அங்கீகரித்துள்ள டானிக் கலந்த மருந்தாகிய அசல் பைல் பீன்ஸைக் கொண்டு உங்கள் சரீரத்தை செம்மைப்படுத்திக் கொள்ளுங்கள். பைல் பீன்ஸ் உங்களுக்கு ஒரு அழகையும், வாலிபத்தின் சக்தியையும் தருகிறது. பைல் பீன்ஸ் மலச்சிக்கல், ஜீரணக் கோளாறு, அஜீரணம், உப்புசம் ஆகிய பல கோளாறுகளை குணப்படுத்துகிறது.

இன்றே பைல் பீன்ஸை உட்கொள்ளத் தொடங்குங்கள். டாக்டர்கள் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை உட்கொண்டு வாழ்க்கை இன்பத்தைப் பரிபூரணமாகப் பெறுங்கள்.




# பைல் பீன்ஸ்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மதராஸிற்கு சோல் ஏஜண்டுகள்: நாநா & கோ., பார்க்டவுன்

# கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

கிளை ஆபீஸ் : 9, செம்புதாஸ் தெரு, மதராஸ்-1

போன்: 55556 | தபால் பெட்டி நெ. 1395 | தந்தி: KALLIFUNDS

பிற்காலத்திற்குச் சீராக சேமியுங்கள்

30 மாதங்கள் 30 சந்தாதாரர்கள்

3-வது ஞாயிறு ஏலங்கள்

சந்தா செலுத்த கடைசி தேதி 16-9-53
முதல் ஏலத் தேதி ... 20-9-53
உடனே விண்ணப்பியுங்கள்

1. நீங்கள் எங்கிருந்தும் சந்தாதாரர் ஆகலாம்.
2. தபால் அல்லது வேறு யார் மூலமோ ஏலம் கேட்கலாம்.
3. சேமிப்பாகக் கருதுகிறவர்களுக்கு குறைந்தபட்ச வட்டி உத்திரவாதம் செய்யப்படுகிறது.

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| C | 100 | 3000 |
| D | 50 | 1500 |
| E | 25 | 750 |
| F | 20 | 600 |
| G | 15 | 450 |
| H | 10 | 300 |

எமது விதிகளும் நிபந்தனைகளும் கோரிக்கையின் பேரில் தெளிவான விலாசங்களுக்கு அனுப்பப்படும்.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்.



# ஆஸ்த்மா, பிரோங்கைட்டிஸ் இருமல் மற்றும் மூச்சுத் திணறல் 3 நிமிஷங்களில் ஒழியும்

உங்களுக்கு ஆஸ்த்மா அல்லது பிரோங்கைட்டிஸ் மிகக் கடுமையாகி, மூச்சுத் திணறி, தூக்கமின்றி தவிக்கிறீர்களா? உங்கள் வியாதி எவ்வளவு நாள்பட்டதாயினும் சரி, மெண்டாகோ (Mendaco) புதிய நம்பிக்கையளிக்கும். மயக்க மருந்து, புகை, இஞ்செக்ஷன், ஆடமைஸர் ஒன்றும் தேவையில்லை. ருசியற்ற இரண்டு மெண்டாகோ வில்லைகளை போஜனத்துடன் உட்கொள்ளுங்கள் போதும். மெண்டாகோ (Mendaco) ரத்தத்துடன் பரவி 3 நிமிஷத்தில் திணரலுக்குக்காரணமான கபத்தைக் கரைத்து அகற்றி, சுவாசத்தை லகுவாக்கி, முதலிரவிலேயே சுக நித்திரை வரச் செய்யும். சீக்கிரத்தில் அநேக வருட இளமையும், வலுவும் பெறுவீர்கள்!

இரண்டு வருடங்களாக ஆஸ்த்மா இல்லை

ஸ்ரீ ஜெ. ஆர். எடையில் 40 பவுண்டு குறைந்து, இருமலும் திணரலும் பிரதி இரவிலும் தூக்கத்தைக் கலைத்து, முடிவில் சாவையே எதிர்பார்த்திருந்தார். மெண்டாகோ (Mendaco) முதல் இரவிலேயே ஆஸ்த்மா இழுப்பை நிறுத்தியது — பின்னர் நோய் திரும்பவேயில்லை.

பணம் வாபஸ் உத்திரவாதம்

மெண்டாகோ முதல் டோஸே ஆஸ்த்மாவின் விளைவுகளை ஒழிக்க இயற்கையுடன் உதவுகிறது. பயன் இல்லையேல், காலிப் பெட்டியைத் திருப்பி முழு விலையையும் திரும்பப் பெறலாம். இந்த உத்தரவாதம் உங்களுக்கான பாதுகாப்பு.

**Mendaco**

மெண்டாகோ

★ ஆஸ்த்மா ★ பிரோங்கைட்டிஸ் ★ குளிர் ஜுரம் இவைகளை ஒழிக்கிறது




ஜவுளிக் கடையின் வாசலில் வைக்கப்பட்டிருந்த சிலையைக் கண்டு பிரமித்து விட்டேன். வெறும் முகத்தைப் பிடித்து வைத்து வியாபார விருத்திக்காகச் சேலையைக் கட்டி அலங்கரிக்கப்பட்ட விளம்பரச் சிலையாகத் தோற்றமளிக்கவில்லை. பாதரசக் குழல்களின் கனிந்த நிலா வெளிச்சத்தில் அற்புதமாகக் காட்சி அளித்த அம் முழு உருவச் சிலையின் அமைப்பில் விளம்பரத்திற்கும் அப்பால் ஒரு விகசிதம் காணப்பட்டது என் கண்களுக்கு.

"என்ன ஸார், கல்லாய்ச் சமைந்து நின்று விட்டீர்கள்!" என்ற குரல் வந்த திசை நோக்கித் திரும்பினேன். கொள்ளை லாபக்காரர்களை நீதி தேவன் மடக்கி வைத்த கைதிக் கூண்டு போல அமைந்த 'கவுண்ட்டரி'லிருந்து கடை முதலாளி தான் குரல் கொடுத்தார்.

"சிலை ரொம்ப நன்றாக இருக்கிறது; அதற்கு உடுத்தி இருக்கும் சேலை மாதிரி உள்ளே இருக்கிறதா, பார்க்கலாம்!"

"மன்னிக்கணும்; அது மாதிரி புடவை வேறு 'ஸ்டாக்' இல்லை. சிலைக்கு என்றே ஸ்பெஷலாக நெசவு போடச் சொல்லி வரவழைக்கப்பட்ட 'ஆர்டர்'. அதைக் கொடுப்பதற்கு இல்லை."

"நீங்கள் சொல்வது வேடிக்கையாக இருக்கிறதே! புடவை விற்பனைக்காகச் சிலையா! அல்லது சிலைக்காகச் சேலையா!" என்று வியப்பு மேலிடக் கேட்டேன்.

கரூர்க் கடையின் முதலாளி கீழ் உதடுகளை நிதானமாக அசைத்து முறுவல் ஒன்றை நெளிய விட்டார். "உங்களைப் பொறுத்தவரையில் அது வெறும் விளம்பரப் பொம்மைதான். எனக்கோ கடந்த காலச் சோக சம்பவங்களை நினைவு படுத்தும் காதலின் நிரந்தரச் சின்னம். வியாபாரம் பெருகி வரும் என் கடைக்கே நிறைவு அளிக்கும் ஆனந்த சிலை, அது. அதற்குக் கிடைக்கும் பாக்கியம் உலகத்தில் எந்தப் பணக்கார ஸ்திரீக்கும் கிட்டாது. புத்தம் புது மோஸ்தரில் வரும், உயர்ரகப் புடவைகள் எல்லாம் அதன் மேனியை அலங்கரிக்காமல் அலமாரிக்குள் போவதில்லை. இவ்வளவு பெருமையும் மதிப்பும் ஒரு சாதாரணச் சிலைக்கு எப்படி ஏற்படுகிறது என்று ஆச்சரியப்படுகிறீர்களா!"—முதலாளி சற்று நிறுத்தி உதடுகளை ஈரமாக்கிக் கொண்டார். நான் கதை கேட்பதற்குத் தயாரானேன்.

மேலே தொங்கிய மின்சார விசிறி, கூண்டின் பித்தளைக் குமிழில் சிறியதாகச் சுழன்று கொண்டிருந்தது.

* * *

முப்பது வருடங்களுக்கு முன்பு இந்தக் கடை 'ஸில்க் எம்போரியமாக'த் திகழவில்லை. ராவன்னா தர்மராஜப் பிள்ளை ஜவுளிக் கடை என்ற நீண்ட விலாசத்துடன் கூடிய சின்னஞ்சிறு கடையாக இருந்து வந்தது. வரிசை வரிசையாகக் காணப்படும் கண்ணாடி பீரோக்களும், குழல் விளக்குகளும், மின்சார விசிறிகளும் இன்றையக் காட்சிகள். அந்த நாளில் 'கவுண்ட்டரு'க்குப் பதிலாக ஒரு சின்ன மேடையும், சந்தனப் பொட்டிடப்பட்ட கல்லாப் பெட்டியும், 'சிவாயநம' என்று பஞ்சாட்சரங்களை ஓதிக் கொண்டு திண்டு மெத்தையில் சாய்ந்து கொண்டிருக்கும் தர்மராஜப் பிள்ளையையும் நாம் பார்த்திருக்கலாம்.

அப்போது நான் வாலிபன்; இந்தப் பெட்டியடியில் உட்கார்ந்திருக்கவில்லை. அங்கு வடக்கு மூலையில் விரித்திருந்த கோரைப் பாயில் அமர்ந்து கொண்டு மாதாந்திர சம்பளத்திற்கு ஊழியம் செய்த சாதாரணக் கடை ஆளாக இருந்தேன்.

''என்னம்மா, 'பிரின்டட் ஸாரி'யா? உள்ளே போங்க! ஏய், ஆறுமுகம்! இவங்களுக்கு வேண்டியதை எடுத்துக் காண்பி.''

ஒருநாள் பிற்பகல் சுமார் மூன்று மணி இருக்கும். வாயிலில் தொங்கிக் கொண்டிருந்த காவிப் படுதாவையும் தாண்டி வெய்யிலின் வெப்பம் கடைக்குள் தாக்கிக் கொண்டிருந்தது. உஷ்ணத்தைத் தணிப்பதற்கு வாசலிலும் படுதாவிலும் தண்ணீரைத் தெளித்து விட்டு உள்ளே சென்று அன்றையத் தினசரிப் பத்திரிகையில் திருமண விளம்பரங்களைப் புரட்டிக் கொண்டிருந்தேன். புழுக்கத்தால் கிளாஸ்கோ மல் சட்டை கனைத்து கிடக்கப் பனை விசிறியை மெதுவாகச் சுழற்றிக் கொண்டே முதலாளிப் பிள்ளை அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தார். டெய்லர் பாலு ஏதோ பாவாடை நாடாவை ஒட்டிக் கொண்டிருந்தான்.

'சள சள' வென்ற பெண்களின் பேச்சரவம் கடைக்கு வெளியே கேட்டது. ''இங்கிட்டு வாங்க; சிலா அடிக்கிறது கணக்க இல்ல மெதுவாக வாரீங்க!'' என்று அழைத்த 'பொம்பிளை'யைத் தொடர்ந்து ஒரு கிராமத்துப் படை உள்ளே நுழைந்தது. தூங்கி வழிந்த கடை பிரித்துப் போடப்பட்ட புடவைபோல் விழித்துக் கொண்டது.

அரை மணி நேரத்திற்குப் பிறகு அலமாரித் துணிகள் கீழே வந்து குவிந்து கிடக்க ஏதோ சில சீட்டிக் கம்பித் துணிகளும், ஒரு ஜோடி கரை வேஷ்டியும், சாயத் துண்டும் விலை போயின.

வந்திருந்த கூட்டத்திடையே ஒய்யாரப் பார்வையுடன் காட்சி அளித்த பெண் என் மனத்தைப் பெரிதும் கவர்ந்து விட்டாள். இயந்திரத் தறியில் செய்யப்பட்ட எடுப்பான அங்கங்கள்; வெல்வெட் துணி போன்ற மேனி; கூரைப் புடவையின் அகன்ற பார்டர் போல் நெற்றி; கஜக் கோல்களாலும் முழம் போட முடியாத ஆழமான கண்கள்; கலகல வென்ற மொழி; வெண் துகிலின் களிதுலங்கும் நகை; சாயம் போகாத கறுப்புத் துணியில் 'பைப்பிங்' வைத்துத் தைத்தது போல, எடுத்துச் செருகப்பட்ட கொண்டையைச் சுற்றி மல்லிகைச் சரம்; 'பீஸ்' துணியிலிருந்து துண்டிக்கப்பட்ட பாகம் போல என்னுடைய மனம் விண்டு விட்டது.

''இந்தாங்க, மேல் தட்டிலே இருக்கிற அந்தச் சேலையை எடுங்க பார்க்கலாம்.''—பட்டுப் புடவையின் சலசலப்பு போல அவள் குரல் ஒலித்தது.

உடல், பார்டர், தலைப்பு என்று அங்கம் அங்கமாக ஆராய்ந்த அவளுக்கு நான் காண்பித்த புடவை மிகவும் பிடித்து விட்டது. சீட்டைப் பிரித்து விலையைக் கூறியதும் 'அடி ஆத்தா! இம்மாம் விலையா!' என்று ஸ்தம்பித்து விட்டாள்.

''இந்தா குட்டி, உனக்கு வேலையில்லை! அந்த விலையிலே சேலை வாங்க இங்க பணம் கொட்டிக் கிடக்குதா! வேணும்னு ரெண்டு சீட்டித் துணியைக் கிழிச்சுக்கிட்டு நவுளுவியா......''

கிழவரின் சொற்களால் குடைத் துணிபோல் அவள் முகம் இருண்டு விட்டது. ''பெரியவரே, குழந்தை ஆசைப்படுது. வாங்கிக் கொடுங்க. புடவை நல்ல திறுசு. கெட்டிச் சாயம், பணத்துக்கு என்ன, முதலாளி முன்னப் பின்ன வாங்கிகிடுவாங்க......'' என்று அவளுக்காய்ப் பரிந்து பேசினேன். ''உங்களுக்கென்ன இலிப்பாத்தான் பேசுவீங்க'' என்று சொல்லிக் கொண்டே அவளையும் இழுத்துக் கொண்டு அப்பால் நகர்ந்தார்.

வாசலில் நின்ற வில் வண்டியில் கூட்டம் ஏறிக் கொண்டது. அலமாரிக்குள் போன ஜவுளிபோல, அவளும் அதற்குள் மறைந்து விட்டாள். மீண்டும் கடையில் பழைய அமைதி. டெய்லர் சட்டைத் துணி ஒன்றைப் பாகம் பாகமாக வெட்டிக் கொண்டிருந்தான். அந்தப் பெண் தேர்ந்தெடுத்த புடவையை ஓரமாக எடுத்துவைத்தேன், விற்பனை ஆகிவிடாமல் இருக்க. ஆடை கிழிந்தாலும் போகாத உத்தரவாதமான கெட்டிச் சாயம் போல், அவளது வண்ண நினைவு மட்டும் எனது எண்ணத் துகிலை விட்டு அகலவேயில்லை!

''......முத்துசாமி, அந்த 'ஷோ பாக்ஸி'லே இருக்கிற துணியை எடுத்து விட்டு நேற்று வந்த கைத்தறி ஜவுளியை அடுக்கி வை...!''

இரண்டு வாரங்கள் கழித்து சில்லுவைக்காக கல்லூர் பொன்னுசாமி பிள்ளையைப் பார்க்கச் சென்றிருந்தேன். வசூல் விவரம் முடிந்தபின்னர் பேசிக் கொண்டிருக்கையில் வீட்டில் நுழைந்த பெரியவரை 'இவருதான் இந்த ஊரு கணக்கப் பிள்ளை' என்று அறிமுகப்படுத்தினர், பொன்னுசாமி. ''தம்பி யாரு, ராவன்னா காவன்னா கடையிலே கண்டாப்பிலே இருக்குதே!'' என்று அவர் கூறியதும் எனக்கு விளங்கி விட்டது. முன்பு கடைக்குப் பெண்ணுடன் விஜயம் செய்த முதியவர்தான், அவர்.

பிறகு அவர் என்னை விடவே இல்லை. அவரது இல்லத்திற்கு இழுத்துச் சென்று ஆசார உபசாரம் செய்தார். பாஞ்சாலி புடவையைப்போல் அவர் பேச்சு வளர்ந்து கொண்டே போயிற்று. கள்ள மார்க்கட்டில் துணி கிடைப்பது மாதிரி ஜன்னலுக்கு அப்பாலிருந்து அந்தப் பெண்ணின் நயன வீச்சுக்கள் ஓரிரு முறை எனக்குக் கிட்டின. அதற்குப் பின்னர் கல்லூர் கிராமத்துப் பண வசூலுக்கு அடிக்கடி நான் போவதைக் கண்டு என் முதலாளிக்கே ஆச்சரியமாகப் போய்விட்டது!

சீக்கிரத்தில் அந்தச் சமயின் விவாகப் பேச்சு ஆரம்பமாயிற்று. ''எனக்கு ஆட்சேபணை எதுவுமில்லை. முறைப் பையன் ஒருத்தன் ...... இருக்கான்''



என்று கணக்கப்பிள்ளை இழுத்தார். எத்தனையோ கொள்ளேகாலம், ஆரணிப் பட்டுப் புடவைகளை இந்தக் கை முழம் போட்டிருக்கிறது. என்னுடைய வாய்ச் சாலகத்தால் எத்தனையோ வாடிக்கைக் காரர்களைக் கடைக்கு ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறேன். இந்தக் கிழவரைப் பேச்சில் பிடித்துப் போடவா எனக்குத் தெரியாது! இறுதியில் எனக்கும் அஞ்சலைக்கும் விவாகம் நிச்சயமாகியது. பரிசம் போடுகிற அன்று, அவள் கடையில் முன்பு எடுத்து வைத்த துணிப் புடவையைக் கொண்டு வந்து துணிச்சலுடன் கொடுத்தேன்.

''மாப்பிள்ளை அஞ்சலையை நல்லா தெரிஞ்சு வச்சுக்கிட்டிருக்காரு. புதுச் சேலையை உடுத்திக்கிடறதுன்னு அஞ்சலைக்கு ஒரே மோகம். சவுளிக் கடையிலே நீங்க இருக்கிறதுக்குத் தினம் ஒரு புடவை கட்டிக் கிடலாம்னுதான் உங்களைக் கலியாணம் கட்டிக்கிறா!'' என்று கணக்கப்பிள்ளை கேலியும் சிரிப்புமாகக் கூறினார்.

கலியாணத்திற்கு ஒரு வாரம் இருந்தது. எல்லாமே நாம் நினைப்பது போல் நடந்துவிடுகிறதா! புடவை விஷயத்தில் நிறம், கரை, விலை யாவும் மனத்திற்குப் பிடித்ததாக அமைந்து விடுவதில்லை. அன்று கணக்கப்பிள்ளை வீட்டிற்குச் சென்றிருந்த போது அஞ்சலைக்கு உடம்பு சரியில்லை. இரவுக்குள் நாலுதடவை வாந்தி எடுத்தாள். நாழிகையில் ஊசலாடிய அவள் உயிரை மீட்க முடியாமல் கிராமத்து வைத்தியர் கையை விரித்துவிட்டார்.

அஞ்சலை பிழைத்து எழுந்தால் உள்ளூர் அம்மனுக்குப் பாவாடை சாத்துவதாக வேண்டிக் கொண்டார்கள். ஆனால் அதற்குச் சந்தர்ப்பம் ஏற்படாமல் அவள் கண்ணை மூடி விட்டாள். எவ்வளவோ ஆவலுடன் நான் வாங்கித் தந்த சேலை அவளது இறுதிப் பயணத்தின்போது இறந்த சடலத்தின்மீது போர்த்துவதற்குத் தான் பயன் பட்டது! பல்லாயிரம் பாச்சைகள் ஒரே சமயத்தில் அரித்த நைந்த வஸ்திரம்போல் என் உள்ளம் சல்லடையாகி விட்டது.

''......சோமு, இங்க ஒரு கஜம் கறுப்பு மல் கிழிச்சுக் கொடு. வேறே என்ன வேணும், ஸார்?...முத்துசாமி, இந்த ஆச்சிக்கு நார்மடி வேணுமாம், இருக்கிற தினுசை எடுத்துப் போடு.........''

அதற்குப் பிறகு அந்த ஊரில் தங்க மனமில்லாமல் சிலோனுக்குக் கப்பல் ஏறினேன். பல வருட காலம் சலியாத உழைப்பிற்குப் பிறகு கை நிறையப் பணத்தையும் சொந்தக் கடையையும் கண்டியில் காண முடிந்தது. ஆயினும் கலியாணம் செய்து கொள்ளவில்லை. அஞ்சலையின் சாவு காறை போல உள்ளத்தில் தங்கி விட்டு இருக்கும்போது வேறு மணம் செய்து கொள்ள மனம் ஏது!

கண்டியில் நடைபெற்ற பொருட்காட்சிச் சாலையில் இந்தச் சிலையைக் கண்டேன். அஞ்சலையே உயிர்பெற்று எழுந்தது போல் தத்ரூபமாக இருக்கவே நான் மயங்கி, விலையைப் பாராட்டாமல் வாங்கி விட்டேன். பிறகு இலங்கை அரசியலில் ஏற்பட்ட மாறுதல்கள் இந்தியர்களுக்குச் சாதகமாக இல்லை. கடையை விற்றுவிட்டு இந்தியா திரும்பினேன். ராவன்னு காலமாகிக் கடையும் கொடிக்கும் ஸ்திதியில் இருந்தது. தைரியமாக விலைக்கு வாங்கி வியாபாரத்தை ஆரம்பித்தேன். நல்ல முறையில் வியாபாரம் நடைபெறுகிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

எல்லாம் அதோ சிலை ரூபத்தில் இருந்து கண்காணிக்கும் அஞ்சலையின் அருள்தான். நான் வாங்கிக் கொடுத்த சேலையைக் கட்டிக் கொள்ளும் பாக்யம் உயிருடன் உலவிய அப்பெண்ணுக்கு இல்லை. ஆனால் நிறைவேறாத அவளது ஆசைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் அவளது பிரதிநிதியாக இந்தச் சிலைக்காவது வண்ணப் புதுச் சேலைகளைக் கட்டி அழகு பார்ப்பதில் எனக்கு ஒரு ஆத்ம திருப்தி ஏற்படுகிறது.

* * *

முதலாளி கதையை முடித்துவிட்டு, 'பில்' ஒன்று தயாரிப்பதில் முனைந்தார். இப்போது சிலையை நோக்கினேன். அல்பாயுசில் மறைந்த அஞ்சலையின் அந்தரங்க சோகத்தை வெளியிடும் அந்த சௌந்தர்யப் பதுமையின் மீன்விழிகள் என் உள்ளத்தை நெகிழ வைத்தன.

சிலைக்கு அணிந்திருக்கும் உடை புதிய 'பாஷனாக' இருக்கும் என்பதில் ஐயமில்லை. என்னுடைய ஆவலை உணர்ந்த முதலாளி கடையில் ஒப்புக் கொண்டார்.

மனைவிக்கு நவநாகரிகமான புடவை ஒன்று வாங்கிச் செல்லும் திருப்தியுடன் அன்று வீடு திரும்பினேன். இந்தத் திடீர்ப் பரிசைக் கண்டு திகைத்துப் போவாள் என்று எதிர்பார்த்ததற்கு மாறாக ஆவலுடன் பார்சலை வாங்கியவள் புடவையைப்பிரித்தவுடன் அசந்து நின்று விட்டாள். தேடி அலைந்து வாங்கிய உள்ளத்திற்குப் பிடித்த துணியைத் தையற்காரன் உடலைப் பிடிக்கப் பிடிக்கத் தைத்து வீணடித்து விட்டால் எவ்வளவு கோபம் ஏற்படும்! அத்தகைய ஆத்திரத்துடன் என்னை நோக்கி அவள் விழித்தாள்.



"என்னங்க, உங்களுக்குப் பைத்தியமா? 'அரிக்கேன்' விளக்கைப் பிடித்துக் கொண்டு......"

"போடி, போ! லைட் ஹவுஸில் எரியும் விளக்கு அணைந்து விட்டது. அதனால் தான் அரிக்கேன் விளக்கை வைத்துக் கொண்டு சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறேன்!"

---

"இந்த ஹைதர் காலத்துப் புடவையை உங்க தலையிலே கட்டி விடறதுக்கு எந்தக் கடைக்காரன் காத்திண்டிருக்கான்! இந்த மாதிரி பழைய மோஸ்தர் புடவைகளுக்கு ஏஜன்ஸி எடுத்திருக்கேளா! இந்தப் புராண காலத்துப் புடவையை உங்க அம்மாகூடக் கட்டிக்க மாட்டா! அவன் கிட்டேயே கொண்டு தொலைச்சிட்டு வாங்கோ!"

கோடித் துணியைக் குத்திக் கிழிக்கும் ஆணி போல் அவளது கூர்மையான சொற்கள் என் நெஞ்சைத் துளைத்தன. பழைய ரகப் புடவைகள் விலை போவதற்காகப் புதுமையைச் சுற்றிக் 'கயிறு திரித்த' அந்த முதலாளியைச் சும்மா விடப் போவதில்லை!

பொழுது விடிந்ததும் முதல் வேலையாகப் புடவையை எடுத்துக் கொண்டு 'எம்போரிய'த்திற்குச் சென்றேன். முதலாளியின் கவுண்ட்டர் காலியாகக் கிடந்தது. 'என்ன ஸார், என்ன வேணும்!' என்று விசாரித்த மீசைக்கார ஆசாமியை நெருங்கினேன். ஆடையில் பற்றிக் கொண்ட நெருப்பு ஆளையே தகித்து விடுவதுபோல், முதலாளியிடம் ஆரம்பித்த கோபம் கடையாளிடமும் பாய்ந்தது.

'என்னய்யா சேலை தந்தீர்கள்! சிலையாவது, அஞ்சலையாவது! மண்ணாங்கட்டி! எல்லாம் வெறும் கட்டுக் கதை!"

முறுக்கேறிய நூல்போல் இருகி விடப்பட்ட அவரது மீசை படபடத்தது. "சார், சேலையைப் பற்றி ஏதாவது குறை சொல்லுங்க; வியாபாரம் கஷ்டம் ஆனால் போவுது. சிலையை மட்டும் சிறிதும் பழிக்காதீங்க. மனசு கஷ்டப்படும். அது நம்முடைய சிருஷ்டி!" என்றான், வலது கைமேல் படிந்து கிடந்த அங்கவஸ்திரத்தை எடுத்துச் சரி செய்து கொண்டே.

கதையைச் சிருஷ்டித்த கற்பனை மிகுந்த கடை முதலாளி அருகிலேயே சிலையைச் சிருஷ்டித்த கலைஞனும் இருக்கிறான!

"அந்தச் சிலைக்குரியவள் எனது மனைவி."

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"இந்தக் கை வெறும் துணியை மூழ்கப் போடப் பிறந்ததில்லீங்க. கல்லேயும் மண்ணேயும் வச்சுக்கிட்டு அபூர்வமான சாயைகள் பண்ணக் கூடிய திறமை உண்டுங்க.

"இதெல்லாம் அந்த மாமனுக்குப் பிடிக்காது. அவரு யாரு தெரியுங்களா! கல்லூர் கணக்கப் பிள்ளைங்க. 'டேய், இந்த மாதிரி சோம்பேறியாகத் திரிஞ்சுக்கிட்டிருந்தா எம் பொண்ணு அஞ்சலையைக் கட்டிக்கிட முடியாதுடா. பொழைக்கிறதுக்கு உண்டான வழியைப் பாருடா'ன்னு நிமிசத்துக்கு நிமிசம் சொல்லிக்கிட்டே இருப்பாரு. நான் காதிலே போட்டுக்கிறதில்லே.

"அஞ்சலைக்கு மட்டும் மனசு கிடந்து அடிச்சுக்கும். 'என்ன, மாமா! வேற ஏதாவது தொழில் செய்து நாலு காசு சம்பாரிச்சுக்கிட்டு வரக் கூடாதா!' — அவ அப்படி கேட்கும்போது கண்ணுலே தண்ணி வந்திடும். அவ மனசைப் புண்படுத்தக் கூடாதுன்னு மாமனுக்கு உதவியா பயிர்த் தொழில் பார்த்துக்கிட்டு இருந்தேனுங்க. மாமன் ஒரு நாளைக்கு ரகளை பண்ணிட்டாரு. நானும் அப்போ பதிலுக்கு 'ரப்'பாப் பேசிட்டு வீட்டை விட்டுக் கிளம்பிட்டேனுங்க. ஆனா மட்டும் அஞ்சலை தடுத்து நிறுத்திச்சு. 'இந்தா, பாரு! வீணு அலையாதே. கண்டிக்குப் போயோ, காசிக்குப் போயோ கை நிறையச் சம்பாரிச்சிக்கிட்டு வந்து உனக்கு மஞ்சக் கயிறு முடிச்சுப் போடாட்டி ஆம்புளையில்லை. ஆனால் நீ மட்டும்...' என்றேன். என்னுடைய வீராப்பான பேச்சைக் கேட்டுத் திகைத்து 'எங்கண்ணுலே! நீ வருகிற மட்டும் நான் கன்னியா காத்திருப்பேன், ராசா'ன்னு கையிலே அடிச்சுச் சத்தியம் பண்ணிக் கொடுத்தாள்.

"மறுநாள் சிலோனுக்குக் கப்பலேறினவன் தான். எங்கிட்டெல்லாமோ வேலை பார்த்தேன்; எவ்வளவோ கஷ்டப்பட்டேன். என்ன செய்து என்னங்க, நான் நினைச்சபடிக்குப் பணம் சேர்க்க முடியவில்லை. அஞ்சலை நெனவு மட்டும் நெஞ்சை உறுத்திக்கிட்டே இருக்கிச்சு. மனசிலே அரிப்பு இருந்தாலும், கை சும்மா இருக்குங்களா! ஒரு மாசம் மூணாச்சேனுங்க; இந்தச் சிலை உருவாச்சு. அதே சமயத்திலே கண்டியிலே 'எக்ஸிபிஷன்' னுன். ஆத்ம திருப்திக்குன்னு செய்ததுக்கிட்டாலும் நாலு பேரு பார்த்துப் புகழட்டுமேங்கிற நெனப்பு இல்லாமப் போகுமா! அதோட நல்ல விலைக்குப் போச்சுன்னா ஊருக்குத் திரும்பிடலாங்கிற யோசனை. சிலைக்கு என்ன; கையிலே திறமை இருக்கிற வரைக்கும் இந்தமாதிரி எத்தனையோ பண்ணிக்கிடலாம். அஞ்சலையையே கண்ணுல காணப் போறப்போ, சிலை என்னத்துக்கு!—அந்த நோக்கத்தோட சிலையைக் காட்சிச் சாலையிலே கொண்டு போய் வச்சேன்.

சிலையைச் செய்து முடிச்சி, அதன் கண்ணைத் தொறக்கும்போது குறைபாடு வந்திருச்சின்னு மனசு என்ன வேதனைப் படும்! அது மாதிரி




எங்கள் கைகண்ட மருந்தை
ஒரு தடவை உபயோகித்து
திருப்தி யடையுங்கள் !



KOLDEX

## ஜலதோஷம், தலைவலி

**மற்றும் எல்லா வலிகளுக்கும்**

எங்கும் கிடைக்கும்

*

ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

**மெஸர்ஸ் தாதா & கம்பெனி**

86, நயினியப்ப நாய்க்கன் தெரு
சென்னை - 3

# டால்மியா ரிப்ராக்டரிகள்

சகலவிதமான ரோட்டரி உலைகளங்களுக்கும், சாதாரண உலைகளங்களுக்கும் தகுந்தவாறு மித உஷ்ணம், அதிக உஷ்ணம், மிக அதிகமான உஷ்ண நிலைகளில் தயாரிக்கப்பட்டது. உங்களது தேவைகளுக்கும் ஸ்பெஸிபிகேஷன்களுக்கும் ஏற்றவாறு சப்ளை செய்யப்படும். துரிதமான டெலிவரி செய்யப்படும்.

○●○

ரீயின்போர்ஸ்டு

# சிமெண்ட் காங்க்ரீட் குழாய்கள்

" டால்மியா " தயாரிப்பு மிக உயர்தரமானது என்பதற்கு உத்தரவாதம். எல்லாவித அளவுகளிலும் கிடைக்கும். துரிதமாக டெலிவரி செய்யப்படும்.

○●○

## டால்மியா சிமெண்ட் (பாரத்) லிமிடெட்

**டால்மியாபுரம் - திருச்சி**

இந்தியன் ஸ்டோர்ஸ் டிபார்ட்மெண்ட், கவர்ன்மெண்ட், ரயில்வேக்கள், முனிசிபாலிடிகள் முதலிய ஸ்தாபனங்களுக்கு சப்ளை செய்வோரின் அங்கீகரிக்கப்பட்ட ஜாபிதாவிலுள்ளது.

AIAP

உயிரோடக் கையிலே புடிச்சிக்கிட்டுக் கடல் தாண்டி ஆவலோட வந்தவனுக்கு, அஞ்சலையின் சாவை மாமன் சொன்னபோது இருதயம் நின்னு போயிட்ட மாதிரி இருந்தது. அவ சாதாரணமா செத்துப் போயிருக்க மாட்டாங்க. மாமன் நிச்சயம் பண்ணின வரன் புடிக்காமத்தான் மனசு உடைஞ்சு செத்துப் போயிருப்பா.

"அவளும் இல்லே: இருந்த சிலையையும் வித்துத் தொலைச்சாச்சு. மன உளைச்சல் தாங்க முடியாமல் தான், ஏக்கத்தை நிவர்த்திக்கப் புதுசா சிலை செய்யலாமின்னு தீர்மானிச்சேன். சேர்ந்த மங்கலத்துக்கு பஸ் ஏறினேனுங்க, ஸ்பெசலா மண் எடுத்தாரணும்னு.

"என் எண்ணத்திலே மண்ணைப் போட்டிடுச்சி, விதி. அந்த பஸ் விபத்தைப் பத்திப் பேப்பரிலே நிறைய படிச்சிருப்பீங்களே. அதிலே நான் 'க்ளோஸா' இருந்தாலும் பரவா யில்லே. துரதிர்ஷ்டம் பாருங்க, என்னோட வலது கை ஊனமாகப் போயிடுச்சி. புதுச்சிலை பண்ண முடியாமல் கை நொண்டி! எனக்கு மனசும் உடைஞ்சு போச்சு.

"என்னத்துக்கோ ஒரு நாள் கடைத் தெருவுக்குப் போயிருந்தப்போ, எம்போரியத்தின் வாசல்லே அஞ்சலை போட சிலையைப் பார்த்தவுடனே மலைச்சிட்டேன். கண்டிக் காட்சியிலே வாங்கிட்டுப் போனவரு கடை முதலாளிதான்னு தெரிஞ்சு போச்சு. மாமன் சிபாரிசிலே இந்தக் கடையிலேயே ஒரு வேலை சம்பாரிச்சுக்கிட்டேன்.

"அந்தச் சிலையிலே அஞ்சலை உயிரோட இருக்கிறா. தெனம் ஒரு சேலை அணிஞ்சிக்கிட்டு லச்சணமா நிக்கிற அவ சிலை பக்கத்திலே காலங் கழிக்கிறதிலே ஒரு திருப்தி; மனசு பரிசுத்தமா தெய்வமாப் போன அவளுக்கு நான் இதுவாவது செய்ய வேண்டாமுங்களா!"

மீசைக்காரர் கதையை முடித்தார்.

மயில் கழுத்துப் புடவை வெளிப்படுத்தும் நிற பேதங்கள் போல ஒரு சிலையைச் சுற்றி எத்தனை விதமான கதைகள்!

"என்னய்யா இந்தக் கதையையாவது நம்பலாமா!" என்று வினவினேன். 'இன்னுமா உங்களுக்குச் சந்தேகம்!' என்று சொல்லி முடிக்கு முன் மீசைக்காரர் வலது தோள்பட்டையில் விசிறிக் கிடந்த அங்கவஸ்திரத்தைத் திடீரெனத் திறந்து போட்டார்.

துவண்டு தொங்கிய நொண்டிக் கரம் ஒன்றின் கோரக் காட்சி! அவர்களுடைய சூக்ஷ்மக் காதலுக்கு ஸ்தூல உருவிலே சாட்சி சொன்ன அந்த மூளிக் கையின் முன் புடவை பற்றிய என் மனைவியின் காரசாரமான விமர்சனத் தாக்குதல் வலுவிழந்தன. முடிவாகச் சேலையை வாங்கிக்கொண்டு சேல் விழிகளில் சுடர்விட்ட அச் சிலையை ஒரு முறை நோக்கிவிட்டுத் திரும்பினேன்.

* * *

மறு வாரம் கடைத் தெருப் பக்கம் போயிருந்தபோது 'ஸில்க் எம்போரியத்'தின் வாசலில் ஒரு பளபளப்பான கார் வந்து நின்றதைக் கண்டேன். அதிலிருந்து கடை முதலாளியும் தொடர்ந்து ஒரு பெண்மணியும் இறங்கினார்கள். எனது கூர்ந்த திருஷ்டிக்கு இலக்காகிய அப்பெண்ணின் ஜாடை பரிச்சயமானதொரு முகத்தைப் பளிச்சென்று நினைவுபடுத்தியது.

கடையைத் தாண்டிச் செல்லும்போது அருகருகே நின்ற இரு உருவங்களில் சிலை எது, பெண் யார் என்று எனக்கு அடையாளம் தெரியவில்லை!

## புத்துணர்ச்சி பெற்றேன்!

அமெரிக்காவிலிருந்து பதினைந்து தினங்களுக்கு முன்புதான் திரும்பி வந்த பின்வரும் நேயரின் அருமையான கடிதத்தையும் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்:—

"நான் உங்களுக்குப் புதியவன் அல்ல. அமெரிக்காவிலிருந்து சென்ற செப்டம்பர் மாதம் "கல்கி" அமெரிக்காவுக்கு அனுப்பிக்க முடியுமா என்று எழுதிக் கேட்ட ஆசாமிதான்!

சென்ற வருஷம் அமெரிக்கா சர்க்காரின் 'புல்பிரைட்' (Fulbright) ஸ்காலர்ஷிப்பில் மிச்சிகன் சர்வகலாசாலையில் சேர்ந்து படித்து, வியாபாரத் துறையில் எம். ஏ. பட்டம் பெற்று, இந்தியாவுக்குத் திரும்பி 15 நாட்களே ஆகின்றன.

நீங்கள் போன வாரக் "கல்கி"யில் எழுதியிருக்கும் "கவர்னரின் மகன் கூலி வேலை செய்கிறான்" என்ற அழகான வியாசத்தைப் படித்தேன். அமெரிக்காவில் நடப்பதைக் கண்ணாரக் கண்டவனாகிய நான் அதில் கூறப்பட்டிருக்கும் ஒவ்வொரு வார்த்தையும் உண்மையென்று கூறுவேன். உங்கள் கட்டுரையைக் காலேஜ் சேரும் ஒவ்வொரு மாணவனுக்கும், 'கான்வகேஷ'னில் பட்டம் பெறும் ஒவ்வொரு பட்டதாரிக்கும் ஒரு பிரதி அச்சிட்டுக் கொடுத்தால் நன்றாயிருக்கும்.

எனக்கு ரொம்பவும் வெட்கத்தைக் கொடுத்தது நமது "குமாஸ்தா தயாரிக்கும்" கல்வி முறை. காந்திஜி ஒரு சமயம் இப்பேர்ப்பட்ட கல்வி முறையைப் போதிக்கும் காலேஜ்களையும் சர்வகலாசாலைகளையும் மூடி விடலாம் என்று கூறியிருக்கிறார். ஒரு மாணவனுக்குத் சிறு வயதிலிருந்து வேண்டுவது என்ன! தன்னம்பிக்கையும், தன் காலில் தானே நிற்பது என்ற மனப்பான்மையும் தான். இவை அமெரிக்க சமூகத்தில் நிறையத் தென்படுகின்றன. வேண்டிய சாதனை இருக்கிறது. ஓய்வு அவகாசத்தைப் பயன்படுத்திப் பள்ளிச் செலவுக்குப் பணத்தைச் சம்பாதித்து விடுகிறார்கள் மாணவ மாணவியர்கள். அவர்களைப் பார்த்தவுடனே என் மனசு என்னைத் தூண்டியது. சோம்பேறித்தனத்தை ஒழிக்க ஆரம்பித்தேன். எங்கள் வீட்டிலிருந்து எனக்குப் பணம் வருவதை எதிர்பார்க்காமல் நானும் Part-time வேலைகள் பல செய்தேன். என் வாழ்வில் ஒரு புத்துணர்ச்சி பெற்றேன். இத்துடன் வீண் காலம் கழிக்காமல் ஒழுங்காகப் படித்து வந்தேன். அமெரிக்கா மாணவர்கள் அதிசயிக்கும்படி மார்க்குகளும் வாங்கினேன்.

சம்பாதித்த பணத்தைக் கொண்டு நல்ல புஷ்டி தரும் ஆகாரங்களைச் சாப்பிட்டேன். (Dignity of Labour) உழைப்பின் உயர்வு என்ற மொழி பொய்யா மொழி என்பதை அறிந்தது அமெரிக்காவில்தான். இவையெல்லாம் பற்றிக் குடும்பத்திலும் சிநேகிதர்களிடமும் பேசியாகி விட்டது. இங்கு வந்தவுடன், ராஜாஜியின் பள்ளிச் சீர்திருத்த முறையைப் பற்றிக் கேள்விப் பட்டேன். இது ஒரு முன்னேற்றக் கொள்கை, — நம் கல்வித் திட்டமும் முன்னேறி விடும் என்ற திடமான நம்பிக்கை எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

பெரம்பூர்
23—8—53

ம. சிவராமன்,
பி.ஏ., எம்.பி.ஏ. (மிச்சிகன்)

# சுதந்திரமற்ற குடியரசு!

ஜெயமணி

இரும்புத்திரைக்கு உட்பட்ட பல நாடுகளைச் சுற்றிக் கொண்டு இப்போது லிதுவானியாவுக்கு வந்துள்ளோம். பால்டிக் கடற்கரையில் உள்ள சோவியத் குடியரசுகளான லிதுவானியா, லட்வியா, எஸ்டோனியா இந்த மூன்று நாடுகளும் 1940-ம் வருஷத்திலிருந்து சோவியத் யூனியனைச் சேர்ந்த குடியரசுகளாக இருந்து வருகின்றன.

லிதுவானியா ஒரு காலத்தில் சக்தியும் பெருமையும் வாய்ந்த பெரிய சாம்ராஜ்யமாக இருந்தது. அது கருங்கடலிலிருந்து பால்டிக் கடல் வரையில் பரந்து கிடந்தது. ஆனால் இன்று அது ஐரோப்பாவில் உள்ள மிகச் சிறிய நாடுகளில் ஒன்றாக இருக்கிறது.

ஐரோப்பாவிலேயே லிதுவானிய பாஷைதான் மிகப் புராதனமானது. பாஷைகள் அப்போதைக்கப்போது எப்படி மாறுகின்றன என்பதைத் தெரிந்து கொள்வதற்காக நிபுணர்கள் லிதுவானியர் பாஷையை ஆராய்ச்சி செய்வது வழக்கம்.

இன்று பல வெளிநாடுகளிலும் ஏராளமான லிதுவானியர்கள் இருக்கின்றனர். அமெரிக்காவில் மாத்திரம் இருபது லட்சத்துக்கு மேற்பட்ட லிதுவானியரின் சந்ததிகள் வசித்துக் கொண்டிருக்கிறார்கள்.

* * *

லிதுவானியர்களும் கிரேக்கர்களும் ஆரியர்களின் வழி தோன்றியவர்கள் என்று சில சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர். ஆதியில் ஆரியர்கள் காஸ்பியன் கடற்கரைப் பிரதேசத்துக்கு அருகில் வசித்துக் கொண்டிருந்தார்களாம். பிறகு அவர்கள் பிரிந்து கிரீஸ் நாட்டுக்கும் லிதுவானியாவுக்கும் சென்றதாகப் பிரபல ஐரோப்பிய சரித்திராசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

பத்தாவது நூற்றாண்டிலிருந்து லிதுவானியா மன்னர்களின் ஆட்சியில் இருந்து வந்தது. 1386-ல் அந்த நாட்டில் அரசு செலுத்திய டியூக் ஜெகல்லோ, போலந்து ராணி ஹெட்விக்கை மணம் புரிந்து கொண்டார். அதிலிருந்து நானூறு வருஷ காலம் வரையில் போலந்தும் லிதுவானியாவும் அவர்களுடைய ஆட்சியில் இருந்து வந்தது.

ஆனால் 1795-ல் லிதுவானியா பூகோள படத்திலிருந்து மறைந்தது. அந்த நாட்டை ருஷ்யாவும் ப்ரஷ்யாவும் பங்கு போட்டுக் கொண்டு விட்டதே அத்தகைய விபரீதத்துக்குக் காரணம் ஆகும்.

ருஷ்யாவில் ஏற்பட்ட புரட்சிக்குப் பிறகு லிதுவானியா பொதுவுடைமைக் குடியரசாகப் பிரகடனம் செய்யப்பட்டது. எனினும் மேற்படி சர்க்காரை வீழ்த்துவதற்கு நேச நாடுகள் ஜெர்மன் துருப்புகளை உபயோகித்து வெற்றி பெற்றன.

அதன் பின் அந்த நாட்டில் ஜனநாயக அரசியல் திட்டம் அமுலுக்கு வந்தது. 1920—ம் ஆண்டில் வில்னு நகர் உள்பட லிதுவானியாவுக்குச் சொந்தமான சில பிரதேசங்களை அடுத்துள்ள போலந்து கைப்பற்றிக் கொண்டது.

இரண்டாவது உலக மகா யுத்தம் ஆரம்பமான போது ஜெர்மனி லிதுவானியாவைச் சேர்ந்த மிமெல் பிரதேசத்தைக் கைப்பற்றியது. மிமெல் லிதுவானியாவின் முக்கியத் துறைமுகம் ஆகும்.

அப்போது ருஷ்யா கிழக்குப் போலந்தை ஆக்கிரமித்துக் கொண்டதால், வில்னு நகர் மறுபடியும் லிதுவானியாவுக்கே திருப்பிக் கொடுக்கப்பட்டது.

அவ்வமயம் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி லிதுவானியா எல்லைகளைத் தான் பாதுகாப்பதாக ருஷ்யா உறுதி கூறியது. அதற்குப் பிரதியாக, லிதுவானியாவில் ருஷ்யா ராணுவ தளங்களை அமைத்துக் கொள்வதற்கு லிதுவானிய சர்க்கார் இசைந்தனர்.

பிறகு நடந்த பொதுத் தேர்தலில் லிதுவானியா ருஷ்யாவைச் சேர்ந்த பிரதேசமாக இருப்பதற்கு லிதுவானிய மக்கள் துரதிர்ஷ்டவசமாக இசைந்து விட்டனர்.

1941-ல் ஜெர்மன் துருப்புகள் லிதுவானியா மீது படையெடுத்து, அதை ஆக்கிரமித்துக் கொண்டன. பிறகு 1945-ல் அந்த நாட்டை ருஷ்யா ஜெர்மனியிடமிருந்து மீட்டது.

அப்போதுதான் லிதுவானியா ருஷ்யாவைச் சேர்ந்த பதினாறு குடியரசுகளில் ஒன்றாகியது. எனவே, லிதுவானியாவை ஒரு சுதந்திர நாடு என்று கூறுவதற்கில்லை.

* * *

முப்பதாயிரம் சதுர மைல் பரப்புள்ள லிதுவானியா, மலைகள் இல்லாத சமவெளிப் பிரதேசமாகும். மிகச் சிறியதான அந்த நாட்டில் இரண்டாயிரம் ஏரிகளுக்கு மேல் இருப்பது அதன் விசேஷ அம்சமாகவும் சுபிட்சத்துக்குக் காரணமாகவும் இருக்கிறது.

லிதுவானியாவில் உள்ள நதிகள் எல்லாம் மழைக் காலத்தில் பனிக் கட்டியாக உறைந்து விடுகின்றன. ஆனால் கோடை காலத்தில் அங்கு ஏராளமாக மழை பெய்வதால், பூமி மிகவும் செழுமையாகவும் சதுப்புப் பிரதேசமாகவும் இருக்கிறது.

லிதுவானியா சுரங்கச் செல்வம் எதுவும் இல்லாத நாடு. எனினும் அந்த நாட்டில் உள்ள காடுகளின் மூலம் அதற்கு ஏராளமான வருமானம் கிடைக்கிறது.




கைப்பற்றி விட்டார்கள். அந் நகர் லிதுவானியாவைத்தான் சேர வேண்டும் என்பதை அப்போதிருந்த சர்வ தேச சங்கமும் ஆதரித்ததால், மேற்படி நகர் லிதுவானியாவைச் சேர்ந்து விட்டது.

அதற்கு அடுத்தபடியாக கௌனஸ் நகரைக் குறிப்பிடலாம். ஒன்றரை லட்சம் ஜனத் தொகை உள்ள மேற்படி நகர் 1920-ம் வருஷத்திலிருந்து 1930 வரையில் லிதுவானியாவின் தலை நகராக இருந்தது.

அந்த நகரில் சர்வ கலா சாலை, கலை, கண் காட்சி சாலைகள், தொழிற் சாலைகள் முதலியவை இருக்கின்றன.

லிதுவானியா பாஷையில் கௌனஸ் என்ற வார்த்தைக்குப் போர்க்களம் என்று பொருள். லிதுவானியாவின் சரித்திரத்திலே அந் நகரில் பல போர்கள் நிகழ்ந்திருப்பதாலேயே அதற்கு அந்தப் பெயர் வழங்கி வருகிறது.

இதைத் தவிர பால்டிக் கடற்கரையில் வந்து ஒதுங்கும் அபரிமிதமான குங்கிலியம் லிதுவானியாவின் இயற்கைச் செல்வமாக அமைந்திருக்கிறது. பால்டிக் கடலிலிருந்து கிடைக்கும் அபூர்வமான பல வகை மீன்களும் லிதுவானியாவின் வருமானத்துக்கு ஹேதுவாக இருக்கின்றன.

லிதுவானியாவில் வாழும் சுமார் முப்பது லட்சம் மக்களில் ஐந்து பேருக்கு நால்வர் விகிதம் விவசாயத்தையே ஜீவனமாகக் கொண்டிருக்கிறார்கள். அங்கு கோதுமை, ஓட்ஸ், பார்லி, உருளைக்கிழங்கு முதலியவை ஏராளமாக விளைகின்றன.

லிதுவானியாவில் கால்நடைப் பண்ணைகளும் இருப்பதால், இரண்டாவது மகா யுத்தத்துக்கு முன்வரையில் அங்கிருந்து பல வெளி நாடுகளுக்கும் ஏராளமாக வெண்ணெய் ஏற்றுமதியாகி வந்தது.

லிதுவானியாவில் சகல சிறுவர் சிறுமியர்களுக்கும் இலவசமாகக் கல்வி அளிக்கப்படுகிறது. மேற்படி நாட்டில் சர்வகலாசாலைகளும் இருக்கின்றன.

• • •

இரண்டு லட்சம் ஜனத்தொகை உள்ள வில்னா லிதுவானியாவின் தலைநகராக இருப்பதுடன், அந்த நாட்டின் முக்கிய வர்த்தக ஸ்தலமாகவும் விளங்குகிறது.

லிதுவானியாவின் துறைமுகப் பட்டணமான மிமெல் 1923-ம் வருஷம் வரையில் பிற நாடுகளுக்குச் சொந்தமாக இருந்தது. எனினும் பிறகு லிதுவானியர்கள் அதைக்

லிதுவானியர்களின் பாஷையும் கலாச்சாரமும் மிகப் புராதனமானவை. லிதுவானிய பாஷையின் சிறப்பைக் குலைப்பதற்காக ருஷ்ய சக்கரவர்த்தி பெரு முயற்சி செய்தார்.

அந்த நாடு ருஷ்யாவின் ஆட்சியில் இருந்த போது, லிதுவானிய பாஷையில் புத்தகம் எதுவும் அச்சிடக் கூடாது என்று ருஷ்ய சக்கரவர்த்தி உத்தரவிட்டார். அந்த உத்தரவால் லிதுவானியர்களின் கலாச்சாரங்கள் மறைந்து அழிந்து விடும் என்று ஜார் சக்கரவர்த்தி நினைத்திருக்கலாம். ஆனால் அவரது நோக்கம் ஈடேறவில்லை.

புத்தகங்கள் எதுவுமின்றியே லிதுவானியர்களின் பழக்க வழக்கங்களும் கிராமீயக் கதைகளும், பாடல்களும் வாழையடி வாழையாக அழியாமல் இருந்து வருகின்றன. அவர்களுடைய புராதனக் கதைகளிலிருந்து அவர்கள் ஒரு காலத்தில் சூரியனையே கடவுளாகத் தொழுது வந்தார்கள் என்பது தெரிகிறது. பிறகுதான் அந்த நாட்டில் கிறிஸ்துவ மதம் பரவத் தொடங்கியது.

லிதுவேனியாவில் மூன்று திருவிழாக்கள் முக்கியமாகக் கொண்டாடப் படுகின்றன. அவற்றில் கிறிஸ்துமஸ் விழா ஒன்று.

வருஷா வருஷம் ஜூலை மாதம் லிதுவானிய இளைஞர்கள் காடுகளுக்குச் சென்று புஷ்பங்களைப் பறித்து மாலை கட்டுகிறார்கள். இது அந்த நாட்டில் ஒரு பெரும் விழாவாக அனுஷ்டிக்கப் படுகிறது.

அறுவடை காலத்திலும் அவர்கள் அறுவடை விழாவை மிகப் பிரபலமாகக் கொண்டாடுவது வழக்கமாக இருந்து வருகிறது.

# எவ்வளவு காலம் உழைக்கிறது...

## என்ன புதுமை



501 ஸோப்பைக் கொண்டு சலவை செய்யப்படும் துணி மணிகள்நீடித்துழைப்பதுடன் புதுமையும் அடைகின்றன. இந்த ஸோப்புகள் பார்களாகவும், சிறு தூள்களாகவும் விற்கப்படுவது தவிர, 501 ஸ்பெஷலுமாகக் கிடைக்கும். இவை பணம் மிச்சப்படுத்துகின்றன, துணிகளை மிகவும் பாதுகாக்கின்றன. வீட்டுச் சலவை வேலையை உங்களுக்கு எவ்வளவோ சுலப மாகவும் செய்கின்றன.




# 501

## சலவை ஸோப்புகள்

இவை டாடா தயாரிப்புகள் 

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்




கோல்கேட் ரங்கராங்கை ரேடியோசிலோனில் 41 மீட்டர் பாண்டில்
பிரதிவெள்ளிக்கிழமையும் இரவு 8 மணிக்கு கேளுங்கள்!







# வாழ்க்கையே தியாகம்

நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர்

கிருஷ்ணமூர்த்தி படிப்பில் எவ்வளவு புத்திசாலியாக இருந்தானோ அவ்வளவுக்கு விளையாட்டில் மந்தமாக இருந்தான். அவன் பள்ளிக்கூடத்தில் படித்த நாட்களிலும், கல்லூரியில் படித்த நாட்களிலும் அவன் பரிசுகள் பெறாத வருஷமே கிடையாது. பரீட்சைகளில் முதல் மாணவனாகத் தேறாத வருஷமே கிடையாது. விளையாட்டுக்களில் அவன் பெற்ற ஒரே பரிசு டக்-அப்-வார் என்ற விளையாட்டில்தான். இந்த விளையாட்டில் 'இழுங்கள்! இழுங்கள்' என்று அவன் மற்ற பத்துப் பேருக்கும் போட்ட சத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. இவ்வளவுதான் இதில் இவன் எடுத்துக் கொண்ட பங்கு. அவன் சைக்கிள் விடவும் கற்றுக் கொண்டான். இதிலும் ஒரு இடையூறு. அவனுக்குச் சைக்கிளில் ஏறும்போதும் சரி இறங்கும் போதும் சரி ஒரு பாறை அவசியமாக வேண்டியிருந்தது. அதனால் அவன் தாயார் கூட, "கடவுள் புண்ணியத்திலே வேண்டிய பாறைகள் இருக்கின்றன. நீ சௌகரியமாகச் சைக்கிள் விடலாம்" என்பாள்.

பிறகு நாளடைவில் அவன் மோட்டார் சைக்கிள் விடவும் கற்றுக் கொண்டான் என்று சொல்ல வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். இதிலும், அவன் 'ஸைட் கார்'டன் போவதுதான் சௌகரியம் என்று கருதினான். ஆனால் மோட்டார் சைக்கிள் நிபுணர்களின் கைகண்ட அனுபவம் என்னவென்றால், ஸைட்கார் இல்லாத மோட்டார் சைக்கிள்தான் சௌகரியம் என்பது! இதைக் கேட்டு ஆச்சரியமுற்ற நம் கிருஷ்ணமூர்த்தி. "ஸைட்கார் இல்லை என்றால் சைக்கிள் விழுந்து விடாதோ? மூன்று சக்கரங்கள் இல்லை என்றால் எப்படி விழாமல் சவாரி செய்வதாம்?" என்று கேட்டான்.

இப்படியிருந்த இளைஞன், விவாதமென்றால் அஞ்சாமலும், எத்தகைய குறுக்குக் கேள்வியையும் ஒரு நிமிஷத்தில் சமாளிக்கும் புத்தி கூர்மையைப் பெற்றவனாகவும் விளங்கினான். விளையாட்டு அல்லது வேலை என்றால் பின் வாங்கும் குணமுடையவனாகவும் இருந்தான். இந்தப் போக்கில் அவன் பிள்ளைப் பிராயம் கழிந்தது.

சென்னை அரசாங்கக் கல்லூரியில் பி.ஏ. பரீட்சையிலும், பின்னர் சட்டப் பரீட்சையில் முதல் மாணவனாகவும் தேறினான். சென்னையில் நிகழ்ந்த வாக்கு வன்மைப் போட்டியிலும், ஆக்ராவில் நடந்த சகல சர்வ கலாசாலை வாக்குவன்மைப் போட்டியிலும் மெடல்கள் பெற்றான்.

சீதா, சென்னையில் பிரபல டாக்டர் ஒருவரின் மகள். நல்ல அழகி. அவள் கிருஷ்ணமூர்த்தியை விட நான்கு வயது சிறியவள். ராணி மேரி கல்லூரியில் படித்து வந்தாள்.

அவளுடைய சக மாணவிகளில் சீதா ரொம்பவும் துடுக்கையானவள். சென்னை கல்லூரிகளைச் சேர்ந்த மாணவ - மாணவி வாக்குவன்மைப் போட்டியில் சீதா, கிருஷ்ணமூர்த்திக்குத் தோற்றுப் போனாள். அந்த நாளிலிருந்து அவள் கிருஷ்ணமூர்த்தியின் வாக்குச் சாதுர்யத்தில் ஒரு மோகங் கொண்டாள். இருவருக்கும் பொதுவாகத் தெரிந்துள்ள நண்பர்களின் இல்லங்களில் சீதாவும் கிருஷ்ணமூர்த்தியும் அடிக்கடி சந்தித்து வந்தார்கள். சீக்கிரத்தில் ஒருவர்மீது ஒருவர் காதல் கொண்டார்கள். அவர்களுடைய பெற்றோர்கள் கூட அவர்கள் இருவரும் கல்யாணம் செய்து கொள்வதற்குச் சம்மதித்தார்கள். அதன்பேரில் 1923-ம் ஆண்டு வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

கிருஷ்ணமூர்த்தியின் தந்தை திருவாளர் சுப்பிரமணியம், அவருடைய இளம் பருவத்தில் பெரிய புரட்சி வாதியாக விளங்கினார். அவர் தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தில் முன்னணியில் நின்று பிரசாரம் செய்தார். அவர் கிருஷ்ணமூர்த்தியிடம் அடிக்கடி சொல்லி வருவார்: "கடவுள் என்றால் அவர் ஒவ்வொரு மனிதருக்கும்தான் தந்தை. அப்படியில்லை என்றால் அவர் யாருடைய தந்தையுமில்லை. மனித குலத்தின் தந்தையென்றால், மனிதர் யாவரும் சமம்தான். அவர் மனித வர்க்கத்தினர் எல்லோருக்கும் தந்தையல்லவென்றால் நாம் மீன் வர்க்கத்தின் நியாயத்தைக் கடைப் பிடிப்போம். நாம் ஒருவருக் கொருவர் கழுத்தை நெரித்துக் கொள்ளப் பார்ப்போம் என்ன இருந்தாலும் தீண்டாமை என்பது ஹிந்து தர்மத்துக்கு ஒரு களங்கம். நம்மை அவமானப் படுத்துபவர்களின் காலடியில் விழுந்து வணங்கும்படியும், தஞ்சமென நம்மைச் சரணமடைந்தவர்களை அவமானப்படுத்தும்படியும் ஹிந்து தர்மம் ஒருநாளும் கூறியிருக்க முடியாது. தவறிப் போய் அத்தகைய அபிப்பிராயம் கலந்துள்ள ஹிந்து தர்மம் உடனே சீர் திருந்தியாக வேண்டும். அல்லது அது உடனே அழிய வேண்டியதுதான்.

"மற்ற மதத்தைச் சேர்ந்தவர்களையும், ஹிந்து மதத்தைவிட்டு இஸ்லாமிய மதத்தையும் கிறிஸ்துவ மதத்தையும் தழுவியர்களையும் மிக்க அன்புடன் நடத்துகிறது. ஆனால் தன் மதத்தைச் சேர்ந்தவர்களை மிகவும் கேவலமாக நடத்துகிறது இந்த ஹிந்து மதம்"

அவர் காலத்தில் ஹரிஜனங்களை அக்ரஹாரத்தில் நுழைய அனுமதித்தார். அவர் தம் வீட்டில் ஹரிஜனங்கள் பிரவேசிக்கவும் அனுமதித்தார். விறகு வெட்டவும், கூரை வேயவும், கிணற்றிலிருந்து தண்ணீர் இழுக்கவும் நியமித்தார். ஆம், இச்செய்கைகளினால் அவருடைய உறவினர்களும் உள்ளூர் பிராமணர்களும் அவர் மீது கோபங் கொண்டனர். அவரிடம் பல ஹரிஜன வேலையாட்கள் பரம்பரை பரம்பரையாக வேலை செய்து வந்தனர். அவர்களில் ஒருவன்தான் பெரியாண்டி. அவனைப் பற்றி ஏராளமான கட்டுக் கதைகள் உண்டு. ஒருதடவை திருவாளர் சுப்பிரமணியத்தின் விரோதி ஒருவன் அவருடைய தென்னந் தோப்பில் நுழைந்து நூறு தேங்காய்களைத் திருடி விட்டானாம். உடனே பெரியாண்டி அவர்கள் தோட்டத்தில் ஒருநாள் இரவு நுழைந்து ஐந்நூறு தேங்காய்களைப் பறித்தானாம். மற்றொரு சமயம் வயலுக்குத் தண்ணீர் பாய்ச்சுவது சம்பந்தமாக ஏற்பட்ட தகராறில், சுப்பிரமணியத்தின் விரோதிகள் அவரைக் கொல்லப் பார்த்தார்கள். அப்பொழுது பெரியாண்டிதான் நடுவில் புகுந்து கொலை விழாமல் தடுத்துத் தனது எஜமானரைக் காப்பாற்றினான்.

கிருஷ்ணமூர்த்தியின் கல்யாணத்துக்கு, பெரியாண்டியும் அவன் மகன் சின்ன ஆண்டியும் சென்றிருந்தார்கள்.

கல்யாணத்தின் போது ஒரு வைதீகக் குடுக்கை சீதாவின் தந்தையிடம் "அவர்கள் தீண்டத் தகாதவர்கள்" என்றார்.

"ஆனால் அவர் அவர்களைத் தொடுகிறார். ஆகவே, அவர்கள் தீண்டத் தகுந்தவர்களாகி விட்டார்கள்" என்று சிரித்துக் கொண்டே கூறினார் அந்த டாக்டர்.

"நாம் எப்படி அந்தக் கீழ்ச் சாதி ஜனங்களுடன் கலந்து பழகலாம்?" என்று அந்த வைதீக மனிதர் மறுபடியும் கூறினார்.

"அவர்கள் நம்முடன் இவ்வுலகில் வாழ்வதனால் நாமும் அவர்களுடன் கலந்து பழக வேண்டியதுதான். ஏன் நீங்கள், நாய்கள், எலிகள், பல்லிகள், கரப்பான் பூச்சிகள் இவற்றுடன் வீட்டிலும் வெளியிலும் பழகவில்லையா என்ன? பின்னர் மனிதர்களில் மட்டும் ஒரு சிலரை ஒதுக்குவானேன்? அவர்கள் உடம்பிலும் நம் தேக ரத்தம்போல் சிவப்பு ரத்தம் தானே பாய்கிறது" என்று கூறிப் பேச்சை அத்துடன் முடித்தார்.

கல்யாணமான சில நாட்களிலேயே சீதா தன் கணவனிடம் போய்ச் சேர்ந்தாள். அவர்கள் எப்பொழுதும் இணைபிரியாமல் அன்யோன்யமாக வாழ்ந்து வந்தனர்.

ஆறு மாதத்துக்குப் பின்னர் அவன் தன் மாமனார் காரை ஓட்டக் கற்றுக் கொண்டான். ஆனால் அரைகுறையாகக் கற்றுக் கொண்டான். சீதாவும் கார் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று விரும்பினாள். எனவே அவளைத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு கார் ஓட்டக் கற்றுக் கொடுத்தான். காரில் தன் இரு மைத்துனிமாரையும் உட்கார வைத்துக் கொண்டான் கிருஷ்ணமூர்த்தி. இப்படி ஒருநாள் எல்லாம் கழிந்தது. சீதாவுக்கு ஓரளவு கார் ஓட்டத் தெரிந்ததாகவும் தோன்றியது.

ஆகவே அடுத்த நாள் கார் ஓட்டச் சீதா முற்பட்டபோது கிருஷ்ணமூர்த்தி சற்று அசிரத்தையாக இருந்தான். அவள் ரொம்பவும் வேகமாக மோட்டார்க் காரைச் செலுத்தி

னான். இப்படி வேகமாகப் போய்க்கொண்டிருந்தபோது, அந்தச் சாலை திடீர் என்று வளைந்தது. அந்தத் திருப்பத்தைக் கண்டதும் அவன் கைகள் வெலவெலத்துப் போயின. கார் வேகமாகத் திரும்பி எதிரில் இருந்த தந்திக் கம்பத்தை நோக்கி விரைந்தது. இதோ இதைக் கண்டு பயந்து 'ஓ'வென்று அலறினாள். கிருஷ்ணமூர்த்தி ஒரே கலவரமடைந்தான். இந்தக் கலவரத்தில் பிரேக் போட்டுக் காரை நிறுத்துவதற்குப் பதிலாக 'அக்ஸிலேரேட்ட'ரை அழுத்தி விட்டான். அதன் விளைவாகக் கார் இன்னும் வேகமாகச் சென்று தந்திக் கம்பத்தின் மீது பயங்கரமாக மோதியது. காருக்கு முன்பிருக்கும் கண்ணாடி சுக்குநூறாக உடைந்து சிதறியது. அதில் சில கண்ணாடித் துகள்கள் கிருஷ்ணமூர்த்தியின் கன்னத்திலும் முகத்திலும் குத்தி ரத்தக் களரியாக்கி விட்டன.

குழந்தைகளும் இதோவும் காயமுறவில்லை. ஆனால் இதோ திக்பிரமை பிடித்து நின்றாள். அவளுக்கு என்ன செய்வது என்று தோன்றவில்லை. அவள் தன்னைத்தானே நொந்து கொண்டாள். அக்கம்பக்கத்திலிருப்பவர்களை உதவி புரியும்படி கூப்பாடு போட்டாள். அந்தப் பக்கமாகச் சென்று கொண்டிருந்த மாணவர்கள் சிலர் ஓடி வந்தார்கள். கிருஷ்ணமூர்த்தியை ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றார்கள்.

அங்கே டாக்டர் கிருஷ்ணமூர்த்தியைப் பரிசோதனை செய்தார். தாடையில் ஏற்பட்டிருந்த காயம் வாய் வரைக்கும் ஆழமாகப் பதிந்திருந்ததைக் கவனித்தார். இந்தக் காயத்தை இப்படியே விட்டு வைத்தால் உயிருக்கே ஆபத்து விளைவிக்கக் கூடியதாகப் போகலாம் என்று பயந்தார். அவர் உடனே கிருஷ்ணமூர்த்திக்குக் குளோரபாரம் கொடுக்கத் தீர்மானித்தார். அப்போதுதான் கன்னத்தில் பதிந்துள்ள கண்ணாடித் துண்டுகளை நீக்கவும், காயத்தைத் தைக்கவும் முடியும். குளோரபாரம் கொடுக்க ஆரம்பித்த போது கிருஷ்ணமூர்த்தி இனிய வாசனையை நுகர்ந்தான். பின்னர் மூச்சுத் திணற ஆரம்பித்தது. கொஞ்சம் கொஞ்சமாக நினைவிழக்கலானான். தான் என்ற உணர்ச்சியை மறக்கலானான். தனக்கும் உலகத்துக்கும் எதற்குமே யாதொரு தொடர்பும் இல்லாதது போல் உணர்ந்தான். அவன் தலையின் இடது பக்கம் சொல்லி முடியாத வலி ஏற்பட்டது. பிறகு அதுவும் நின்றுவிட்டது. இப்பொழுது அவன் "நான் இறந்து போனால் என்ன? இதனால் யாருக்கு என்ன கஷ்டம்?" என்று எண்ணலானான். இப்பொழுது அவனுக்கு விழுங்க வேண்டும் போல் தோன்றியது. 'விழுங்குவதால் என்ன பிரமாதமாக ஆகிவிடப் போகிறது? ஒரு வேளை நான் செத்துப் போகலாம்! அதற்கும் மேலே ஒன்றும் ஆகிவிட முடியாதல்லவா?' என்று தனக்குள் கூறிக்கொண்டு விழுங்கினான். அப்பொழுது அங்கிருந்த டாக்டர் ஒருவர்,

○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

## அவர்கள் எங்கே?

இக்காலத்தில் இஞ்சினீரிங் கல்லூரியில் மாணவர்களுக்குப் போதிய இடம் கிடைக்கவில்லை. முன் காலத்தில் சிற்பி, ஸ்தபதி, கன்னார் என்பவர்கள் கல்லூரிகளில் பயின்றவர்களா? அல்லது தொழில் முறையில் கற்றுக் கொண்டார்களா என்பதைச் சற்றுச் சிந்திக்க வேண்டுகிறேன். மாயூரம் கோபுரம், ஆவுடையார் கோயில் கொடுங்கை, தஞ்சை ஸ்தூபி, இன்னும் எத்தனை எத்தனையோ வேலைப்பாடுகள் இன்று செய்ய முடியாத நிலையில் இருப்பதைப் பார்க்கிறோம். காவேரி மண் அணை சோழர் காலத்தில், 1500 ஆண்டுகளுக்கு முன், தோற்றுவிக்கப் பட்டது. இன்றுள்ள அமெரிக்க இஞ்சினீர்கள்கூட அந்த அணையின் அமைப்பைக் கண்டு வியக்கிறார்கள். அம்மாதிரி தொழில்கள் நம் நாட்டிலிருந்த பெருமையை நாம் கூறிக் கொள்ளலாமேயன்றி, இன்றுள்ள தொழில் மறந்த—நிலையைக் கண்டு கண் கலங்க வேண்டியதுதான். தஞ்சையிலும், சென்னையிலும் கலைக் கண் காட்சிகளைக் காண்கிறோம். அங்குள்ள அழகான வேலைப்பாடுகள் இக்காலத்திலுள்ள இஞ்சினீர்களால் செய்ய முடியுமா! ஏழிசைப் பெருமாள் உடலைத் தட்டினால், ஏழிசையும் கேட்கிறோமே! அம்மாதிரி அமைத்த கன்னார் யார்! அவருடைய மக்களாவது அதனைக் கற்றிருந்தால் நம் முன்தோன்ற மாட்டார்களா!

இளமையில் பரம்பரைத் தொழிலைப் பயின்று கல்லூரிக்குப் போகும் மாணவன் தொழில் நுட்பம் அறிந்தவனாயிருப்பான் என்று நம்புவதில் தவறு என்ன இருக்க முடியும்! கல்லூரிப் பையனுக்குப் 'புளிய மரம் எந்தக்காலம் பூக்கும்' என்று தெரியவில்லை. நேருஜி ஓரிடத்தில் விவசாயக் கல்லூரி மாணவர்களிடையே பேசும்போது, "நீங்கள் கல்லூரியில் பயின்று எல்லாம் உணர்ந்தவர்களென்று நினைத்துக் கொண்டு கிராமங்களிலுள்ள விவசாயிகளுக்கு ஒன்றும் தெரியாதென்று நினைக்கிறீர்கள். பழங்கால முதல் பயின்ற அனுபவ முதிர்ச்சி அவர்களிடமுண்டு. அதனை நீங்கள் கற்றுக் கொண்டு அவர்களுக்கு உங்கள் விஞ்ஞான அறிவைப் பரிமாறுங்கள்" என்றார்.

ஆகவே, புதிய கல்வி முறை மக்களுக்குச் சிறப்பை அளிக்க வல்லது என்பதைப் பொது மக்கள் நாளடைவில் உணர்வார்கள்.

ஆலவேலி
21—7—53 மு. வைத்தியநாதன்

○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

"குளோரபாரத்தின் வசமாகி விட்டார்" என்று கூறியது அரைப் பிரக்ஞையிலிருந்த அவன் காதுகளில் விழுந்தது. அதற்குள் இன்னொரு டாக்டர் "இன்னும் இல்லை" என்று கூறியதும் அவனுக்குக் கேட்டது. அவன்கூட "இல்லை" என்று சொல்ல விரும்பினான்; கை ஜாடை காட்ட விரும்பினான். ஆனால் அவனால் கையைத் தூக்க முடியவில்லை.

அவனுக்கு ஒருவிதமான உள்ளச் சோர்வு ஏற்பட்டது. "செத்துத் தொலைந்தால் தேவலையே" என்ற எண்ணம் எழுந்தது. கூடவே வேண்டாம் போலவும் தோன்றியது. அவன் இரைந்தான்: "ஓ ராமா! ஓ கிருஷ்ணா! என்னை இக் கஷ்டத்திலிருந்து காப்பாற்

றுங்கள். எனக்கு உயிர்ப் பிச்சை அளியுங்கள். நான் சாகத்தான் வேண்டுமென்றால் என் மனைவியைக் காப்பாற்றுங்கள்!''

இப்பொழுது இன்னொரு குரல் பின்வருமாறு கூறக் கேட்டான். "ஏன் அந்தத் தெய்வங்களை இறைஞ்சுகிறாய்? அத் தெய்வங்கள் எல்லாம் இறந் தொழிந்து எத்தனையோ நாட்கள் ஆயினவே! இனி நீ இயேசுநாதரை அல்லது அல்லாவை அல்லது ஸாயி பாபாவை வேண்டிக் கொள்."

இதற்குப் பின் வருமாறு பதில் கூறியதாக அவனுக்குத் தோன்றியது. "என் தெய்வங்கள் எல்லாம் இறந்தொழிந்தன என்றால் நான் மட்டும் ஏன் உயிர் வாழ வேண்டும்? நானும் இறந்து தொலைகிறேன்."

அப்பொழுது 'களுக்' என்று யாரோ சிரித்த சிரிப்பொலி அவனுக்குக் கேட்டது. புல்லாங்குழலின் இன்னிசை கேட்டது. எங்கிருந்தோ அமைதி வந்து அவன் உள்ளத்தில் பதிந்தது. அவன் அருகில் உட்கார்ந்து ஒரு பெண் இலேசாக விம்மியழும் சத்தம் அவன் காதில் விழுந்தது போலவும் அதற்கு, "அழாதே ஸீதா, இதில் உன் தவறு என்ன இருக்கிறது? ஒன்றுமே இல்லை!" என்று பதில் கூறியது போலவும் தோன்றியது.

பிறகு அவன் மயக்க நிலையிலிருந்து தெளிந்தவுடன் ஸீதாவிடம் மேற்சொன்ன விஷயங்களையெல்லாம் கூறினான். மேலும், "ஸீதா, நமக்கு ஏற்படும் மிகக் கொடிய துன்பங்கள் எல்லாம் யாரிடம் நாம் அளவு கடந்த அன்பும் பிரியமும் வைத்திருக்கிறோமோ அவர்களாலேயே ஏற்படுகிறது பார்த்தாயா! இது அதிசயமாக இல்லையா? பார்க்கப் போனால், விளைவிக்கப் பட்ட துன்பம் நம்மை அவ்வளவாகப் பாதிப்பதில்லை; பாதிப்பதெல்லாம் துன்பம் விளைவித்தவர்களின் மனசு-நோக்கம்-எண்ணம்-இவைதான் பாதிக்கிறது. அதனால்தான் ஸீதா எனக்கு ஆப்பரேஷன் செய்தபோது, என் மனைவி அருகில் இருக்க வேண்டும் என்று கூறினேன். இது விசித்திரமாகத் தோன்றலாம். ஆனால் பச்சை உண்மை என்னவோ இதுதான். இதைவிட ஆச்சரியமானது என்ன தெரியுமா, ஸீதா! ஒரு முஸ்லிமும் ஒரு கிறிஸ்தவரும் என்னை ஆப்பரேஷன் மேஜையின் மீது கிடத்திப் பிடித்துக்கொண்டிருந்தனர். பிராமணர் அல்லாத டாக்டர் ஒருவர் எனக்கு ஆப்பரேஷன் செய்தார். ஒரு பிராமண டாக்டரும் ஒரு பார்ஸி டாக்டரும் அவருக்கு உதவி புரிந்து கொண்டிருந்தனர்.

"ஆகவே இந்தப் பாரத தேசம் துவேஷத்திலும் வெறுப்பிலும் மட்டும்தான் ஒன்றுபட்டிருக்கிறது என்றில்லை. தொண்டு புரிவதிலும், அன்பு செலுத்துவதிலும்கூட ஒன்றுபட்டிருக்கிறது என்பதைத் தெளிவாக அறிந்தேன். ஸீதா, அன்பே, உலகில் நாமாகத் தெரிந்து கொள்ளக் கூடியதைவிட எவ்வளவோ நல்ல அம்சங்கள் இருக்கின்றன. என்னை யார் என்று அறியாதிருந்தும், மாணவர்கள் உடனே ஒரு கணமும் தாமதியாமல் உதவி புரிந்தார்களே, அவர்கள் அன்புத் தொண்டை என்னவென்று கூறுவது! நான் மற்றொரு விஷயத்தையும் தெரிந்து கொண்டேன். எனக்கே கார் ஓட்டுவதில் திறமையோ, சமயோசித புத்தியோ இல்லாத போது, உனக்குக் கற்றுக்கொடுத்து விடலாம் என்று எல்லாம் தெரிந்தவன்போல் நடித்தேனே அதற்கு முற்றுப்புள்ளி விழுந்தது.

"யுத்தகளத்தில் படுகாயம் அடைவது என்றால் என்ன, பொதுவாகக் கஷ்டம் என்றால் என்னவென்பதை எனக்கு அறிவுறுத்திவிட்டது. நான் அழுதேன்; ஆனால் நான் அழுதிருக்கக் கூடாது. ஆப்பரேஷன் மேஜைக்குக் கொண்டு போனபோதும் அதற்குப் பிறகும் நான் அழவில்லை. நான் அமைதியாக இருந்தேன். ஸீதா,—கடவுள் மிகப் பெரியவர், அவர் தம் குழந்தைகளின்மீது எவ்வளவு அன்பு வைத்திருக்கிறார் தெரியுமா? அவர் அன்பு வைத்திருப்பதனாலேயே அவருடைய குழந்தைகளுக்கு எவ்வித தீங்கும் இத்தகைய துர்ச் சம்பவங்களில் நேர்வதில்லை. அவர், ஒவ்வொருவருடைய தோள்களும் சுமக்கக் கூடிய அளவுக்குத்தான் பாரத்தை வைக்கிறார். அவரை அடைய முடியாது, பார்க்க முடியாது. சாவின் தலைவாசலில் இருக்கும் போதுகூட அந்தக் கடவுளைக் காண முடிவதில்லை. கடவுள் ஓயாமல் ஒழியாமல் தன் காரியத்தைச் செய்து கொண்டுதான் இருக்கிறார். ஆனாலும் நாம் உணர்வதில்லை. கார் மோதிய இத் துர்ச்சம்பவம் எனக்கு ஒரு வாரத்துக்குத் தாங்க முடியாத வலியையும், மிக விகாரமான வடுவையும் என் முகத்தில் ஏற்படுத்தி யிருக்கிறதென்றாலும் எனக்கு ரொம்ப ரொம்ப நன்மையையே புரிந்திருக்கிறது. என்னுடைய அசட்டுப் பிரதாபங்கள் எல்லாம் இறந்தொழிந்தன. எனக்கு உண்மை அறிவு வந்தது. இனி சின்னச் சின்ன நோய்கள் என்னை ஒன்றும் செய்துவிட முடியாது. ஏனெனில் நான் மாபெரும் கஷ்டத்தை அனுபவித்து விட்டேன்.

"இனிமேல் நான் முன்னளவு சுயநலக்காரனாக இருக்க மாட்டேன். முன்னைவிட யாவரிடமும் அன்புடன் நடந்து கொள்வேன். பேச்சைக் குறைத்துக் கொள்வேன். காரியத்தில் கருத்தா யிருப்பேன். ஸீதா இனி நாம் இருவரும் நம் கடைசி மூச்சிருக்கும் வரை அவருக்காகவே எக்காரியமும் செய்வோம். ஏனெனில் நாம் எண்ணும் எண்ணமெல்லாம் அவர் எண்ணங்கள். நாமோ அவருடைய கருவிகள். அவ்வளவுதான்."

இதைக் கேட்டு வந்த ஸீதாவின் கண்களில் கண்ணீர் தளும்பி நின்றது. ஒன்றும் பதில் கூறாமல் அவனை அன்போடு பார்த்தாள்.

"மறுபடியும் நாம் எப்பொழுது கார் ஓட்டத் தொடங்கப் போகிறோம்?" என்று கேட்டான் கிருஷ்ணமூர்த்தி. (தொடரும்)

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்

•

சிறு நீரில் அதிக சர்க்கரை இருப்பின் நீரிழிவு (DIABETES) என்று சொல்லப்படும் இப் பயங்கர வியாதியுள்ள நோயாளி நாளுக்கு நாள் தன் முடிவு நெருங்குவதைக் காண்கிறான். இதை நிவர்த்திக்க டாக்டர்கள் இன்ஸுலின் இன்ஜக்ஷன் ஒன்றைத்தான் கண்டு பிடித்தார்கள். இதைக் குத்திக் கொள்வதால் பூரண குணம் ஏற்படுவதில்லை; இன்ஜக்ஷன் மருந்து உள்ள வரை சர்க்கரை தற்காலிகமாக மறைந்து விடுகிறது.

அபரிமிதமான தாகம், பசி, அடிக்கடி சிறு நீர் சர்க்கரையுடன் போதல், எரிச்சல் ஆகியவைகள் இந்த வியாதியின் முக்கிய அறிகுறிகள். வியாதி முற்ற ராஜப் பிளவை கட்டிகள், சாலேஸ்வரம் இதர கொடிய வியாதிகள் ஏற்படும். வீனஸ் சார்ம் நவீன விஞ்ஞான அதிசயமாகும். இதை உபயோகித்ததால் பலர் மரணத்தினின்று தப்பியுள்ளனர்.

வீனஸ் சார்ம் உபயோகித்த 2-வது அல்லது 3-வது நாளில் சிறுநீரில் சர்க்கரை குறைந்து அடிக்கடி போகும் சிறு நீரும் குறைகிறது. 3-வது அல்லது 4-வது நாளில் வியாதி பாதிக்குமேல் குணமடையும். இந்த மருந்துக்குப் பத்தியம் கிடையாது; இன்ஜக்ஷன் கிடையாது. நன்கு விளக்கும் இலவச ஆங்கில புத்தகத்திற்கு எழுதிக் கேளுங்கள்.

•

**50 வில்லைகள் கொண்ட புட்டி 1-க்கு ரூ. 6-12-0**

(பாக்கிங், தபால் செலவும் இனம்)

•

**வீனஸ் ரிஸர்ச் லாபரட்டரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**




பிரதி சனி இரவு 8-30 மணிக்கு 25·5 மீட்டரில் "பியர்லைன் பாரிஸாரின் டபிள் அல்லது நதிங்" என்ற கல்வி அறிவிப் புதிர் நிகழ்ச்சியை ரேடியோ சிலோனில் கேளுங்கள்.




"இரண்டு வருடங்களாக எனது முகத்தில் பருக்களும், தடிப்புகளும் நிறைந்து இருந்தன. கைக்குக் கிடைத்த எல்லாவிதமான தைலங்களையும், க்ரீம்களும், களிம்புகளும் உபயோகித்தும் யாதொரு பலனும் சிறிதும் காணுததனுல் பெரிதும் கவலையுற்றேன். கடைசியில் அதிர்ஷ்டவசமாக "க்ருஷன்" உபயோகிக்கத்தீர்மானித்தேன். ஆச்சரியம்! ஆறு வாரங்களில் எனது முகம் யாதொரு களங்கமுமின்றி ஆனதோடு இதுவரை ஒருவிதமான பருவோ, புள்ளிகளோ வந்ததில்லை. தினந்தோறும் "க்ருஷன்" உட்கொள்ளும் நான் அது இல்லாமல் ஒரு நாளும் இருக்க மாட்டேன்." —Mrs. J.A.

முகத்திலுள்ள பருக்களையோ அவலட்சணமான புள்ளிகளையோ மறைக்க முயலாதீர்கள். இரத்த அசுத்தியே இவற்றிற்குக் காரணமாதலால் உட்புற சிகிச்சையே இவற்றின் மூல காரணத்தைத் தாக்கும். "க்ருஷன்" இரத்தத்திலுள்ள அசுத்தங்களை வெளியேற்றட்டும்; உடனே சருமத்தின்மேலுள்ள சகலவித களங்கங்களும் அகன்றுவிடும். தினந்தோறும் உட்கொள்ளும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" உங்களது இரத்தத்தைச் சுத்தமாய் வைத்திருப்பதோடு சருமத்தை ஆரோக்கியமாயும், தெளிவாயும் வைத்திருக்கிறது.

**"க்ருஷன்"** உங்கள் ஆரோக்யத்திற்கும் ஆனந்தத்திற்கும் உற்ற உதவி

# யோகாசன சிகிச்சை

வி. என். குமாரஸ்வாமி

## 2. யோகாசன சிகிச்சையின் மேன்மை

நோய்கள் வந்தால் மருந்துகளைத் தேடும் வழக்கம் மாறி இன்று ஆசனங்களால் குணப்படுத்திக் கொள்ளலாம் என்ற நினைப்பை மக்கள் கொள்ளத் தொடங்கி விட்டனர். இந்த நிலை உண்டாகப் பலர் பல வருஷங்களாக மேடையின் மூலமாகவும், எழுத்தின் மூலமாகவும், செயலிலும் காட்டியிருக்கின்றனர். நமது தமிழ்நாடு வரை எடுத்துக் கொண்டால் சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்களையும் இன்னும் இரண்டொருவரையும் சொல்லலாம். ஆனால் லொனேவ்லாவில் இருக்கும் சுவாமி ஸ்ரீ குவலயானந்தா (உடற்கூறு பேராசிரியர்) அவர்கள்தான் இந்த யோக ஆசனக் கலையை விஞ்ஞான பூர்வமாய் முதன் முதலில் நமது நாட்டில் ஆராய்ச்சி செய்து வெளியிட்டவர். மற்றவர்கள் அவர்கள் ஆராய்ந்த ஆராய்ச்சியிலிருந்த விஷயங்களை வைத்துக் கொண்டு, தங்கள் அனுபவத்தையும் சேர்த்துக் கொண்டவர்கள். நானும் அவ்வகையில் சேர்ந்தவன்தான்.

சுவாமி ஸ்ரீ குவலயானந்தா அவர்கள் முயற்சியினால் நமது யோகக் கலைக்கு ஒரு நல்ல காலம் ஏற்பட்டது என்றாலும் இன்னமும் ஆராய வேண்டிய விஷயங்கள் ஏராளமாய் இருக்கின்றன. இதை அவரே ஒப்புக் கொள்ளுகின்றார். கடைசியில் அவருக்கும் போதிய வசதி ஏற்படாததால் பல ஆராய்ச்சிகள் செய்ய முடியாமற் போயிற்று. நமது சுதந்திர அரசாங்கம் வந்த பின் யோகக் கலைக்கென்றே சுவாமி ஸ்ரீ குவலயானந்தா அவர்கள் தலைமையில் புனாவில் ஒரு யோகக் கலாசாலை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதிலிருந்து இனி விஞ்ஞான சாஸ்திர ரீதியாய் யோகக் கலையைக் கற்ற யோக வைத்தியர்கள் வெளி வருவார்கள். ஆனால் இம்மாதிரி ஒரு கலாசாலை மட்டும் போதாது. ஒவ்வொரு ராஜ்யத்துக்கும், ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒன்றாவது இருக்க வேண்டும். அதற்கு வேண்டிய திட்டங்கள் வகுக்க ஆட்கள் இல்லாமல் இல்லை. சந்தர்ப்பமும் வசதியும் ஏற்படுத்திக் கொடுத்தால் வேண்டியவர்கள் கிடைக்கத்தான் செய்வார்கள்.

அதுவரை நாமெல்லோரும் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பதா! நல்லது என்று தோன்றும் எதையும் தள்ளிப் போடுதல் நன்றல்ல. எல்லோருக்கும் நன்மை பயக்கக் கூடியது என்று உள்ளங்கை நெல்லிக் கனி போல் நன்கு தெரியும்போது அதை இன்றே, இப்பொழுதே செய்வதுதான் முறை. காலம் வரும்போது வரட்டும். காத்திருக்க வேண்டாம். நாம் இப்பொழுது அதற்கு வேண்டிய நல்ல சூழ்நிலையையாவது அமைத்து வைப்போம்.

ஆசன சிகிச்சையினால் பிணி விலகி விடுகிறது. அதுவும், எல்லா வைத்திய முறைகளினாலும் தீராத பல பிணிகள் வெகு சுலபமாக ஆசனங்களால் விலகுகிறது என்று அறிந்த ஆங்கிலேய பட்டம் பெற்ற டாக்டர்களும் இன்று ஆசனங்களைச் சிபாரிசு செய்யவும், ஏன்! அவர்களே கூடப் பயிலவும் செய்கிறார்கள். ஆங்கிலப் பட்டம் பெற்ற டாக்டர்கள் மாத்திரமல்ல. இன்று எத்தனையோ ஹோமியோபதி டாக்டர்களும், ஆயுர்வேத, சித்த, யூனானி வைத்தியர்களும் கூட, தாங்கள் யோக ஆசனங்களைச் செய்வதுடன் நில்லாமல், தங்களிடம் வரும் நோயாளிகளுக்கும் மருந்துடன் ஆசனங்களையும் செய்யும்படி சொல்லுகிறார்கள். எனவே இந்தக் கலை இன்னும் சில வருஷங்களில் மிக விரிவாய்ப் பரவிவிடும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

மக்கள் விழிப்படைந்து விட்டனர். அறிந்து கொண்டனர், ஆசனங்களின் மகிமையை. தம் சமயம் ஆசனங்களைப் பரவலாக அநேகர் செய்யத் துவங்கி விட்டனர். இதில் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது பேர் குணமும் அடைகின்றனர். அப்பேர்ப்பட்ட நிச்சயமான ஒரு பெரும் முறையாகிய யோகாசன சிகிச்சையானது அரசாங்க ஆதரவு பெற்று வைத்தியத்துக்காக நாடி வரும் ஆஸ்பத்திரிகளிலெல்லாம் வெறும் மருந்துகளை மட்டும் கொடுக்காமல், அவசியமானதற்கு மட்டும் மருந்து கொடுப்பது என்றும் கூட யோக ஆசன சிகிச்சை அளிப்பது என்னும் கொள்கையைக் கைக் கொள்ள வேண்டும் என்பதே என் ஆசை. அதாவது நம் வைத்தியசாலைகளெல்லாம் யோக வைத்திய சாலைகளாக மாற வேண்டும். ஆர்வத்தினால் நான் இவ்வாறு கூறுவதாக என்னைப் பயித்தியக்காரனாக்கலாம். ஆனால் உண்மை நிலைமையை ஆழ்ந்து நோக்கும் திறமுடையோர் இந்த என் யோசனையை ஆமோதிக்கத்தான் செய்வார்கள். பெரிய பெரிய அறிவாளிகள், டாக்டர்கள், வைத்தியர்கள் எல்லாம் இப்பொழுது ஒப்புக் கொள்ளத்தான் செய்கிறார்கள். யோகாசன விஷயங்களை எட்டிப் பார்க்காதவர்களும், செய்து பார்த்து அனுபவிக்காதவர்களும்தான் சிறிது முணு முணுக்கலாம். அவர்களும் சில காலமாவது ஆசனங்களைச் செய்து பார்த்து விட்டால் பிறகு அவர்களே தீவிரமாக இதை எல்லோரும் சிகிச்சையாகப் பெறும் வண்ணம் செய்ய வேண்டியதுதான் என்பார்கள்.

நோய் என்பது என்ன! அது ஏன் வர வேண்டும்! அதற்குக் காரணமென்ன! நோய்கள் என்பதே வராமல் இருக்க முடியாதா! அப்படி வந்தால் என்ன செய்ய வேண்டும்! எந்த முறையில் நோயைப் போக்குவது உத்தமம்! அந்த முறை சரியான முறைதானா! பொருத்தமான முறைதானா! என்ற இம்மாதிரி கேள்விகளைப் போட்டுக் கொண்டு, நன்கு சிந்தித்து அதன் சம்பந்தமாய் விடையை அறிந்து கொண்டால் எல்லோரும் யோகாசன சிகிச்சை முறை சரியானதுதான் என்பதை ஒப்புக் கொள்வார்கள்.

இது எல்லோருக்கும் சாத்தியமா! எல்லா விஷயங்களையும் எல்லோரும் அறிந்து கொள்ள முடியுமா! அதற்கு என்ன அவசியம் ஏற்பட்டு விட்டது! ஏதோ நோய் வந்தால் வைத்தியர்களிடம் போனால் போகிறது என்று கூறலாம்.

ஆனால் எல்லோரும் எல்லா விஷயங்களையும் சாங்கோபாங்கமாய்த் தெரிந்து கொள்ள முடியாது. அதற்கு நமது ஆயுளே போதாது. எவ்வளவு கற்றாலும், கற்றது கை மண்ணளவேயாகும் எனினும் வாழ்க்கைக்கு மிக முக்கியமான அவசியமான விஷயங்களை ஓரளவாவது தெரிந்து கொள்ள வேண்டியது மிக மிக அவசியமல்லவா! அதிலும் நமது உடலைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டியது மிக்க அத்தியாவசியமாகும். நமது உடல் அமைப்பு, அதன் வேலைகள், ஏதாவது

அசௌகரியம் ஏற்பட்டால் அதன் காரணத்தை அறியும் ஆற்றல் இருக்க வேண்டியது மிக முக்கியமானது. அப்பொழுதுதான் நமது வாழ்க்கையை உணர்ந்து சுகமாய், ஆனந்தமாய், துன்பம், துக்கமின்றி நடத்த முடியும். அப்படிக்கின்றி நம் உடலை மற்றவர்கள் வசம் ஒப்படைப்பது, நம் உரிமையை மற்றவர்களுக்குக் கொடுப்பதற்கு ஒப்பாகும். ஒவ்வொருவருக்கும் தன்னைப் பற்றியும், தன் உடலைப் பற்றியும், தனக்கு வந்த நோயைப் பற்றியும் அறியவும், சிந்திக்கவும் உரிமை வேண்டும். இதினுமா அடிமை மனப்பான்மை! தன் உடலைப் பற்றிப் பிறர் சொல்லுவதை எதிர் பார்ப்பது வெட்கக் கேடான விஷயம். எதிலுமே மர்மம், மூடுமந்திரம், ரகஸியம், வீண் கௌரவம் கூடாது. நோயாளி எதையும் மறைக்கக்கூடாது. பரிகாரம் செய்பவரும் மறைத்துக் கூறக்கூடாது. உண்மையில் அபாயகரமாய் இருந்து அதைப்பற்றி நோயாளிக்குத் தெரிந்தால் மேலும் அபாயம் நேரும் என்ற நிலையில் தவிர மற்றவைகளெல்லாம் ஒளிவு மறைவு என்பதில்லாமல் நோயாளி அறிய வேண்டும்.

இன்றைய வைத்திய உலகம் அப்படியில்லை. நோயாளியின் உடலில் இருப்பது என்ன நோய் என்று சொல்லப்பட மாட்டாது. எல்லாம் மூடுமந்திரமாகவே இருக்கும். சாதாரணமாய் மருந்துக் கடைகளில் கிடைக்கக்கூடிய மருந்துகளையே அநேக டாக்டர்கள் உருமாற்றிக் காசை அதிகம் வாங்குவார்கள். அந்த மருந்தின் பெயரைக்கூட அறிய முடியாது. அது மருந்துக் கடையில் ஏதோ இரண்டு ரூபாய்க்குக் கிடைக்கக் கூடியதாய் இருக்கும். அதே மருந்தை இவர்கள் உருமாற்றிப் பல இரண்டு ரூபாய்களாக்கி விற்பார்கள். எல்லாம் வயிற்றுப் பாடாய்ப் போய்விட்டதே தவிர உண்மையை விளம்புவார் மிகக் குறைவு.


"ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை"



1 மண்டலம் (48 நாள்)
பூஜை செய்தும்
ஆயுள் பூராவும் பலன் தரும்
வெள்ளி ரக்ஷை
ரூ. 43—12—0

ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை வேண்டியவர்கள், தங்கள் நியாயமான கோரிக்கைகளை எழுதி ரூ. 5-12-0 மணியார்டர் செய்யவும். மேற்படி தொகை வெள்ளி, விளம்பரம், தபால் செலவிற்குமாகத் தேவை. மீதி ரூ. 38/-ம் ரக்ஷை அணிந்த 108 நாளைக்குள் பலன் அடைந்து அனுப்பி வைக்கவும்.

N. B. *(1)* ஆர்டர் கிடைத்த 9-ம் நாள் ரக்ஷை பிரஸாதத்துடன் அனுப்பப்படும். (2) வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகை பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பவும். (3) V. P. P. கிடையாது. (4) அதர்மர்களும் நாஸ்திகர்களும் தடுக்கப்படுகிறார்கள்.

★

கோட்டமருதூர்
ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஜ்யோதிஷ ஆபீஸ்
அரகண்டநல்லூர் P. O. (S. A. Dt.)


அப்படிக் கெல்லாம் இல்லாமல் இந்த யோகாசன சிகிச்சையை எல்லோரும் அறியும் வகையில், அவரவர்கள் உடல் நிலையை அவரவர்களே உணர்ந்து சுயமாய் அவர்களே யோகாசன சிகிச்சையைச் செய்து கொள்ளக் கூடிய வகையில் இந்த யோகாசன சிகிச்சைக் கட்டுரைகளில் விளக்கலாம் என்பது என் அபிப்பிராயம்.

சிலர் இந்த அற்புதக் கலையைத் தம் சொந்த நலனுக்காகச் சிலவற்றை மறைத்தும், இல்லாத மகிமைகளைப் புகுத்தியும், தன்னையே சரணடைந்து, பணம் பணமாய்க் கொடுக்கிறவர்களுக்கு மட்டும் உண்மையான சிகிச்சையை அளித்தும் வருகிறார்கள். இவர்கள் சொல்லும் முறையிலேயே சென்றால் யோக ஆசனங்களால் ஒரு மகத்துவமும் இல்லை. எல்லாம் தன்னாலேயே ஏற்பட்டது என்று கூடச் சொல்லத் தயங்க மாட்டார்கள். அறிவு உலகம் மிக வேகமாய் முன்னேற்றம் அடைந்து வருகிறது. அதில் உண்மைக்குத்தான் இடமிருக்க முடியும்.

ஆங்கில வைத்தியத்தில் மக்கள் மாறு நம்பிக்கை கொண்டு விட்டார்கள். அதனால் டாக்டர்கள் என்ன மூடினாலும், மழுப்பினாலும் அதனால் அதற்கு ஒரு குறையும் ஏற்பட்டு விடாது. அதற்குப் பதில் மகிமைதான் அதிகப்படும். ஆனால் பல்லாயிர வருடம் ஒய்ந்து கிடந்து, இப்பொழுது தான் சிறிது தலைதூக்கி வரும் இந்த யோகாசனக் கலையைத் தம் சொந்த நலனுக்காக, அதை மற்றவர்கள் வளர்க்க விடாமலடக்க சிலர் முயற்சி செய்கிறார்கள். ஆனால் இவர்களைப் பற்றி உலகம் கவலையாது முன்னேறிக் கொண்டுதான் போகும்.

ஆசன சிகிச்சைதான் மற்றெல்லாச் சிகிச்சைகளைவிடச் சிரேஷ்டமானது என்று சொன்னேன். மற்ற முறைகளெல்லாம் மருந்துகளையே பிரதானமாகக் கொண்டு நோய்களைப் போக்குகின்றன. முதலில் மருந்துகளின் வேகத்தால் நோய் கலைந்து போனாலும், மருந்தின் வேகத்தால் மேலும் பல நோய்கள் வர ஏதுவாகின்றன என்பது பெரிய டாக்டர்களும் விஞ்ஞானிகளும் ஒப்புக் கொண்ட பழைய விஷயம். ஆனால் கஷ்டப்படும் நோயாளிக்கு வேறு மார்க்கமில்லாமல் மருந்தை உபயோகிக்க வேண்டியதாக இருக்கிறது. முதலில் உண்டான நோயிலிருந்து தப்பிக்கட்டும், அதன்பின் வருவதை ஒரு கை பார்ப்போம் என்ற பாவனையில் தான் இன்றைய வைத்திய உலகம் உணர்ச்சியின்றி சென்று கொண்டிருக்கிறது.

ஆனால் யோகாசன சிகிச்சையில் அப்படியல்ல. நோயைப் போக்குவதுடன் மேலும், மேலும், புதுவித நோய்கள் வராமல் தடுக்கும் சக்தியுண்டு. இதில் கெடுதிக்கே இடமில்லை. தவிர யோகாசன சிகிச்சை பெறும் நபர் யாராயிருப்பினும், அவர் தன் உடல் நோய் மட்டும் நீங்கினதாக உணர்வதில்லை. மனத்துக்கும் ஏதோ ஒரு புது உற்சாகம், சாந்தி, ஆனந்தம் உண்டாவதை அறியலாம். இதை அனுபவ பூர்வமாய் நோய்கள் வந்து யோகாசன சிகிச்சை மூலமாய் குணமானவர்கள் தான் அறிய முடியும். இந்த ஒரு புது மாறுதலை வேறு எந்த வைத்திய முறையினாலோ, சிகிச்சையினாலோ அடைய முடியாது. அது வெறும் உடலை மட்டும்தான் தற்கால நோயினின்று நிவாரணம் அளிக்கிறது. யோக சிகிச்சையானது உடல், மனம், ஆன்மா இவை அத்தனைக்கும் இதம் அளிக்கிறது. அதனால்தான் யோகாசன சிகிச்சையைப் போல உயர்வான, உன்னதமான, உகந்த சிகிச்சை வேறு எதுவும் இருக்க முடியாது என்று அறுதியிட்டுக் கூற முடிகிறது. *(தொடரும்)*




○ ● ○

"அழகிருக்கு, அந்தஸ்திருக்கு, குடித்தனப் பாங்கிருக்கு, என்றெல்லாம் சொல்லி இந்த அம்மா செய்த வேலை. ஒரு படிக்காத பெண்ணைத் தேடித் தேடி நம் தலையில் கட்டிவிட்டார்கள். பி. ஏ. பாஸ் செய்யாதவனுக் கெல்லாம், இண்டரும், எஸ். எஸ். எல். ஸி.யும் படித்த பெண்டாட்டி வாய்க்கிறாள். நம் துரதிர்ஷ்டம் ஒரு பட்டிக் காட்டுப் பெண்ணைக் கட்டி அழவைத்திருக்கிறது" என்று அலுத்துக் கொண்டே மேஜைமீதிருந்த காகிதக் கட்டுக்களைத் தொப் தொப்பென்று கீழே போட்டுக் கொண்டும், புஸ்தகங்களை மூலைக்கு ஒன்றாக எறிந்து கொண்டும் இருந்தான் கோபாலன். முக்கியமான ஒரு கடிதத்தை வைத்த இடம் தெரியாமல் தேடிக் கொண்டிருந்தான்.

"அது என்ன கடிதம்! நீலக் கவரா!" என்று நிதானமாகக் கேட்டாள் சாரதா, தன்னுடைய வேலையைக் கவனித்துக் கொண்டே.

"சாரதா! நீ பேசாதே. சொன்னால் உனக்குத் தெரிந்து விடுமோ! அடுப்புப் பற்றவைக்க எடுத்துக் கொண்டிருப்பாய். அதன் முக்கியம் உனக்கு எங்கே தெரியப் போகிறது! இங்கிலீஷா படித்திருக்கிறாய்!" என்று உறுமினான் கோபால்.

சாரதா பதிலே பேசவில்லை. பாத்திரங்களை ஒழித்துப் போட்டுத் தேய்க்க ஆரம்பித்தாள்.

"ஒவ்வொருத்தி புருஷன் வேலையில் எத்தனை ஒத்தாசையாக இருக்கிறாள்! டைப் அடித்துக் கொடுப்பதும், குறிப்பு எடுத்து வைப்பதும், கடிதம் எழுதுவதும் எவ்வளவு அழகாகச் செய்கிறார்கள். உன்னைப் போல் ஒரு ஜன்மம் இந்த உலகம் முழுதும் தேடினாலும் இருக்கமாட்டாள். என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளத்தான் வந்திருக்கிறாய். இல்லாவிட்டால்......"

சாமான்களைப் பார்த்து மூடிவிட்டு, சமையலறையை இழுத்துப் பூட்டி விட்டு, குழந்தைக்குப் பாலை எடுத்துக் கொண்டு கூடத்துக்கு வந்தாள் சாரதா. அலமாரியிலிருந்து, கசங்கிப் பிரிந்த ஒரு கவரை எடுத்து, "இது தானா என்று பாருங்கள். குப்பைக் கூடையில் கசக்கி உருட்டிப் போட்டிருந்தீர்கள். குழந்தை எடுத்து விளையாடிக் கொண்டிருந்தான். வாங்கி வைத்தேன்" என்றாள்.

பதிலே சொல்லாமல் வேண்டா வெறுப்பாக அதைப் பிடுங்கிக் கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தான் கோபாலன். அவன் தேடிய கடிதம் அதுதான். அவன் சொல்லாமலேயே சாரதா தெரிந்து கொண்டு விட்டாள். குழந்தை பாலுக்குப் பறந்தான். புகட்ட ஆரம்பித்தாள். பாலைக் குடித்த பின்னும் குழந்தை கை விடாது அழ ஆரம்பித்தது. அதனுடைய அழுகையால், தூங்கிக் கொண்டிருந்த ரகுவும் அரைத் தூக்கத்தில் எழுந்து கத்த ஆரம்பித்தான்.

"ஏன் இப்படிக் கத்த விடுகிறாய்! அந்தப் பக்கம் தூக்கிக் கொண்டு தொலையேன்" என்று சள்ளென்று விழுந்தான். "கோபு! கோபு" என்று வாசல் கதவு தடதடவென்று இடிக்கப்பட்டது.

கோபாலனின் கடுகடுத்த முகம் ஒரே வினாடியில் மலர்ந்தது. "யாருடா, மணியா!" என்று கேட்டுக் கொண்டே ஓடினான் கதவைத் திறக்க.

"ஆமாண்டா!" என்று கூறி வந்த நண்பன் அவனை அப்படியே கட்டிக் கொண்டான்.

"அடேடே! விடுடா! குரங்குப் பிடி பிடிக்கிறாயே. வலிக்கிறதுடா" என்றான் கோபு. பிடியை விட்ட மணி கோபாலனை ஏற இறங்கப் பார்த்து, "ஒரு சுற்றுப் பருத்திருக்கே! மனைவியின் சாப்பாடு பலம் போலிருக்கு!" என்று கூறிக் கொண்டே கூடத்துக்குள் நுழைந்தான்.

அழும் குழந்தையைத் தோளில் சாத்திக் கொண்டு எழுந்த சாரதா "நமஸ்காரம், வரவேணும். வீட்டில் எல்லாரும் சௌக்கியமா!"

என்று வரவேற்றான். ரகு தலைப்பைப் பிடித்துக் கொண்டு, "அம்மா! நீயும் என் பக்கத்தில் வந்து படுத்துக் கொள்" என்று பிடிவாதம் பிடித்து, முகாரி ராகம் பாட ஆரம்பித்தான்.

"எல்லாரும் சௌக்கியம்தான். ஏன் மாஸ்டர் கோபால் அழுகிறான்!" என்று கேட்டு மணி இரு பெரிய மாம்பழங்களை ரகுவிடம் நீட்டினான். ரகு அதை வாங்கிக்கொள்ள மறுத்துப் பழைய படியே முகாரி ராகம் பாடினான்.

"ஏண்டா! எந்த ரயிலில் புறப்பட்டாய்! எங்கே சாப்பிட்டதோ என்னமோ! சாரதா! சாதம் இருக்கா! இல்லாவிட்டால் சீக்கிரம் சமையேன்" என்றான் கோபாலன்.

"வேண்டாம். எனக்காக ஒன்றும் சமைக்க வேண்டாம். வரும்போது தான் டிபன் சாப்பிட்டேன். நிம்மதியாகப் படுத்தால் போதும்" என்றான் மணி. அழும் குழந்தைகளுடன் போராடிக் கொண்டிருக்கும் சாரதாவுக்கு அகாலத்தில் சிரமம் தர அவன் மனம் ஒப்பவில்லை.

"ராத்திரி நேரத்தில் சாப்பிடாது படுப்பார்களா! சமைக்க எத்தனை நாழியாகி விடும்!" என்று சாரதா சமையலறைக்குள் புகுந்தாள்.

குழந்தை ரகு பலமாகக் கதறினான்.

"ஏண்டா இப்படிக் கத்தறே! போடா உங்கம்மா கிட்டயே" என்று அவனையும் சமையலறையிலிருந்த சாரதாவிடம் கொண்டு வந்து விட்டு விட்டுச் சென்றான் கோபாலன்.

பேச உட்கார்ந்த மணியும் கோபாலனும் நேரம் போவது தெரியாமல் பேசிக் கொண்டிருந்ததில் ஆச்சரியமில்லை. இருவரும் பால்யத் தோழர்கள். ஒன்றாக அரிச்சுவடியில் சேர்ந்தவர்கள். பி. ஏ. முடியும் வரை பிரியவில்லை. அதன் பின் மணிக்கு வேலையாகி விட்டது. கோபாலன் எம். ஏ. க்குப் படிக்க ஆரம்பித்தான்.

கோபாலனின் விவாகத்துக்கு மணி வர முடியவில்லை. மேலதிகாரியின் திருவுள்ளம் அப்படியிருந்தது. லீவ் கிடைக்கவில்லை. நண்பர்கள் இருவருக்குமே சொல்லி முடியாத வருத்தம். படித்த மனைவி இல்லை என்ற தாபத்துடன் நண்பன் வராத துக்கமும் சேர்ந்து கோபாலனுக்கு அழுகையே வந்து விட்டது. "காதல் கல்யாணமாடா! என் மனைவி ஒரு பி. ஏ. வாக இருக்க வேண்டும். குறைந்த பட்சம் இண்டர் மீடியட்டாவது படித்திருக்க வேண்டும் என்ற உன் திட்டத்தைத் தவிடு பொடியாக்கிக் காற்றில் ஊதிவிட்ட எட்டாவது படித்த சாரதா ரொம்பக் கெட்டிக்காரியாக இருப்பாள் என்று நினைக்கிறேன்" என்று எழுதியிருந்தான் மணி.

"காதலும் கத்தரிக்காயும் பற்றி எரிந்தது. எல்லாம் இந்த அம்மாவால் வந்த வினை" என்று எரிந்து விழுந்தான் கோபாலன்.

தன்னைப்போல் மணிக்கும் ஒரு படிக்காத பெண் வந்துவிடக் கூடாதே என்று கோபாலன் கவலைப் பட்டான். மணிக்கு மனைவி தேடுவதில் அவனுக்கு அதிக சிரத்தை இருந்தது. கௌரி அவன் மாணவி. அவள் கல்லூரியில் சேர்ந்ததிலிருந்து அவளை அவன் அறிவான். கௌரி நல்ல ரஸிகை. சதா சிரித்த முகமாக இருப்பாள். படிப்பில் மிகவும் கெட்டிக்காரி. மணிக் கணக்கில் சுவாரஸ்யமாகப் பேசுவாள். சாரதாவையும் கௌரியையும் ஒப்பிட்டுப் பார்த்து ஏங்குவான். சலசல வென ஓடும் நீரோடையைப் போல் சுறுசுறுப்புடன் சரளமாக ஆங்கிலம் பேசிக்கொண்டு பழகும் கௌரி எங்கே! கேட்டதற்குப் பதில் சொல்லிக்கொண்டு பூனைபோல் வளைய வரும் சாரதா எங்கே! என்று பெருமூச்சு விடுவான். மணியாவது நல்ல மனைவியை அடைய வேண்டும் என்று எண்ணிய கோபாலன் மணி – கௌரி விவாகம் நடக்க முயன்று வெற்றி பெற்றான்.

* * *

"கௌரி இங்கிலீஷிலும் டொமஸ்டிக் சயன்ஸிலும் முதல் வகுப்பில் தேறி விடுவாள் என்று நான் எதிர்பார்த்ததுதான். அவளைப் பாராட்ட நேரிலே வரவேண்டுமென்று பார்த்தேன் முடியவில்லை" என்றான் கோபாலன்.

"சமையல் ஆகி அரைமணி நேரமாகிறதே. சாப்பிட்டுவிட்டுப் பேசலாமே" என்று மூன்றாவது தடவையாகக் கூப்பிட்டாள் சாரதா.

"நீயும் உட்காருடா!" என்றான் மணி. இருவரும் பேசிக்கொண்டே சாப்பிட்டு எழுந்திருக்க மணி பதினொன்று ஆகிவிட்டது. கையை அலம்பிக் கொண்டே மணி, "பொடிமாசும் சாம்பாரும் அபாரம். பச்சடி ரொம்ப ஜோர். உங்கள் சமையலைச் சாப்பிட்டு விட்டுக் கோபால் உடம்பு பருப்பதில் அதிசயமில்லை" என்றான் மணி.

சாரதா வெட்கத்துடன் சிரித்துக் கொண்டாள்.

மணி விடியற்காலையில் புறப்படுவதாகக் கூறினான். மறுநாள் அவனுக்குக் காரியாலயமிருந்தது. காலைப் பலகாரத்துக்குப் புளியவலுக்கு அவல் இடித்து ஊற வைத்துவிட்டுச் சாரதா படுக்கச் செல்லும்போது நடு இரவு ஆகிவிட்டது.

விடியற்காலையில் சுடச்சுட வெந்நீர் ஸ்நானமும், ஆவி பொங்கும் காப்பியும், ருசியான புளியவலும் மணியை மெய் மறக்கச் செய்தன. "கோபால்! அம்மா நாளைக்குத் தஞ்சாவூர் போகப் போகிறார்கள், அண்ணாவிடம். அடுத்த வாரம் சாரதாவையும் அழைத்துக் கொண்டு ஊருக்கு வாயேன்" என்று அன்புடன் அழைத்தான் மணி.



'' அப்படிச் சொல்லு. ஐயா முதல் முதலாகத் தனிக் குடித்தனம் நடத்தப் போகிறாராக்கும்' அடுத்த வாரம் நாலு நாள் சேர்ந்தாற்போல் கல்லூரி கிடையாது. அங்கே வந்து விடுகிறேன். கௌரியிடம் சொல்'' என்றான் கோபாலன்.

சாரதா இல்லாமல் தனியாகவே புறப் பட்டான் கோபாலன். அவனுக்கு நாலு பேருடன் நாகரிகமாகப் பழகவா தெரியும்!

''வாங்கோ, புரொபசர் சார்! ஏன் மிஸஸ் சாரதா வரவில்லை!'' என்று வரவேற்றாள் கௌரி.

'' சாரதா வரவில்லையா !'' என்றான் மணி.

'' குழந்தைகளை எடுத்துக் கொண்டு வரவும் போகவும் தொல்லை என்று வரவில்லை. 'கங்கராஜுலேஷன்ஸ்' கௌரி! நீ முதல் வகுப்பில் பாஸ் செய்து விடுவாய் என்று நான் சொல்லவில்லையா!'' என்று கோபாலன் கௌரியைப் பாராட்டினான்.

மணியும் பேச்சில் கலந்து கொண்டான். இலக்கியத்திலிருந்து சரான் அரசியல் வரை மூவரும் பேசி அலசி விமர்சனம் செய்தார்கள். கௌரி தன் அபிப்பிராயங்களை வெகு அழகாகவும், திடமாகவும் கூறினாள். நேரம் போனதே தெரியவில்லை. வெய்யில் 'கன்'னென்று ஏற ஏறக் கோபாலனுக்குப் பசி வயிற்றைக் கிள்ளியது.

'' கௌரி! பேசிக்கொண்டே இருக்கிறாயே சமையல் ஆகிவிட்டதா !'' என்று கேட்டான் மணி.

'' ஐயையோ ! இன்னும் வரவில்லை. குமட்டியில் அரிசி களைந்து வைத்துவிட்டு, 'ஸ்டவ்'வில் பருப்புப் போட்டுவிட்டு வந்தேன். என்னவாச்சோ !'' என்று ஓடினாள் கௌரி. மணியும் கூடவே போனான். கோபால் பசி தாங்காமல் களைப்புடன் சோபாவில் சாய்ந்தான்.

பருப்புக்குத் தண்ணீர் பற்றாமல் தீய்ந்து கிடந்தது. குமட்டி நன்றாகக் கனியவில்லை. சாதம் அடியில் தீய்ந்து மேலே ஊறிய வெள்ளை அரிசியுடன் காட்சியளித்தது.

'' தண்டம், தண்டம்! எடுத்து எறிந்து விட்டு வேறு சாதம் வை. இனி மேல் பருப்பு எப்பொழுது வேகிறது! கறி கூட்டு எப்பொழுது ஆகிறது! காலையில் டிபன்கூட இல்லை. மணி பத்தரை யாச்சே'' என்று எரிந்து விழுந்தான் மணி.

'' நான் என்ன செய்யட்டும்! ஜலம் நன்றாகக் கொதித்த பின் தான் அரிசியைக் களைந்து போட்டேன். ஒன்றரை உழக்கு ஜலம் விட்டுக் கொதித்த பின் அரை உழக்குப் பருப்புப் போட்டேன். இப்படியாகி விட்டதே'' என்றாள் கௌரி.

'' சரி. சீக்கிரம் ஒரு ரசம் சாதம் செய்து விடுகிறேன்'' என்றாள்.

'' ஆமாம்! நடு ராத்திரியில் அகஸ்மாத்தாகப் போன எனக்குப் பொடிமாஸும், சாம்பாரும் பச்சடியும், பாயாசமும், அப்பளமுமாகப் போட்டுத் திணற அடித்து விட்டாள் சாரதா. நீ வீடு தேடி வந்த உன் வாத்தியாருக்கு ரசம் சாதம் செய்து போட்டு விடு. பெரிய டின்னர் சாப்பிட்ட திருப்தி அடைந்து விடலாம்'' என்றான் மணி.

எண்ணெய் புகை கமறிற்று. '' சட்! நாற நகரு. ஒரு அப்பளாம் கூடப் பொரிக்கத் தெரியாமல் எப்படித்தான் வளர்ந்தாயோ'' என்று மணி அதட்டினான். கௌரி இலேசாக விம்மினாள்.

கோபாலுக்கு. '' ஏண்டா வந்தோம்'' என்று ஆகிவிட்டது. '' கோபால், வெந்நீர் ரெடி. குளிப்பதற்கு எழுந்து வா !'' என்று அழைத்தான் மணி.

வெந்நீர் அறைக்குப் போகும் வழியில், மணி வேஷ்டியைத் தூக்கிக் கட்டிக் கொண்டு அம்மிக் கல்லில் ஏதோ அரைத்துக் கொண்டிருந்தான்.

'' அடடே! இந்தவேலை யெல்லாம் கூடத் தெரிந்து கொண்டிருக்கிறாயா!'' என்றான் கோபாலன் ஆச்சரியத்துடன்.

'' உன் மாணவியைக் கல்யாணம் செய்து கொண்டதற்கு இது என்ன, அடுப்பு மெழுகக் கூடத் தெரிந்து கொள்ள வேண்டியதுதான்'' என மணி அலுத்துக் கொண்டான்.

ஒரு வழியாக மணியும் கோபாலனும் சாப்பிட உட்கார்ந்த பொழுது மணி பன்னிரண்டு அடித்தது. கௌரி பரிமாறினாள். புடவையின் கொசுவம் இழை புரண்டு காலைத்தடுக்க, செருகியிருந்த புடவைத் தலைப்பு நடுவில் நடுவில் அவிழ்ந்து பறக்க, நெற்றியில் வியர்வை அரும்பப் பெருமூச்சு விட்டு விட்டாள் கௌரி. ரசம் பரிமாற வந்த கௌரி சூடு தாங்காமல் பாத்திரத்தை நழுவ விட்டாள். 'ஜணர்' என்று விழுந்து உருண்டது பாத்திரம். ரசம் கொட்டி அறை முழுவதும் சிதறி பரவியது.

''என்ன பெண் நீ. என்ன படிப்புப் படித்தாய்! கோபால் ! டொமஸ்டிக் சயன்ஸிலும், இங்கிலீஷிலும் முதல் வகுப்பு வாங்கி விட்டாள் என்று பூரித்துப் போனாயே. உன் மாணவியின் லட்சணத்தை நீயே பார். நாலு வருஷம் உன்னிடம் படித்ததற்கு நாலு மாசம் சாரதாவுடன் இருந்திருந்தாலும் உபயோகமாக இருந்திருக்கும். வீட்டு வேலை பழகி யிருக்கலாம். கணவனிடம் எப்படி நடந்து கொள்ளுவது என்று தெரிந்து கொண்டிருக்கலாம். குடித்தனம் என்ன என்பதைப் புரிந்து கொண்டிருக்கலாம். ஒன்றுக்கும் உபயோகமில்லாத இந்தக் கல்லூரிப் படிப்பால் அவள் கற்றுக் கொண்டது, தான் படித்து விட்டோம் என்ற மமதையும், அநாகரிக சாமான்களுக்குப் பண விரயமும் தான் நான் கண்ட பலன்'' என்றான் மணி. கௌரி கண்ணீர் வடித்துக் கொண்டே மோர் வார்த்தாள்.

இருவரும் சாப்பிட்டு முடித்தனர். இரவுச் சாப்பாடு என்ற கண்டத்தை எதிர்பார்த்துக் கொண்டு



மேலும் அங்கிருக்கக் கோபாலன் விரும்பவில்லை. மேலும் மணி கூறியது அவன் மனசில் பட்டு விட்டது. தன் மாணவியாக இருந்ததற்குக் கௌரி படும் சுகம்தான் என்ன! சாரதாவைப் பற்றிய அவன் அபிப்பிராயமும் மாறி விட்டது.

ரயில் பிரயாணம் முழுதும் கோபாலன் சாரதாவை நினைத்து உருகினான். "பாவம்! சாரதா படிக்கவில்லை என்ற ஒரே காரணத்திற்காக அவளை எப்படியெல்லாம் வெறுத்தேன்! எத்தனை கோபித்துக் கொண்டிருப்பேன்! வாயைத் திறந்திருப்பாளா! அழும் குழந்தைகளை வைத்துக் கொண்டு தினந்தோறும் நேரம் தவறாமல் என் ஒவ்வொரு சௌகரியத்தையும் கவனிக்கும் அவள் திறமையை நான் கொஞ்சம் கூடத் தெரிந்து கொள்ளாம லிருந்தேனே!" என்று எண்ணித் தவித்தான் கோபாலன்.

"வர நாலுநாள் ஆகும் என்றீர்களே! ஏன் வந்து விட்டீர்கள்! உடம்பு சரியில்லையா!" என்று கவலையுடன் விசாரித்தாள் சாரதா.

அவள் அன்பு கனிய விசாரித்தது அவன் காதில் தேன்மாரி பொழிந்தது. அவன் கண்முன் ஒரு கணம் கௌரி தோன்றி மறைந்தாள். சாரதா தெய்வம்போல் காட்சியளித்தாள். இதுவரையில் அவன் மனத்தில் கல்லூரிப் படிப்பில் நிறைந்திருந்த அறியாமை அழிந்து மறைந்தது.

"சாரு! நான் பெரிய முட்டாள். என்னை மன்னித்துவிடு. நீ படிக்காதவள் என்று உன்னை ரொம்பக் கேவலப்படுத்தி விட்டேன். உன் மனம் புண்படப் பேசியதை எல்லாம் மறந்துவிடு. நிழலருமை வெய்யிலில்தான் தெரியும் என்பது போல், உன் குடித்தனப்பாங்கின் பெருமை, வாழ்க்கைக்கு உதவாத கல்லூரிப் படிப்புப் படித்துவிட்டுத் திண்டாடும் கௌரியைப் பார்த்தபின் தான் எனக்குத் தெரிந்தது" என்றான் கோபாலன், சாரதாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு.

அதற்குள் தபால்காரன் ஒரு கவரைப் போட்டுவிட்டுப் போனான். கோபாலன் கவரைக் கிழித்துப் பார்த்தான். அது சாரதா மெட்ரிகுலேஷன் தேறியதற்குச் சர்டிபிகேட்!

சந்தோஷத்தாலும், ஆச்சரியத்தாலும் பேச முடியாமல் திணறினான் கோபாலன். "இத்தனை தொல்லைகளிலும் நீ எப்பொழுது படித்தாய்! எங்கே பரீட்சை எழுதினாய்! படிக்கிறேன் என்று கூடச் சொல்லக் கூடாதா!" என்றான்.

"பட்டணத்திற்குப் போய் அக்கா வீட்டில் ஒரு மாசம் 'முகாம்' போட்டது எதற்கு என்று நினைத்திருக்கிறீர்கள்! பரீட்சை எழுதத்தான்!" என்று குறும்பாகச் சிரித்தாள் சாரதா.

"சாரு! நீதான் பெண். தமிழகத்தின் தாய்க்குலத்தில் வந்த உத்தமமான பெண்" என்று உணர்ச்சியுடன் கூறி மகிழ்ந்தான் கோபாலன்.

# பொழுது புலர்ந்தது!

"சுகபோகம் நிறைந்த நாகரிக சமூகம் என்று கருதுகிற ஒரு கூட்டத்தில் கலந்து கொள்வதற்கு அனுமதிச் சீட்டுப் போன்றது இப் படிப்பு" என்பது மெக்காலே கல்வி பற்றிக் காந்தியடிகளின் கருத்து. அடிகள் குறிப்பிடும் இந்நாகரிக சமூகத்திலே உழைப்பிற்கு இடம் கிடையாது. உழைப்பது கேவலம் என்று கருதும் கூட்டம் அது. எனவேதான் காந்திமகான் கல்வியிலே புரட்சி காண விரும்பினார்.

"செலவு தந்தைக்கு ஓர் ஆயிரஞ் சென்றது :
தீதெனக்குப் பல்லாயிரஞ் சேர்ந்தன :
நலம் ஓர் எள்துணையுங் கண்டிலேன், இதை
நாற்பதாயிரங் கோயிலிற் சொல்லுவேன்"

என்று மகாகவி பாரதி கூறும் சொற்களிலே அடிமைக் கல்வி இருளின் கொடுமை நன்கு புலப்படுகிறது. அந்த இருள் இப்பொழுது நீங்கி விட்டது. பொழுது புலர்ந்து விட்டது. இனி கல்வி உலகம் பகல் ஒளியிலே ஒளிவீசித் திகழும். புதுமுறைக் கல்வியானது காந்திமகானின் ஆதாரக் கல்விக்கு அடிப் படையாக இருப்பது மட்டுமின்றி மாணவ சமூகத்திடையே உழைப்பின் மேன்மையையும் அறிவுறுத்துவது குறிப்பிடத் தக்கதாகும்.

தமிழ் பேசும் உலகமறிந்த பழங் கதை ஒன்றுண்டு. ஒரு குடியானவனுக்கு மூன்று குமாரர்கள் இருந்தார்கள். மூவரும் முழுச் சோம்பேறிகள். நகத்திலே மண் படாமல் சுகமாக வாழ்வதுதான் நாகரிகம் என்று கருதியவர்கள். எனவே தங்கள் நிலத்தை உழுது பண்படுத்தவுமில்லை, பயிரிடவுமில்லை. தந்தையின் புத்திமதிகள் விழலுக்கு இறைத்த நீராயின. என்ன தந்திரம் செய்யலாம் என்று குடியானவன் ஆலோசித்தான். கடைசியாகக் குடியானவன் மரணப் படுக்கையில் கிடந்தான். அச்சமயத்தில் அவன் தன் குமாரர்களைக் கூப்பிட்டு "என்னருமைப் பிள்ளைகளே! எனக்கு மரண காலம் சமீபித்து விட்டது. நான் பல காலமாகச் சேர்த்து வைத்த பணத்தை நமது வயலில் புதைத்து வைத்திருக்கிறேன். நீங்கள் வயலை ஆழமாகத் தோண்டிப் பார்த்தால் கிடைக்கும்" என்றான். இதைக் கேட்ட குமாரர்கள் மூவரும் தங்கள் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு ஆளுக்கொரு புறமாக வயல் முழுவதையும் ஆழமாக வெட்டி விட்டார்கள். ஆனால் புதையல் கிடைக்கவில்லை. எனவே வேறு வழியின்றி நிலத்தைச் சமப்படுத்திப் பயிரிட்டார்கள். எந்த ஆண்டிலும் விளையாத விளைச்சல் விளைந்தது. தந்தை கூறிய உண்மையை அறிந்து கொண்டனர்.

அதே போன்று உழைப்பை மதியாதிருக்கும் நம் நாட்டு மக்களுக்கு உழைப்பின் பெருமையை உணர்த்தவே தம் தள்ளாத வயதில் ராஜாஜி புதுமுறைக் கல்வியைப் புகுத்தி யிருக்கிறார். இதில் சூழ்ச்சியோ சுயநலமோ கிடையாது.

சொக்கப்பாளையம்
16—7—53

நி. லட்சுமணன்
(உபாத்தியாயர்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10

# "எனக்குத் தெரியும்

## லக்ஸ் டாய்லட் சோப் உங்கள் சருமத்தையும் எழிலோங்கச் செய்யுமென்று."

இவ்வாறு கூறுகிறார்

## மாலதி

மாலதி கூறுவதாவது: "இந்த சுத்தமான, வெண்மையான சோப் என் சருமத்திற்கு அளிக்கும் நறுமணத்தை நான் மிகவும் விரும்புகிறேன். சோபைமிக்க சரும அழகைப்பெற நான் செய்வதுபோல் நீங்களும் செய்யுங்கள். உங்கள் சருமத்திற்கு லக்ஸ் டாய்லட் சோப்பின் தினசரி பாதுகாப்பை அளியுங்கள்."




## லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 353-X30 TM

**REGD. NO. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*

தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள
கிருமிகளிலிருந்து உங்கள் ஆரோக்கியத்தைக்
காப்பாற்றிக்கொள்ளுங்கள் ...



லைப்பாயின்

பாதுகாக்கும்
நுரையினால்!




நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலுங்கூட, தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளின் அபாயத்துக்குள்ளாக நேரிடும். லைப்பாய் சோப் உபயோகித்துத் தவறாமல் ஸ்நானம் செய்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். லைப்பாய் சோப்பின் பாதுகாக்கும் நுரை அழுக்கிலிருக்கும் கிருமிகளை விரட்டுகிறது. உங்களை நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.



# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான கிருமிகளிலிருந்து நுரை உங்களைக் காப்பாற்றுகிறது

L. 227A-50 TM